உ

கடவுள் துணை.

# கைவல்ய நவநீதம்

## மூலமும் - உரையும்

இஃது

நாராயணதேசிகர் மாணாக்கராகிய

**தாண்டவராயசுவாமிகளால்.**

செய்யப்பட்டமூலமும்

அதிற்கிணங்கத்

திருத்துருத்தி-காபாத்திரசுவாமிகள்பரம்பரைக்குரிய

நாகப்பட்டணம்

அருணாசலசுவாமிகள்மாணாக்கராகிய

பிறைசை

**அருணாசலசுவாமிகளா**

செய்யப்பட்ட-உரையும்

இஃது

திருவெண்காடு

**பாலசுப்பிரமணியசுவாமிகளால்**

பார்வையிடப்பட்டு

காவாந்தண்டலம்

**பாலசுந்தரமுதலியாரால்.**

பரமசிவமங்கலம்

**முனிசாமிமுதலியார்**

அவர்களது

சகலகலாவர்த்தனி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

௧௮௮௨ வரு

1882

## விளம்பரம்.

இதனுல்யாவருக்கு மறிவிப்ப தியாதெனில் சென்னப்பட்டண பெத்துநாயகன் பேட்டை கிருஷ்ணுங்குளத்துக்கடுத்த வெங்கையர் [illegible] கீழண்டைவாடையில் - உ௭ - வது நெம்பர்வீட்டில் புஸ்தகவிய பா [illegible] சயபும் காவாந்தண்டலம் பாலசுந்தர முதலியாரிடத்தில் பலவி தமிழ் புஸ்தகங்களும் தெலுங்குபுஸ்தகங்களும விலைசாசமாய் பெற்று கொள்ளலாம்.

இப்படிக்கு

கா-பாலசுந்தரமுதலியார்.

உ

## உரைச்சிறப்புப்பாயிரம்.

சீர்வளர்பிரமசிருஷ்டியின்முனமே
யேர்வளர்சத்தாயிலங்குறுபிரமம்
பாமுலகுயிரொனப்படும்பொருளெவற்றினு
முரணுரு அச்சுசாதிமுதலியபேத
மற்றெளிர்பாமாகாசசுயம்புவா
யுற்றதன்னிலைமையினேரிறைகுறையா
தெறிதிரைக்கரத்தாலினமணிகொழிக்குஞ்
செறிபுனற்பொன்னிசூழ்செம்பியநாட்டிற்
பொன்னிலத்தவரிறிபொற்புறுபடியென
நன்னிலைமடமார்நன்னிலமதனிற்
செந்தணலோம்புந்திறங்கியாதுய
ரந்தணர்குலத்தினவதரித்தருளிய
நாராயணகுருநான்மலர்ப்பதத்தைப்
போாதவனவருள்பெற்றிடுமதனுன்
முற்றுணர்தாண்டவமூர்த்தியனுபவப்
பெற்றியினுலகோர்பேரின்பமடையக்
கிளரும்வேதாந்தக்கிரோநதியைத்
தளர்வறுசமாதித்தாழிநிறைத்திட்
டகமுறுவிசாரவனலினுற்காய்ச்சி
மகிழ்குருவாக்கியமதத்தாற்கடைந்து
ஞானகைவல்யநவநீதத்தை
யானபோன்மினளித்தனனதனை
யெளிதினில்யாவருமின்புடன்றுய்க்க
வொளிர்மணக்கிருதமாயுரைசெய்விக்கும்படி
சகவாழ்வினைத்துஞ்சத்தியமலவெனத்
திகழுறுமலைகான் சென்றுபல்தவத்தோ
ருடனுறைந்துடலொறுத்துணர்வுறப்பட்டினத்

தடிகளெனத்துஉறந்தாறுறைகாசியை
நாடியாத்திரைசெயுநாட்டுக்கோட்டைப்
பீடுறுமருஞ்சலப்பெருந்தவத்தோ
னருளியமொழியினையன்புடனுட்கொள்
டருளெனநிலமகட்கணிகலையான
நிலைகடல்வயிற்றினிரப்பிற்பற்பல
சலைகடற்றன்னைக்கருத்துளடக்கிய
வகத்தியமுனிவாழ்பொதியமும்பொதிய
நகத்துறுசந்தனவாமகிலுங்கொடு
நீர்வருபொருனையுநிகழுமந்நீரா
லேர்பெறுச்செந்நெற்கரும்பெனக்கன்னல்
கமுகெனக்கமுகுந்தெங்கெனத்தெங்குதா
னமுதுகுமெழிலிக்கானகாவென்னத்
திகழ்வுறவளங்களுஞ்சேர்ந்திணிதோங்கும்
புகழ்பெறுபாண்டிப்புத்தேனாட்டிற்
களைகளைகடைசியர்கண்ணொடுறழுக
மளைவுறுசாலையையம்புயமீது
புல்லிதழ்க்குவளைபூத்ததென்றதனை
வல்லில்புறக்கையால்வவ்வுறக்கண்டாங்
குழத்தியர்புன்னகைக்கண்டிடவயங்கி
புழவர்கண்ணுறுமொனபனைசூழும்
வாதவூரடிகண்மதிப்புருவாசப்
போதபூரணனோர்பூசானுகி
குருந்தடியமர்ந்தருள்கோதில்பெருந்துறை
மருங்கிற்பளிங்குமேன்மாடத்துலவு
மின்னார்முகமதிதனைவிண்மதிதான்
றன்னாராசுதனைக்கொளுமொன்னல
னொன்னக்கலங்கியேங்குறுமமயத்
தன்னார்அந்தலாவெனக்கண்டு
பயமற்றேகுறும்பான்மையுமறையவர்
வயமுறுமாசர்வணிகர்சூத்திரர்முறை
மன்னுமாவித்திராவயலெனுநகரோன்
பொன்னிசூழ்பூம்புகார்வணிகர்குலோத்தமன்
நாரியர்மனங்கண்ணையமுறநாடுஞ்



சிரியல்வேளிற்சிறந்தநல்லெழிலான்
மாலைவண்டுணுநறுக்காந்தளுநவமணி
மாலையுமார்பில்வயங்குவெண்கவிகையான்
அறிஞர்நல்குரவெனுமக்கினிதணியப்
பொழிவநஞ்சொரியுநற்புயல்கரமுடையான்
சித்திதுசடமீதென்றவைதேர்ந்து
முத்தியைப்பெறமுயன்மூதறிவுடையோ
னில்லறமதனிலிருந்துமெய்த்துறவே
நல்லறமெனவேகாந்தத்தைநண்ணி
சாதுசங்கத்தொடுசாத்திரார்த்தங்களை
மூதுணர்வுறநிதமோதிநன்மோன
நிலையினென்றைம்புலநெறிச்செனுமனதை
யலைவுறுதடக்குமடைக்கியப்பறிஞன்
ஈனமிடுங்கருத்தானெனுமால்கேட்பச்
சான்றோரனுபவச்சாப்ரதாய்த்தழீஇத்
தகைபெறும்பண்ணுறக்கருத்தையுந்தனது
சகசானந்தமுந்தழுவியவனலா
லுருக்குமவ்வுரையிறகுயர்பரானந்த
இருதமெனப்பெயர்கண்டுகிளத்தினன்
விண்ணவர்முதலோர்வீடுறுமெய்த்தவ
நண்ணுறவந்துறுங்காவிரிநாட்டிற்
றிருத்துருத்தியினோர் தேசிகவாசா
யருமறைமுடிவாமாதனத்திருந்து
சித்தியாங்குருநிலமன்னனாச்செயித்து
முத்திமாவுலகாண்டிடமுடிசூடு
மிந்திராபிடத்தெழிற்காபாத்திர
சந்தானடிமுடிசூடியதெத்தாத்
திரயனடிபெறுஞ்செங்கமலன்றன்
மருவுறுநாகையின்மன்னுபோதிரு
னகோசாசயம்புவாகியவோமுதல்
சுகோதயுருவாய்த்தோன்றருணசலக்
குரவனடிமுடிகொண்டடியவர்க்குப்
பாவுணர்வாம்பொருள்காட்டுமெய்ப்பாணு
வோதருமுவகைவிளக்குமுவாமதி

## உரைச்சிறப்புப்பாயிரம்.

சாதனமொன் றுமிலாத் தமியேனையு
மோர்பொருளாகவுங் கையிற்கூட்டிச்
சிர்பதந்தலைமேற் றிகழ்வுறச்சூட்டி
யொருமொழியமுதையுள் ளூறவூட்டி
நிருவிகற்பாங்கநிட்டையினிறீஇ
யிருசொரூபானுபூதியைவிளக்கிச்
சகசானந்தந்தலைமீக்கொண்டு
சும்மாவிருக்கச்சுகமெனவருளிய
வெம்மானெழிலுற்றிலங்கும்பிறையை
அருணசலச்சுவாமிகளெனத்
திருநாமம்பெறுந்தேசிகோத்தமனே.



உரைச்சிறப்புப்பாயிர - முற்றிற்று:

இஃது இந்நூலுரையாசிரியர் மாணாக்கராகிய பாரிப்பாக்கம் முனியப்பமுதலியாரால் செய்யப்பட்டது.

### கடவுள்வணக்கம்.

நிருவிகற்பசமாதியினின்றெழும்
பொருவிலானந்தபோதனைப்பேணுவா
மொருமைமுத்தியுதவுகைவல்லிய
வருமைநூற்கெனுநின்றுரையாற்றவே.

### அருளிறைவணக்கம்.

ஒளிநிறைந்தவுணர்வின்பொருளையே
கனிகொண்மானிடவுருக்காட்டியிங்
கெளிதினுகைவந்தென்னையெனக்கரு
ளளிமலர்ப்பதத்தையனையேத்துவாம்.

இஃது - இவ்வுரையாசிரியர்செய்தது.





ஓம்

சிவமயம்.

# கைவல்யநவநீதம்,

## மூலமும் - உரையும்.



முதலாவது.

## தத்துவவிளக்கப்படலம்.



### பாயிரம்.

அவதாரிகை.

வடநூலாராய்ச்சியில் வல்லமையுள்ள விந்நூலாசிரியர் தாமடைந்த சுவானுபூதிப் பிரத்தியட்சத்தை யுலகஞ் சளுவிலடைந் தானந்தாந்தமா கும்பொருட் டருளினாற் சொல்லப்புகுந்த விந்நூலினிறுமுடிய வதன ந்தாங்கமான பிரஞ்ஞானம் பிரமமென்னு மிருக்குவேத மகா வாக்கியார்த் தமாக விளங்கு மத்துவிதஸ்வ ரூபத்தை விலட்சண மாகவுஞ்சலட்சண மாகவுந் துதிப்பான் றொடங்கி இச்செய்யுளிற்சமாதியின் கண்ணு தயமா ன விலட்சணமாகிய கூடஸ்த பிரமத்தைத் துதிக்கின்றார்.

பொன்னிலமாதராசை பொருந்தினர்பொருந்தாருள்ளந்
தன்னிலந்தரத்திற்சீவ சாட்சிமாத்திரமாய்நிற்கு
மெந்நிலங்களினுமிக்க வெழுநிலமவற்றின்மேலா
நன்னிலமருவுமேக நாயகன்பதங்கள்போற்றி.

(இதனதுபதப்பொருள்.)

பொன்-பொன்னினிடத்தும், நிலம்-மண்ணினிடத்தும், மாதர்-மடவா ரிடத்தும், ஆசைபொருந்தினர் - ஆசையுள்ளவஞ்ஞானிகளும், பொருந் தார்- நிராசையுள்ள ஞானிகளுமாகிய விவர்களது, உள்ளந்தன்னில்-இத யாம்பரத்தில், அந்தரத்தின்- நான்கு பூதங்களிலும் - நிறைந்திருக்கின் றவர்காயத்தைப்போல, சீவசாட்சிமாத்திரமாய்- கூடஸத சைதன்யமா த்திரமாக, நிற்கும்- நிறைந்திருக்கின்ற, எந்நிலங்களிலும்-எவ்விதமான நிலைகளிலும், மிக்க-மேலாய், எழுநிலமவற்றில்- ஞானபூமிகளேழினுள் மேதாநன்னிலமருவும்- முடிவாகிய துரியபூமியிற்பொருந்திய, ஏகநாயக ன்- ஒன்றாகியபிரமசைதன்னியத்தின், பதங்கள் போற்றி-திருவடிகளை வணங்குவாம்-என்றவாறு.

(பதசாரம்.)

சகலசமயங்களுக்கு மேலானது ஞானபூமியென்பார்; எங்நிலங்களினுமிக்க வெழுநிலமெனவும், அவைகளின்முடிவானது துரியபூமியென்பார் நன்னிலமெனவும்; அதனிடமாக விளங்குகின்றது துரியாதீதமென்பார்வு கநாயகனெனவும், அஃதேதுரியஸ்வரூபமாய்ச் சொரூபமுதல் ஸ்தம்பபரியந்தஞ் சர்வவியாபகமாய் வியாபித்து விளங்குவதென்பார் (பொன்னிலமாதாரசை பொருந்தினர் பொருந்தாருள்ளந், தன்னிலந்தாத்திற்சிவசாட்சிமாத்திரமாய்நிற்கு) மெனவும் யாவர்க்குஞ் சைதன்னியத்தின்றற்பிரகாசமான கூடஸ்தபிரமமே யிடமென்பார் பதங்களெனவும், அவைகளினயிக்கியமே யத்துவிதமென்பார் - போற்றியெனவுங்கூறினர்' பொன்னிலமாதலொன்பது,இச்சையை விளைப்பதற்குக்காரணமான வீடணுதிரயமெனக்கொள்க புத்திரேடணை என்பதை யவனுரிமையிற்பெறுவதாகிய வாசின்மேல் வைத்துக்கூறினர்.

இதன்ருற்பரியம்.

அகோசரமான நிரதிசயானந்தவஸ்து கோசரிக்குமிடத்துப் பூர்ணனந்தமாகப் பிரவேசித்து நித்தியானந்த சாக்ஷாத்காரமாகத்தடித்து அதிலதீதமாக விளங்குவதைப் பிரமமாகவு மஃதேவிடயசம்பந்தங்களிற்ருக்கற்றிருந்ததைப் பிரத்யேகாத்ம ஸ்வரூபமாகவுந்துதித்ததாம். (க)

(அ-கை) இச்செய்யுளின் முதற்கூறிய வைத்துவித வஸ்துவைச்சகசநிட்டையிற் சலக்ஷணமாக விளங்கிய சுயம் சைதன்னியமாகத் துதிக்கின்ருர்.

ஈன்றளித்தழிக்குஞ்செய்கைக் கேதுவாமயனுய்மாலா
யான்றவீசனுமாய்த்தானே யனந்தமூர்த்தியுமாய்நிற்கும்
மூன்றமுத்தனுமாயின்பப் புணரியாதவனுய்நாளுந்
தோன்றியவிமலபோத சொரூபத்தைப்பணிகின்றேனே.

(இ-ள்) ஈன்று-சிருஷடித்து, அளிந்து - இரட்சித்து, அழிக்கும்- சங்கரிக்கும், செய்கைக்கேதுவாம்- இம்முத்தொழிற்குமேதுவாகிய, அயனுய்-பிரமனுகியும், மாலாய்-விஷ்ணுவாகியும், ஆன்றவீசனுமாய்- மாட்சிமையுள்ள வுருத்திரனுகியும், அனந்தமூர்த்தியுமாய்- இன்னுமனேகவடிவங்களாயும், நிற்கும்-இருக்கின்ற, மூன்றமுத்தனுமாய- பூரணமானமுத்தனுகியும்,இன்பப்புணரியாதவனுய்- ஆனந்தசமுத்திரத்திலுதிக்குஞானசூரியனுகியும்- நாளுந்தோன்றிய- சகோதயமாகிய- விமலபோத-சுத்தசைதன்யமான- சொரூபத்தைப்பணிகின்றேன்- பிரமஸவரூபத்தைவணங்குகின்றேன்-எ-று.



(ப-ம்) தனதுஸபுரணமெல்லாந்தனதுவடிவமாக விளங்குமென்பார்(அயனுய்மாலாயான்றவீசனுமாய்த் தானே யனந்தமூர்த்தியுமாய்) நிற்குமெனவும்- பேரின்பவிளக்கமே சைதன்னியமென்பார் இன்பப்புணரியாதவனெனவும்- உற்பத்தித் திதிலயங்களின்றி விளங்கின சுத்தசைதன்னியமென்பார் (நாளுந்தோன்றிய விமலபோதசொரூபமெனவுங் கூறினர்) (இ-ம்) சர்வம்பிரம மயமென்னுமுபதேச வாக்கியப்படிக்கு ஸ்வரூபசாக்ஷாத்காரமான சுத்தசைதன்னியத்தைத் துதிசெய்ததாம். ()

(அ-கை) முற்கூறியவாத்ம ஸ்ரூபமேவடிவமான வருளிறையைநீதமாகவுஞ் சாக்ஷாத்காரமாகவுந் துதிக்கத்தொடங்கி யிக்கவியி லதீதமாகத் துதிக்கின்ருர்.

எவருடையருளால்யானே யெங்குமாம்பிரமமென்பார்
கவருடைப்புவனமெல்லாங் கற்பிதமென்றறிந்து
சுவருடைவெளிபோல்யானே சொரூபசுபாவமானேன்
அவருடைப்பதுமபாத மனுதினம்பணிகின்றேனே.

(இ-ள்) எவருடையருளால்-யாருடையகிருபையினுல்- யானே-நானே எங்குமாம்பிரமம்- எவ்விடத்திலு நிறைந்திருக்கின்ற பிரமஸ்வரூபமும்- என்பால்-என்னிடத்தில்- கவருடைப்புவனமெல்லாம்- தோற்றி விரித்திருக்கின்ற வுலகமுழுதும்- கற்பிதமென்றறிந்து - பொய்யென்றறிந்து- சுவரிடைவெளிபோல்- சுவரிடத்திருக்குங்ககனம்போல- யானேநானே- சொரூபசுபாவம்- பிரமசுபாவமும்- ஆனேன்- ஆயினேன்-அவருடை-அவரது-பதுமபாதம்- கமலமலர்போன்ற திருவடிகளை - அனுதினம்-எப்போதும்- பணிகின்றேன்- வணங்குகின்றேன்-எ-று (ப-ம்) சர்வம்பிரமமென்பார்- எங்குமாம் பிரமமெனவும் - சர்வமுமில்லையென்பார் (கவருடைப்புவனமெல்லாங்கற்பித) மெனவும்- யாவுந்தன்மயமாக விளங்குவனவென்பார் சொரூபசுபாவமானே னெனவுங்கூறினர். (இ-ம்) சர்வமாய்ச்சர்வமிலதாயிருக்கின்ற தன்னைத் தன்னிடத்துத் தானுயிருந்துவிளக்கியகுருதுரியத்தை வணங்கினதாம். (உ)

(அ-கை) இச்செய்யுளிற் சற்குருசொரூபத்தைச் சாக்ஷாத்காரமாகத் துதிக்கின்ருர்.

என்னுடையமனதுபுந்தி யிந்தியசரீரமெல்லா
மென்னுடையறிவினுலே யிரவிமுன்னிமமேயாக்கி
யென்னுடைநீயுநானு மேகமென்றயிக்கியஞ்செய்ய
வென்னுடைகுருவாய்த்தோன்று மீசனையிறைஞ்சினேனே.

(இ-ள்.) என்னுடை - என்னுடைய- மனதுபுந்தி- மனம்புந்திகளாகிய வந்தக்காரணமும்- இந்தியம்- ஞானேந்திரியங் மேந்திரியங்களும்- சரீர

ம்-தூலதேகமுமாகிய- எல்லாம்- இவைகளனைத்தும்- என்னுடையவிவ
னல்- எனதாத்மஞானத்தினல்- இரவிமுன்னிமமேயாக்கி- சூரியனைக்க
ண்டபனியைப்போலச்செய்து- என்னுடை- எனதுசுபாவமான-நீயும்-நீ
யென்னுங்கூடஸ்தனும்- நானும்- நானென்னும்பிரமமும்-ஏகமென்று-ஒ
ன்றேயென- ஐக்கியஞ்செய்ய - அத்துவிதமாக்க- என்னுடைகுருவாய்-
எனதாசாரியாக- தோன்றுமீசனை- உதயமான வருளிறையை- இறைஞ்
சினேன்- வணங்கினேன்-எ-று. (ப-ம்) தனது பிரியத்தடிப்பே குருஸ்வ
ரூபமென்பார் - என்னுடைகுரு வெனவும் தன்னையிரட்சிக்கு நிமித்த
முதயமான தருளிறையென்பார் ஈசனெனவுங்கூறினர். (இ-ம்) மனமுத
லிய தத்துவங்களனைத்தையுஞ் சமாதிஞானத்தினற் களைத்ததனிலு
தையமாகுமானந்தமாகிய வஃதேயிஃதிஃதேயஃதென்று மத்துவிதஸ்வ
ரூபத்தைத்தரிசிப்பிக்கும் பொருட்டுப் பூரணமே யோருருவாகவெழுந்
தருளிய வாசாரியனைவணங்கினதாம்.

(அ-கை) தனதாசிரியனைவணங்கிபவ ரருளினற் கூறப்புகுந்தவிந்நூ
ன்முகத்திற் கூறப்படும்விடயமுமிதனுலுண்டாகும்பயனுமிந்நூற்கும
திற் கூறப்படுவதாகிய விடயத்திற்குமுள்ள சம்பந்தமு மிதுகேட்டற்
குரிய வதிகாரியுமாகிய வனுபந்தசதுட்டய மிந்நூற்கற்கு மாணக்க னு
ணருட்பொருட் டுணக்கவேண்டுதலி னவற்றுளதிகாரியும் விடயமு மிச்
செய்யுளிற் கூறுகின்றார்.

(௪)

அந்தமுநடுவுமின்றி யாதியுமின்றிவான்போற்
சந்ததமொளிருஞான சற்குருபாதம்போற்றி
பந்தமும்வீடுங்காட்டப் பாந்தநூல்பார்க்கமாட்டா
மைந்தருமுணருமாறு வஸ்துதத்துவஞ்சொல்வேனே.

(இ-ள்.) அந்தமுநடுவுமின் யியாதியுமின்றி- ஆதிமத்தியாந்த ரகிதமா
ய்- வான்போல்- ஆகாயத்தைப்போல- சந்ததமொளிரும்-சதோதயமாய்
விளங்குகின்ற- ஞானசற்குருபாதம்போற்றி- ஞானசாரியாருபாதத்தை
வணங்கி- பந்தமும்வீடுங்காட்ட- பெத்தமுமுத்தியுமாகிய விவைகளின்
ஸ்வரூபத்தைத்தெரிவிக்கும்பொருட்டு- பாந்த - விரிந்திருக்கின்ற-நூ
ல்- வேதாந்தசாஸ்திரங்களை- பார்க்கமாட்டாமைந்தரும்- ஆராய்ந்தறிய
ச்சத்தியில்லாதசிட்டரும்- உணருமாறு எளிதினுணரும்படி - வஸ்துதத்
துவஞ்சொல்வேன்- பாவஸ்துவினுண்மையைச் சொல்வேன்-எ-று.
மைந்தரொன்பததிகாரிபெனவும்- வஸ்துதத்துவமென்பது விடயமெனவு
ங்கொள்க பரந்தநூல் பார்க்கமாட்டா மைந்தருமென்னுமும்மையாற்பா
ர்ப்பவர்களென்பதுமாயிற்று (ப-ம்) காலமுதலியவை நசிக்கினுந்தானழி
யாதிருத்தலின்- அந்தமின் றெனவும்- இடையின்றித் தான்பூரணனாந்



தமாகவிளங்குதலின் நடுவின்றெனவும் எப்போதும்தான் சுயமாய்ப்பிர
காசித்தலின் ஆதியுமின்றியெனவும்- இங்ஙனஞ்சதோதயமாக விளங்கி
யசச்சிதானந்தமான சுத்த சைதன்னியமே குருசொரூபமாகலால் சந்தத
மொளிரு ஞானசற்குருவெனவும் தானதன்மயமாய் நிற்றலின் பாதம்
போற்றியெனவும் கல்வியல்லலெனக் கண்டஃதின் சாரமானதன்னை வி
ளைவிற்றெரிந்து கொள்ளவிருப்பமுற்றவர்க ளெளிதி னுணரும்படியுண
ர்த்துதலின் பாந்தநூல்பார்க்கமாட்டா மைந்தருமுணருமாறுவஸ்துதத்
துவஞ்சொல்வே னெனவுங்கூறினர்.

(அ-கை) இச்செய்யுளிற் சம்பந்தமும் பிரயோசனமுங் கூறுகின்றார்:

படர்ந்தவேதாந்தமென்னும் பாற்கடன்மொண்டுமுன்னூற்
குடங்களினிறைத்துவைத்தார் குரவர்களெல்லாங்காய்ச்சிக்
கடைந்தெடுத்தளித்தேனிந்தக் கைவல்யநவநீதத்தை
யடைந்தவர்விடயமண்டின் றலைவரோபசியிலாரே.

(இ-ள்.) படர்ந்த- விரிந்திருக்கின்ற- வேதாந்தமென்னும்-உபநிடதமெ
ன்னும்- பாற்கடன்மொண்டு- க்ஷீரசமுத்திரத்தின் முகுந்து-முன்னூ
ற்குடங்களில்- முன்னூலாகியகுடங்களில்- குரவர்கள்- ஆசிரியர்கள்-நி
றைத்துவைத்தார் - பூரித்துவைத்தார்கள்- எல்லாங்காய்ச்சி- அவைகள
த்தனையுங்காய்ச்சி- கடைந்து- கடைதல்செய்து இந்தக்கைவல்ய நவநீத
த்தை- இஞ்ஞானசாத்திரமாகிய கைவல்யநவநீதத்தை- எடுத்தளித்தே
ன்-எடுத்துக்கொடுத்தேன்- அடைந்தவர்- இதைப்புசித்தவர்கள் பசியி
லார்- நித்தியதிருத்தி யடைந்தவர்களாதலால்- விடயமண்டின் றுவிடயா
னந்தமென்னு மண்ணைப்புசித்து-அலைவரோ-பவத்திற்சுழல்வார்களோ
சுழலார்-எ-று.

கைவல்ய நவநீதமென்பதுசம்பந்தமும் - அடைந்தவர் பசியிலாரென்
பது-பிரயோசனமுமாமெனக்கொள்க.

(ப-ம்) வேதமுடிவான மகாவாக்கியமோர்மொழியாயினு மஃது சீடனு
க்குப் போதமாகும் போதமாகும் பொருட்டுண்டானசுத்த வேதாந்த
மென்னும் பாற்கடலெனவும்- அவைகளிற் றங்களுக்கனுபவ மாகும்பொ
ருட்டாசிரிய ரெடுத்துவிரித்த வாக்கியங்களை எடுத்துக்கோடலைமொண்
டெனவும்- தாம்பெற்றபேறுலகம் பெறும்படி பாலினமாகியநூல்களிலவ்
வாக்கியங்களையமைத்தலை- முன்னூற்குடங்களி னிறைத்து வைத்தார்
குரவர்களெனவும்- அப்பலசாத்திரங்களி லுள்ளவாக்கியங்களை சேகரித்
தலை-எல்லாமெனவும் அவ்வாக்கியங்களின் பூர்வபட்சத்தைநீக்கி விசார
த்தாற் சித்தாந்தப் படுத்துதலைகாய்ச்சியெனவும்- அச்சித்தாந்தத்தை
க்குருவுபதேசத்தாற் சமாதியி லனுபவமாக வாராய்தலைகடைந்தெனவும்
அஃதினுதயமான நிருவாணசுகத்தை யெடுத்தோர் நூலாகத்தந்ததை

எடுத்தளித்தேனிந்தக்கைவல்ய நவநீதத்தையெனவும் - இஃதைப்பெற்
றனுபவித்துத் திருத்தியடைதலை- அடைந்தவர் பசியிலாரெனவும்-இவ்
வாருடர் விடயவிச்சையினுற் சனனமரணத்திற் சுழலாரொன்பதை-விடயம
ண்டின் றலைவரோவெனவும் கூறினர் (இ-ம்) பிரமனென்னுங் காமதே
னுவிற் சுரந்த சுருதிகளென்னும் பாலைவிசாரமென்னு மக்கினியாற் பூரு
வபக்ஷமென்னு நீர்சுண்டசித்தாந்தமென்னு மதுரமிகக்காய்ச்சி விருத்தி
ஞானமென்னும் பிறைகுத்தி உபதேசமென்னு மத்திட்டு அனுபவவா
ராய்ச்சியென்னுங் கடைதலைச்செய் ததிலெழாநின்ற கைவல்யமென்னு ந
வநீதத்தை அனுபவித்தலையடைத்து நித்தியதிருத்தியான பசியிலார்வி
டயானந்தமான மண்ணைப்புசியார்களெனக் கூறினதாம். (௬)

(அ-கை) உபாசனாமூர்த்தியைவணங்கி யிந்நூலின் பலவகை கூறுகி
ன்றார்.

முத்தனை வேங்கடேச முகுந்தனை யெனையாட்கொண்ட
கத்தனை வணங்கிச்சொல்லுங் கைவல்யநவநீதத்தைத்
தத்துவவிளக்கமென்றுஞ் சந்தேகந்தெளிதலென்றும்
வைத்திருபடலமாக வகுத்துரைசெய்கின்றேனே.

(இ-ள்.) முத்தனை-பாசங்களை நீக்கிநிற்பவனை- வேங்கடேசமுகுந்த
னை- வேங்கடாசலபதியாகிய திருமாலை- எனையாட்கொண்ட கத்தனை எ
ன்னையடிமைகொண்டவிறைவனை-வணங்கி-பணிந்து-சொல்லுங்கைவல்
யநவநீதத்தை - உரைக்குங்கைவல்ய நவநீதமென்னு ஞான சாத்திரத்
தை- தத்துவவிளக்கமென்றும் - தத்துவவிளக்கமெனவும்- சந்தேகந்தெ
ளிதலென்றும்- சந்தேகந்தெளிதலெனவும்- வைத்து- நாமந்தரித்து இரு
படலமாகவகுத்து- இரண்டுபடலமாகப்பிரித்து - உரைசெய்கின்றேன்-
சொல்லுகின்றேன்-எ-று. (௭)

(இ-ம்.) வெளிப்படை. (பாயிரமுற்றிற்று.)

(அ-கை) முற்கூறியபடலங்களுள், தத்துவவிளக்கமென்னும் படலத்
திற் தத்துவத்தைவிளக்கும்பொருட்டு முதற்கண் அதுகேட்குமதிகாரி
க்குரிய சாதனசதுட்டய விலக்கணங்கூறுகின்றார்.

நித்தியவனித்தியங்க ணிண்ணயந்தெரிவிவேக
மத்தியவிகபரங்கள் வருபோகங்களினிராசை
சத்தியமுரைக்கவேண்டுஞ் சமாதியென்றுறுகூட்ட
முத்தியைவிரும்புமிச்சை மொழிவர்சாதனமிந்நான்கே.

(இ-ள்.) நித்தியவனித்தியங்கள்- நித்தியாநித்தியவஸ்துக்களின், நி
ண்ணயந்தெரிவிவேகம்- நிச்சயந்தெரிகின்றவிவேகமும் - மத்திய-இடை



யிலுள்ள- இகபரங்கள்- இகலோகபரங்களில்- வருபோகங்களின-உண்
டாகின்றசெல்வங்களில்- நிராசை - விராகமும்- சத்தியமுரைக்கவேண்
டும்- உண்மையாகச் சொல்லத்தகுந்த- சமாதியென்றுறுகூட்டம் - சமா
திசட்கசம்பத்தியும் - முத்தியைவிரும்புமிச்சை - முமுட்சுத்துவமுமா
கிய- இந்நான்கும்- இந்நான்கையும் - சாதனம்- சாதனசதுட்டயமென்று-
மொழிவர்- சத்துக்கள்சொல்லுவார்கள். (௮)

(அ-கை.) (இதுவுமது.)

சமந்தமம்விடல்சகித்தல் சமாதானஞ்சிரத்தையாறுஞ்
சமமகக்காரணதண்டந்தமம்புறக்காரணதண்டம
அமர்மனைவிபகாரங்க ளருகலேவிடலென்றுகு
டமர்செயுஞ்சுகதுக்காதி யனுபவிப்பதுசகித்தல்.

(இ-ள்.) சமம்- சமமெனவும்- தமம்- தமமெனவும்- விடல்- உபரதியெ
னவும்- சகித்தல்- திதிட்சையெனவும்- சமாதானம்-சமாதானமெனவும்-சி
ரத்தை-சிரத்தையெனவும் - ஆறும்- ஆறாகும்- சமம்-சமமாவது-அகக்கா
ரணதண்டம்- அந்தக்கரணத்தைத் தண்டித்தலாம்- தமம்-தமமாவது-புற
க்கரணதண்டம்- புறத்தின்கண்ணுள்ள தசேந்திரியங்களைத்தண்டித்த
லாம்- விடல்- விடலென்பது- அமர்மனைவிபகாரங்கள்- விரும்பப்பட்டகு
டும்பவிபகாரங்களை- அருகலென்றும்- சுருங்கச்செய்தலாம் சகித்தல்-ச
கித்தலாவது- அமர்செயும- கலகஞ்செய்கின்ற- சுகதுக்காதி இன்பதுன்
பமுதலியவைகளை- அனுபவிப்பது- பிரார்த்தமென்று சமசித்தமாயனு
பவிப்பதாம்-எ-று. (௯)

(அ-கை.) (இதுவுமது.)

சிரவணப்பொருளைத்தானே சித்தஞ்சிந்திக்குமாறு
சாசமாய்வைக்குமித்தைச் சமாதானமென்பர்மேலோர்
பரமசற்குருநூலன்பு பற்றலேசிரத்தையாகும்
வரமிகுசமாதியாறு வகையாஞ்சொற்பொருளிதாமே.

(இ-ள்) சிரவணப்பொருளை- வேதாந்தசிரவணார்த்தங்களை- சித்தம்-
சிந்திக்குமாறு- பிரியமாய்ச்சிந்திக்கும்படி- சாசமாய்வைக்கும் - இனியதி
ன்மையாகச்செய்யும்- இத்தை- இதை- மேலோர்- மகான்கள்-சமாதான
மென்பர்- சமாதானமென்றுசொல்லுவார்கள்- பரமசற்குரு- மேலானவர
சியிடத்தும்- நூல் வேதாந்த சாஸ்திரங்களிடத்தும்- அன்புபற்றல் அ
ன்புவைத்தல்- சிரத்தையாகும்- சிரத்தையாம்- வரமிகு- மேன்மைமிகு
ந்தசமாதி- சமாதியென்னும் ஆறுவகையாஞ்சொற்கு ஆறுபிரிவானபதத்
துக்கு பொருளிதாம் அருத்தமிதுவாம்-எ-று.

(இ-ந-ச-ட.) அநித்தியவஸ்துக்க ளிவையெனக்கண்டு நித்தியவஸ்துவை யடைதற்கேதுவான குணங்களையே சாதனசதுட்டயமாகக் கூறினதாம். (௰)

(அ-கை) அச்சாதனங்களினின்று யமையாகச்சிறப்பினவெனவு மதனுலுண்டாகும் பயனிஃதெனவுங் கூறுகின்றார்.

சாதனமின்றியொன்றைச் சாதிப்பாருலகிலில்லை
யாதலாலிந்நான்கு மடைந்தவர்க்கறிவுண்டாகு
நூதனவிவேகியுள்ளி னுழையாது நுழையுமாகிற்
பூதசென்மங்கள்கோடி புனிதனும்புருடனுமே.

(இ-ள்.) சாதனமின்றி- சாதனமில்லாமல்- ஒன்றை- ஒருகாரியத்தை- சாதிப்பார்- சாதிப்பவர்கள்- உலகிலில்லை- பூமியின்கண்ணில்லை-ஆதலால்-ஆகையால் இந்நான்கும் இச்சாதன சதுட்டயங்களை அடைந்தவர்க்கு பெற்றவர்களுக்கு- அறிவுண்டாகும்- ஞானோதயமாகும்- நூதனவிவேகியுள்ளில்- புதிய விவேகியின் மனதில்- நுழையாது- புகாது - நுழையுமாகில்- புகுமானல்- பூத- இறந்தகாலத்துள்ள-சென்மங்கள் கோடி-அநந்தசநநங்களில்- புனிதனும்புருடனும்- சித்தசுத்தி யுள்ளவனுகிய பூமானும்-எ-று. (இ-ம்) மெய்யுணர்வையுணர்தற்கிச்சாதனங்களவசியம்வேண்டுமென்பதாம். (௰௧)

(அ-கை.) அச்சாதனமுள்ள சீடனது தீவிரதா பக்குவத்தை யறிவித்தல்.

இவனதிகாரியானே னிந்திரியங்களாலும்
புவனதெய்வங்களாலும் பூதபௌதிகங்களாலுந்
தவனமூன் றடைந்துவெய்யிற் சகித்திடாப்புழுப்போல்வெப்பிப்
பவமறுஞானதீர்த்தம படிந்திடப்பதறினனே.

(இ-ள்.) இவன்-இச்சாதனசதுட்டய முள்ளவனே - அதிகாரியானேன்-இந்நூலுக் கதிகாரியாவான்- இந்திரியங்களாலும் - ஆதியாத்மிகத்தினலும்- புவனதெய்வங்களாலும்-ஆதிதெய்விகத்தினலும்- பூதபௌதிகங்களாலும்- ஆதிபௌதிகங்களாலும்- தவனமூன்றடைந்து- தாபத்திரயாக்கினியையடைந்து - வெய்யிற்சகித்திடாப் புழுப்போல் - சூரியன் தாஷணகிரணத்துக்குச் சகிக்கமாட்டாத கிருமியைப்போல்- வெம்பி-வெப்பமுற்று பவமறும்- பிறவியையொழிக்கின்ற- ஞானதீர்த்தம்படிந்திட- ஞானசாகரத்தின் மூழ்க-பதறினன்-தீவிரமுற்றான்-எ-று. (இ-ம்) தாபத்திரயாக்கினியாகிய சமசாரதுன்பங்களுக் காற்றுதவனே யவைநீங்கிப்பிரமானந்த மடையவிரைவனென்பதாம். (௰௨)



(அ-கை.) அத்தீவிரதாபக்குவனுக்காசிரியர் தரிசனமாதல்.

ஆனவிம்மனைவிமக்க ளர்த்தவீடணைகண் மூன்றிற்
கானவர்வலையிற்பட்டுக் கைதப்பியோடுமான்போற்
போனவன்வெறுங்கையோடே போகாதவண்ணஞ்சென்று
ஞானசற்குருவைக்கண்டு நன்றுகவணங்கினனே.

(இ-ள்.) ஆனவிம்மனைவி- தனக்கானவிவ்வில்லாளும்- மக்கள்- புத்திரரும்- அர்த்தம் தனமுமாகிய- ஈடணைகண்மூன்றில்- ஈடணைத்திரயங்களினின்றும்- கானவர்வலையிற்பட்டு- வேடர்கள் வீசும்வலைக்குளகப்பட்டு- கைதப்பியோடுமான்போல்- தவறிச்செல்லுமரிணத்தைப்போலபோனவன் ஓடினவன் வெறுங்கையோடே சும்மா போகாதவண்ணம் செல்லாதபடிசென்று- உள்ளத்திலன்பும் புறத்திலாராதனைக்குரிய வஸ்துக்களுங்கொண்டுபோய்- ஞானசற்குருவைக்கண்டு ஞானுசாரியனைத்தரிசனஞ்செய்து நன்றாக- திரிகாணசுத்தியாக-வணங்கினன்-பூரித்துப்பணிந்தான்-எ-று. (இ-ம்) ஈடணைத்திரயமான துன்பங்களினின்றுநீக்கிய விவனுக்கின்பவடிவமான சற்குருதெரிசன மாயிற்றென்பதாம். ()

(அ-கை) தரிசனஞ்செய்த அவ்வாசிரியரிடத்திற் செய்யும் விண்ணப்பம்.

வணங்கிநின்றழுதுசொல்வான் மாயவாழ்வெனுஞ்சோகத்தா
லுணங்கினேனையனேயென் னுள்ளமேகுளிரும்வண்ணம்
பிணங்கியகோசபாசப் பின்னலைச்சின்னமாக்கி
யிணங்கியகுருவேயென்னை யிரட்சிக்கவேண்டுமென்றான்.

(இ-ள்.) வணங்கிநின்று- பணிந்தெழுந்துநின்று- அழுதுசொல்வான் கண்ணீர்சொரியவழுதுரைப்பான்- மாயவாழ்வெனும் - பொய்யானகுடும்பவாழ்க்கையென்னும்- சோகத்தால் - துன்பத்தினுல் - உணங்கினேன் வாடினேன்- ஐயனே- எனதாசிரியனே என்னுள்ளம் எனதகம் - குளிரும் வண்ணம் சீதளமாம்படிபிணங்கிய- செறிந்திருக்கிற கோசபாசப்பின்னலை பஞ்சகோசமாகிய பந்தப்பின்னலை- சின்னமாக்கிதூளாக்கி இணங்கி குருவே- முத்தியையடைவிப்பதற் குடன்பட்டிருக்கு மாசிரியனே-என்னை-அடியேனை- இரட்சிக்கவேண்டுமென்றான்- முத்தியிற் சேர்க்கவேண்டுமென் றுசொன்னன் எ-று. (இ-ம்) அறிவின்மையால்வரும் பந்தத்துன்பத்தைநீக்கி யறிவினுல்வருமின்பத்தின் மூழ்கும்படிசெய்விக்க வாசிரியனை வேண்டிக்கோடலாம். (௰௪)

(அ-கை.) அங்ஙனம்வினவின சீடனைப்பரிசோதித்தல்.

அன்னை தன்சிசுவையைய னுமைமீன்பறவைபோலத்
தன்னகங்கருதிநோக்கித் தடவிச்சந்நிதியிருத்தி

(இ-ங-ந-ம்.) அநித்தியவஸ்துக்க ளிவையெனக்கண்டு நித்தியவஸ்துவை யடைதற்கேதுவான குணங்களையே சாதனசதுட்டயமாகக் கூறினதாம். (௰)

(அ-கை) அச்சாதனங்களினின்று மையாகச்சிறப்பினவெனவு மதனாலுண்டாகும் பயனிஃதெனவுங்கூறுகின்றார்.

சாதனமின்றியொன்றைச் சாதிப்பாருலகிலில்லை
யாதலாலிந்நான்கு மடைந்தவர்க்கறிவுண்டாகு
நூதனவிவேகியுள்ளி னுழையாதுநுழையுமாகிற்
பூதசென்மங்கள்கோடி புனிதனும்புருடனுமே.

(இ-ள்.) சாதனமின்றி- சாதனமில்லாமல்- ஒன்றை- ஒருகாரியத்தை- சாதிப்பார்- சாதிப்பவர்கள்- உலகிலில்லை- பூமியின்கண்ணில்லை-ஆதலால்--ஆகையால் இந்நான்கும் இச்சாதன சதுட்டயங்களை அடைந்தவர்க்கு- பெற்றவர்களுக்கு- அறிவுண்டாகும்- ஞானோதயமாகும்- நூதனவிவேகியுள்ளில்- புதிய விவேகியின் மனதில்- நுழையாது- புகாது - நுழையுமாகில்- புகுமானால்- பூத- இறந்தகாலத்துள்ள-சென்மங்கள் கோடி-அநந்தசநநங்களில்- புனிதனும்புருடனும்- சித்தசுத்தி யுள்ளவனாகிய பூமானும்-எ-று. (இ-ம்) மெய்யுணர்வையுணர்தற்கிச்சாதனங்களவசியம்வேண்டுமென்பதாம். (௰௧)

(அ-கை.) அச்சாதனமுள்ள சீடனது தீவிரதா பக்குவத்தை யறிவித்தல்.

இவனதிகாரியானே னிந்திரியங்களாலும்
புவனதெய்வங்களாலும் பூதபௌதிகங்களாலுந்
தவனமூன் றடைந்துவெய்யிற் சகித்திடாப்புழுப்போல்வெம்பிப்
பவமறுஞானதீர்த்தம் படிந்திடப்பதறினனே.

(இ-ள்.) இவன்-இச்சாதனசதுட்டய முள்ளவனே - அதிகாரியானேன்-இந்நூலுக் கதிகாரியாவான்- இந்திரியங்களாலும் - ஆதியாத்மிகத்தினாலும்- புவனதெய்வங்களாலும்-ஆதிதெய்வீகத்தினாலும்- பூதபௌதிகங்களாலும்- ஆதிபௌதிகங்களாலும்- தவனமூன்றடைந்து- தாபத்திரயாக்கினியையடைந்து - வெய்யிற்சகித்திடாப் புழுப்போல் - சூரியன் தூஷணகிரணத்துக்குச் சகிக்கமாட்டாத கிருமியைப்போல்- வெம்பி-வெப்பமுற்று பவமறும்- பிறவியையொழிக்கின்ற- ஞானதீர்த்தம்படிந்திட- ஞானசாகரத்தின்மூழ்க-பதறினன்-தீவிரமுற்றான்-எ-று. (இ-ம்) தாபத்திரயாக்கினியாகிய சம்சார துன்பங்களுங் காற்றுதவனே யவைநீங்கிப்பிரமானந்த மடையவிரைவனென்பதாம். (௰௨)



(அ-கை.) அத்தீவிரதாபக்குவனுக்காசிரியர் தரிசனமாதல்.

ஆனவிம்மனைவிமக்க ளர்த்தவீடணைகண் மூன்றிற்
கானவர்வலையிற்பட்டுக் கைதப்பியோடுமான்போற்
போனவன்வெறுங்கையோடே போகாதவண்ணஞ்சென்று
ஞானசற்குருவைக்கண்டு நன்றாகவணங்கினனே.

(இ-ள்.) ஆனவிம்மனைவி- தனக்கானவிவ்வில்லாளும்- மக்கள்- புத்திரரும்- அர்த்தம்- தனமுமாகிய- ஈடணைகண்மூன்றில்- ஈடணாத்திரயங்களினின்றும்- கானவர்வலையிற்பட்டு- வேடர்கள் வீசும்வலைக்குளகப்பட்டு- கைதப்பியோடுமான்போல்- தவறிச்செல்லுமரிணத்தைப்போலபோனவன் ஓடினவன் வெறுங்கையோடே சும்மா போகாதவண்ணம் செல்லாதபடிசென்று- உள்ளத்திலன்பும் புறத்திலாசாரியனுக்குரிய வஸ்துக்களுங்கொண்டுபோய்- ஞானசற்குருவைக்கண்டு ஞானாசாரியனைத்தரிசனஞ்செய்து நன்றாக- திரிகாணசுத்தியாக-வணங்கினன்-பூரித்துப்பணிந்தான்-எ-று. (இ-ம்) ஈடணாத்திரயமான துன்பங்களினின்றுநீக்கிய விவனுக்கின்பவடிவமான சற்குருதெரிசன மாயிற்றென்பதாம். ( )

(அ-கை) தரிசனஞ்செய்த அவ்வாசிரியரிடத்திற் செய்யும் விண்ணப்பம்.

வணங்கிநின்றழுதுசொல்வான் மாயவாழ்வெனுஞ்சோகத்தா
லுணங்கினேனையனேயென் னுள்ளமேகுளிரும்வண்ணம்
பிணங்கியகோசபாசப் பின்னலைச்சின்னமாக்கி
யிணங்கியகுருவேயென்னை யிரட்சிக்கவேண்டுமென்றான்.

(இ-ள்.) வணங்கிநின்று- பணிந்தெழுந்துநின்று- அழுதுசொல்வான் கண்ணீர்சொரியவழுதுரைப்பான்- மாயவாழ்வெனும் - பொய்யானகுடும்பவாழ்க்கையென்னும்- சோகத்தால் - துன்பத்தினால் - உணங்கினேன் வாடினேன்- ஐயனே- எனதாசிரியரே என்னுள்ளம் எனதகம் - குளிரும் வண்ணம் சீதளமாம்படிபிணங்கிய- செறிந்திருக்கிற கோசபாசப்பின்னலை பஞ்சகோசமாகிய பந்தப்பின்னலை- சின்னமாக்கிதூளாக்கி இணங்கிகுருவே- முத்தியையடைவிப்பதற்குடன்பட்டிருக்கு மாசிரியரே-என்னை-அடியேனை- இரட்சிக்கவேண்டுமென்றான்- முத்தியிற் சேர்க்கவேண்டுமென்றுசொன்னான் எ-று. (இ-ம்) அறிவின்மையால்வரும் பந்தத்துன்பத்தைநீக்கி யறிவினால்வருமின்பத்தின் மூழ்கும்படிசெய்விக்க வாசிரியனை வேண்டிக்கோடலாம். (௰௪)

(அ-கை.) அங்ஙனம்வினவின சீடனைப்பரிசோதித்தல்.

அன்னதன்சிசுவையைய னுமைமீன்பறவைபோலத்
தன்னகங்கருதிநோக்கித் தடவிச்சந்நிதியிருத்தி

யுன்னதுபிறவியாற்று முபாயமொன்றுண்டுசொல்வேன்
சொன்னதுகேட்பாயாகிற் றொடர்பவந்தொலையுமென்றார்.

(இ-ள்.) அன்னை ~~தாயையொத்த~~ அவ்வாறு- ஐயன்- குருவானவர்- தன்சிசுவை தன்னுடையசீடனை- ஆமை- கூர்மத்தைப்போல தன்னகங்கருதி- தனதுள்ளத்தினினைத்து- மீன்- மச்சத்தைப்போல - நோக்கி- பூரணதிஷ்டிவைத்து- பறவைபோல- பட்சியைப்போல - தடவி அஸ்தமஸ்தகன சம்யோகஞ்செய்து- சந்நிதியிருத்தி- எதிரிலிருக்கவைத்து- உன்னதுபிறவிமாற்றும்- உனதுபவத்துன்பத்தை நீக்கும்- உபாயமொன்றுண்டு- தந்திரமொன்றிருக்கின்றது- சொல்வேன்- உபதேசிப்பேன்- சொன்னதுகேட்பாயாகில்- போதித்தவண்ணங்கேட்டு நடப்பாயாகில் தொடர்பவம் சிருஷ்டிமுதற்றொடருஞ் சநநமானதுதொலையுமென்றார்- நீங்குமென்றருளினார்-எ-று. (ப-ம்) விஷயத்தைநினைக்கு மாகாமியத்தைக்கெடுத்தறிவையுணரும்படி சிந்தித்தானென்பார்- ஆமைபோற் கருதியெனவும்- முன்பந்தப்பட்டிருக்கின்ற சஞ்சிதமொழிந்து தனது சத்தமாத்திரமான திருஷ்டிவரும்படி பார்த்தானென்பார்- மீன்போனோக்கியெனவும்- பிரார்த்தமாகவந்த பௌதிகவடிவம் நித்தியானந்தமாக விளங்கத்தனதுபூரணானந்தமாக வியாபித்தானென்பார் பறவைபோற் றடவியெனவுங்கூறினார். (இ-ம்.) சமஸ்காரஞ்செய்த வாசிரியர்உபதேசிப்பதற்காக வகமபதைகளுளவோ விலவோ வெனவாராய்ந்ததாம். (௧௫)

(அ-கை.) ஆசிரியர்வசனத்தின்மகிழ்ச் தன்புகூர்தல்.

தொடர்பவந்தொலையுமென்று சொன்னதைக்கேட்டநேரந்
தடமடுமூழ்கினன்போற் சரீரமுங்குளிர்ந்துள்ளாறி
யருமன்பொழுகுமாபோ லானந்தபாஷ்பங்காட்டி
மடன்மலர்ப்பாதமீண்டும் வணங்கிநின் றீதுசொல்வான்.

(இ-ள்) தொடர்பவம்- தொன்றுதொட்டுத் தொடராநின்ற சநநமானது- தொலையுமென்று நீங்குமென்று- சொன்னதை- அருளியதை- கேட்டநேரம்- கேட்டபோதே தடமடு- விசாலமான தடாகத்தில்- மூழ்கினன்போல மூழ்கினவனைப்போல சரீரமுங்குளிர்ந்து தேகமுங் குளிர்ச்சியாய் உள்ளாறி- மனங்குளிர்ந்து- அருமன்பு - நிறைந்தவன்பானது-ஒழுகுமாபோல் - கரையழித்துச் செலவதுபோல்- ஆனந்தபாஷ்பங் காட்டி- இரண்டுகண்களிலு மானந்தபாஷ்பம்பெருக- மடன்மலர்ப்பாதம் இதழ்விரிந்த கமலமலர்போன்ற பாதங்களை மீண்டும் திரும்பவும்- வணங்கி பணிந்து- எழுந்துநின்று- ஈதுசொல்வான் இதனைச்சொல்லத் தொடங்குவான்-எ-று. (௧௬)



(அ-கை.) சீடன்விண்ணப்பத்தினு லகமின்றென்பதைக் குறிப்பினாலறிதல்.

சொன்னதுகேட்கமாட்டாத்தொண்டனானாலுஞ்சுவாமி
நின்னதுகருணையாலே நீயென்னையாளலாமே
யுன்னதுபிறவிமாற்று முபாயமொன்றுண்டென்றீரோ
யின்னதென்றதைநீர்காட்டி யீடேற்றல்வேண்டுமென்றான்.

(இ-ள்.) சொன்னது- போதித்ததை, கேட்கமாட்டா - கேட்டுநடக்கமாட்டாத, தொண்டனானாலும்- அடிமையானாலும், சுவாமி-என்தெய்வமே, நின்னதுகருணையால் தேவரீரதுகிருபையினால்- நீயென்னை- தேவரீரடியேனை, ஆளலாமே- தடுத்தாளலாமே, உன்னதுபிறவிமாற்றும்-உனதுபவத்தைக்கெடுக்கும், உபாயமொன்றுண்டென்கிறீரோ- தந்திரமொன்றிருக்கின்றதென்றருள்செய்தீரோ, இன்னதென்று - இத்தன்மையதென்று, அதை-அவ்வுபாயத்தை, நீர்காட்டி - தேவரீர்காண்பித்து, ஈடேற்றல்வேண்டுமென்றான்- இரட்சிக்கவேண்டுமென்றான்-எ-று. (இ-உ-கம்) சீடனறிவு எவ்வளவு துல்லமானாலுமதன் கண்ணுதயமான வானந்தத்திற்கு விளக்கமாகவஃதை விளக்குதல் குருதுரியமாதலாற் குருவருளே விளக்கவேண்டுமென்பதாம். (௧௭)

(அ-கை.) அகம்பாவ மின்றென்பதையறிந் தாத்மஸ்வரூபத்தை யுபதேசிக்கத்தொடங்கல்.

அடங்கியவிருத்தியானென் றறிந்தபின்செறிந்தமண்ணின்
குடம்பையுட்புழுமுன்னாதுங் குளவியின்கொள்கைபோலத்
தொடங்கியகுருவுமான்ம சொரூபமேமருவவேண்டி
யுடம்பினுட்சிவனைப்பார்த் துபதேசமோதுவாரே.

(இ-ள.) அடங்கியவிருத்தியானென்று- விருத்தியடங்கினவனென்று அறிந்தபின்- தெரிந்தபின்பு, செறிந்த-நெருங்கிய, மண்ணின் குடம்பையுள்- மட்கூட்டினுள் ளிருக்கின்ற; புழுமுன்- கிருமியின்முன்னே, ஊதுங்குளவியின்- சத்திக்குளவியினது, கொள்கைபோல்- தன்மையைப்போல, தொடங்கியகுருவும்- உபதேசிக்கத்தொடங்கிய வாசாரியரும், ஆன்மசொரூபம்- ஆத்மஸ்வரூபத்தை, மருவவேண்டி- சீடனடையும்பொருட்டு, உடம்பினுள்- தேகத்துள்ளிருக்கும், சிவனைப்பார்த்து - சிவனை நோக்கி' உபதேசமோதுவார்-உபதேசஞ்செய்வார்-எ-று.

(இ-ம்.) சீடனதுயதார்த்தஸ்வரூபத்தைப்பார்த்தவனஃதாக விளங்கும்பொருட்டனுக்கிரகிக்கத்தொடங்கினதாம். (௧௮)

(அ-கை.) பவத்தைநீக்கும்பொருட் டஃதுண்டானகாரணமும் அஃது நிற்குங்காலவளவையுங்கூறல்.

வாராயென்மகனேதன்னைமறந்தவன்பிறந்திருந்து
நீராதசுழல்காற்றுற்றசெத்தைபோற்சுற்றிச்சுற்றிப்
போதகாலநேமிப் பிரமையிற்றிரிவன்போத
மாராயுந்தன்னைத்தானென் றறியுமவ்வளவுந்தானே.

(இ-ள்.) என்மகனே-எனது புத்திரனே, வாராய்- கேளாய், தன்னைமறந்தவன்- தனதாத்மசொரூபத்தைமறந்தவன்- பிறந்திருந்து-சநித்துமரித்து, நீராதசுழல்காற்றுற்ற- ஓயாதசுழல்காற்றி லகப்பட்டசெத்தைப்போல்- சருகைப்போல, சுற்றிச்சுற்றி, அப்பவத்திற்சுழன்று சுழன்றுபோதகாலநேமி- நீங்காதகாலசக்கிரத்தினது- பிரமையிற்றிரிவன்- சுழற்சியிற்சஞ்சரிப்பன், போதமாராயுந்தன்னை- அறிவினாலாராய்ந்தறியுமாத்மாவை, தானென்று, பிரமமென்று, அறியுமவ்வளவும்-தெரியுமட்டும்-எ-று. (இ-ம) அறிவின்மையாலுண்டான பவமறிவுதயமாய்த் தன்னைத்தானெனவுணருமட்டு- மிருக்குமென்பதாம். (௰௯)

(அ-கை.) மகாவாக்கிய வுபதேசப்பிரகாரம் அறியவேண்டியபொருளிதுவெனவறைதல்.

தன்னையெந்தனக்காதாரத் தலைவனையுங்கண்டானேற்
பின்னையத்தலைவன்றானுய்ப் பிரமமாய்ப்பிறப்புத்தீர்வ
னுன்னைநீயறிவாயாகி லுனக்கொருகேடுமில்லை
யென்னைநீகேட்கையாலே யீதுபதேசித்தேனே.

(இ-ள்.) தன்னையும்-கூடஸ்தனையும், தனக்காதாரத்தலைவனையும்- தனக்கிடமானபிரமத்தையும்-கண்டானேல்- தரிசிப்பானாயில்- பின்னை- பின்பு- அத்தலைவன்றானுய்- அப்பிரமேகூடஸ்தனுய்- பிரமமாய்- அக்கூடஸ்தனே பிரமமாய்- பிறப்புதீர்வன்- சனனநீங்குவான்- உன்னைநீயறிவாயாகில்- உதைத்துவிஸ்வரூபத்தை நீதெரிந்துகொள்வாயானால் - உனக்கொருகேடுமில்லை) உனக்கொரு கெடுதியுமில்லை - என்னை-எம்மை- நீகேட்கையால்- நீகேட்கின்றபடியால்- ஈதுபதேசித்தேன்- எனதனுபவமானவிதைச்சொன்னேன்-எ-று.

(ப-ம்.) நசிப்பதானதேகமுதற் கிருதிபரியந்தம் - ஒவ்வொன்றினு நசியாமற்றானுய்த் தேடித்திருக்கின்ற பிரத்தியேகாத்மசைதன்னியத்தைத் தன்னையெனவும் அங்ஙனஞ் சேடித்தேனே அவைகளினைத்திலும்பூரணமான பிரமசைதன்னியமாய விளங்குவதைத் தலைவனெனவும்- அஃதேயிஃதிஃதேயஃதாய் விளங்குஞ் சுத்தசைதன்னியந் தானாகுவதை-பின்னையத்தலைவன்றானுய்ப்பிரமமாயெனவும் அங்ஙனம்விளங்கியவனுமைத்திற்குதயாஸதமனமின்மையாற் சனனமரணமின்றென்பதை- பிறப்புத்திர்வனெனவுங்கூறினர். (௨௰)



(அ-கை.) தன்னையறியவேண்டுமென்பதைச் சர்வத்திரகாதாரணமாக்கக்கொள்ளுந் தேகமெனக்கருதியஃதையறிந்தவர்கள் பவநீங்காமையானஃதினுண்மையையுணாவினுவுதல்.

என்னைத்தானசடனாக வெண்ணியோசொன்னீரையா
தன்னைத்தானறியாமாந்தர் தரணியிலொருவருண்டோ
பின்னைத்தானவர்களெல்லாம் பிறந்திறந்துழலுவானேன்
நின்னைத்தானம்பினேற்கு நிண்ணயமருளுவீரோ.

(இ-ள்.) என்னைத்தானசடனாக- என்னையறியாதவனாக- எண்ணியோசொன்னீர் - கருதியாசொன்னீர்- ஐயா- எனதாசிரியரே- தன்னைத்தானறியாமாந்தர்- தன்னைத்தெரியாதமனிதர்- தரணியி லொருவருண்டோ- பூமியின்கண்ணொருவருண்டோ - பின்னை- பின்பு - அவர்களெல்லாம்- அவர்களனைவரும்- பிறந்திறந்துழலுவானேன்- சனனமரணத்திற சுழலுவானேன்- நின்னை- தேவரீரை- நம்பினேற்கு- நம்பினவடியேனுக்கு-நிண்ணயமருளுவீர்- நிச்சயத்தைச்சொல்வீர்-எ-று. (ப-ம்) ஆசிரியர் தனுபவப்படி தேகத்திற்றானாயிருந்ததன்னையறியவேண்டுமென்னவஃதனுபவமாகாதசீடன்றேகமேதானெனக்கருதியென்னையானறிய வில்லையாவென்றுனென்பார் என்னைத்தானசடனாக வெண்ணியோசொன்னீரெனவும்-இங்ஙனமறிந்தயாவர்க்குஞ் சனனமரணமே நீங்கவில்லை யென்பானென்பார் பின்னைத்தானவர்களெல்லாம் பிறந்திறந் துழலுவானேனெனவும் - தானென்ப திஃதெனவுண்மையாகத் தெரிவிக்க வேண்டுமென்பானென்பார் நிண்ணயமருளுவீரெனவுங்கூறினர். (இ-ம்.) தானென்பதனுபவமாகும்பொருட்டதனியல்பை விசாரித்ததாம். (௨௧)

(அ-கை.) தானென்பதிஃதெனக்கூறியுந் தோன்றாததற்காக வாசிரியர்வருத்தமுற்றிரங்குதல்:

இன்னதுதேகந்தேகி யிவனெனவுணர்வன்யாவ
னன்னவன்றன்னைத்தானென் றறிந்தவனாகுமென்றார்
சொன்னபின்றேகியாரித் தூலமல்லாமலென்றான்
பின்னதுகேட்டவையர் பீடையுமசையுங்கொண்டார்.

(இ-ள்.) தேகம்-சரீரமானது- இன்னது- இத்தன்மையுள்ளது- தேகிசரீரி- இவனென- இத்தன்மையுள்ளவனென்று- உணர்வன்யாவன் - அறிகின்றவனெவனோ- அன்னவன்- அவன்- தன்னை- கூடஸதனை - நானென்று-பிரமமென்று- அறிந்தவனாகுமென்றார் - தெரிந்தவனாவனென்றார்- சொன்னபின்- அங்ஙனம்போதித்தபின்பு- இத்தூலமல்லாமல்- இச்சரீர

மன்றி- தேகியாரென்றுன்- சரீரியாரென்றுகேட்டான் - பின்-பின்பு- அது-அவனதுபவத்தை- கேட்டவையர்- கேட்டவாசாரியர்-பீடையுட்-துன்பமும்- நகையும்- புன்னகையும்- கொண்டார்- கொண்டனர்-எ-று.(ப-ம்) இத்தேகந்தானுயிருப்பவனை பெங்ஙனமுய்விக்கலாமென வாலோசிக்கு மனவருத்தமும்- தேகந்தானெனவறிந்தவன் றேகியையுந்தானென்றறிவனென்று மகிழ்ச்சியுங்கொண்டானென்பார்- பீடையு நகையுங் கொண்டானெனக்கூறினர். (இ-ம்.) ஆசிரியர் தனதனுபவமான சுத்த சைதன்னியத்தைத்தானென்றுகூறச் சீடன் தனக்கனுபவமான தேகந்தானன்றித் தான்வேறுளதோவென வினவினதாம். (உஉ)

(அ-கை.) தேகந்தானன்றதன் கண்ணுள்ளதேகியேதானென்பதுதனக்குத்தானேதோன்ற அவத்தாத்திரயங்களை யறிகின்றவன் யாரெனவாசிரியர் வினவுதல்.

தே கமல்லாமல்வேறே தேகியார்காணேனென்றாய்
மோகமாங்கனவில்வந்து மூளைத்திடுமவனார்சொல்லாய்
சோகமாங்கனவுதோன்றுச் சுழுத்திகண்டவனார்சொல்லா
யாகநீனவிலெண்ணு மறிவுதானேதுசொல்லாய்.

(இ-ள்.) தேகமல்லாமல்- சரீரத்தையன்றி- வேறே-வேறாயுள்ள - தேகியார்- சரீரியார்- காணேனென்றாய்- யான்கண்டிலேனென்றாய் (அங்ஙனமாயின்) மோகமாய்- மோகமாகிய- கனவில்வந்துமூளைத்திடுமவனார்- சொற்பனத்திலுதித்தவன்யாவன்- சொல்லாய் - இதனைநீசொல்-சோகமாங்கனவுதோன்று- மயக்கமாகியசொற்பனந்தோன்றாத- சுழுத்திகண்டவனார்- சுழுத்தியிற்சூனியமாகத் தரிசித்தவனார்- சொல்லாய்-சொல்லாய்-ஆக-ஆகியவிவ்விரண்டையுய்-நீனவிலெண்ணும்-நீசாக்கிரத்தினினைக்கும்- அறிவுதானேதுசொல்லாய்- அறிவுயாது-எ-று. (இ-ம்.) தேகத்தைத்தவிர தேகியொருவனுளனென்பது தோன்றவினவினதாம். (உங)

(அ-கை.) தேகத்தின்கண்ணவத்தைகளை யறிகின்றதேகியொருவனுளனெனத்தோன்றுகின்றது அதனைவிளக்கவேண்டுமெனல்.

ந னவுகண்டதுநான்கண்ட நனவுளநினைவுநீங்கிக்
கனவுகண்டதுமிரண்டுங் காணுதசுழுத்திகண்டுந்
தினமனுபவித்தலொக்குந் தெரியவுமில்லைசற்றே
மனதினிலுதிக்கும்பின்னை மறைக்குமதருளுவீரோ:

(இ-ள்) நனவுகண்டதும் சாக்கிராவத்தையிற் பார்த்ததும், நான்கண்ட நான்பார்த்த நனவுளநினைவுநீங்கி சாக்கிரத்திலுள்ளநினைப்புநீங்கி க



னவுகண்டதும் சொற்பனத்திற்பார்த்ததும் இரண்டுங்காணுத இவ்விருவத்தைகளின்றுெழிலின்றிய சுழுத்திகண்டும் சுழுத்தி சூனியத்தைப்பார்த்ததும்,தினமனுபவித்தல் நாடோறுமனுபவிப்பதனுல் ஒக்கும் தேவரீர்தேகியொன்றிருக்கின்றுனென் றருளியதொவவும் தெரியவுமில்லை அதுபிரத்தியட்சமாகவுமில்லை சற்றேமனதினி லுதிக்கும்சற்றுமனதிறேன்றுகின்றது பின்னைமறைக்கும் பின்புமறைக்கின்றது அது னஃதினசுவருபத்தைஅருளுவீர் கிருபைசெய்வீர் எ-று: கண்டதென்பது கண்டுமெனவும் மறையுமென்பது மறைக்குமெனவுந்திரிந்துநின்றன (இ-ம்.) தானென்பது தேகமென்று தேகியெனவவத்தைகளை முன்னிட்டறிவிக்க வொருவாற்றுனறிந்த சீடனஃது மின்மினிப்போலத் தோற்றிமறைதலி னதன்யதார்த்தசுவருப மிஃதென விளங்க வனுக்கிரகிக்க வேண்டிக்கோடலாம்: (உச)

(அ-கை:) முன்றேகந் தானுயிருந்தவனைக் கிஞ்சித்து விலட்சணப்படுத்திப்பின்தடத்த விலக்கணையான் முன்புசடமான தேகவிலக்கணங்கூறி யஃதைநீக்கிப் பின்சித்தேதானுன தேகியிலக்கணங் கூறத்தொடங்கல்.

தா லத்தின்மாங்கள்காட்டித் தனிப்பிறைகாட்டுவார்போ
லாலத்தினுடுக்கள்காட்டி யருந்ததிகாட்டுவார்போற்
றூலத்தைமுன்புகாட்டிச் சூக்குமசொருபமான
மூலத்தைப்பின்புகாட்ட முனிவரர்தொடங்கினுரோ.

(இ-ள்.) தாலத்தின் பூமியின்கண்ணுள்ள மாங்கள்காட்டிதருக்களைக்காண்பித்து தனிப்பிறைகாட்டுவார்போல தனியான மூன்றும்பிறையைத்தரிசிப்பவர்போல ஆலதிதுடுக்கள் காட்டி ஆகாயத்தின்கணுள்ள தாரகைகளைக்காட்டி அருந்ததிகாட்டுவார்போல் அருந்ததியைக்காண்பிப்பவர்போல தூலத்தைமுன்புகாட்டி தூலமாயுள்ள தத்துவங்களைமுன்னே தரிசிப்பித்து சூக்குமசொருபமான அணுவுக்கணுவானமூலத்தை காரணத்தை பின்புகாட்ட பின்றரிசிப்பிக்க முனிவரர்தொடங்கினுர் ஆசிரியராரம்பித்தார்-எ று. ஆலமென்பது ஆகுபெயர். (உரு)

(இ-ம்.) போதமாகும்படி போதிக்குமாறு கூறினதாம்:

(அ-கை:) தானுகிய சித்தைத்தனியே தரிசிப்பிக்குநிமித்தம் தன்னைச்சகசிவபரமாகத்தோற்றுவிக்கு மாரோபயுத்தியையும் அத்துவித யான கூடத்த பிரமமாகத் தோற்றுவிக்கு மபவாதயுத்தியையுங் கூறத்தொடங்கல்:

அத்தியாரோபமென்று மபவாதமென்றுஞ்சொல்லும்
முத்தியாற்பந்தம்வீடென றுரைக்கும்வேதாந்தமெல்லா
மித்தையாமாரோபத்தாற் பந்தமாமபவாதத்தான்
முத்தியாமிவ்விரண்டின் முந்தியாரோபங்கேளாய்.

(இ-ள்.) அத்தியாரோபமென்றும் அத்தியாரோபமென்று சொல்லும் உதத்தியாற்பந்தம் சொல்லுகின்றவுதத்தியினாற் பந்தமெனவும் அபவாதமென்றுஞ்சொல்லுமுதத்தியால் அபவாதமென்று சொல்லுகின்ற வுதத்தியினால் வீடென்றும் வீடெனவும் வேதாந்தமெல்லாம் உபநிடதபனைதது(ம்) உரைக்கும் சொல்லும் (ஆதலால்) மிதையா மாரோபத்தால் இல்லாத வாரோபத்தால் பந்தமாம் பெத்தமாம் அபவாதத்தால் அபவாதத்தினால் முத்தியாம் வீடாம் இவ்விரண்டில் இவ்விருவகையில் முந்தியாரோபங்கேளாய் முன்பாரோபததைக்கேட்பாய் எ-று. (இ-ம்) அத்தியாரோப அபவாதவிலக்கணங்கூறினதாம். (உரு)

(அ-கை.) அததியாரோப விலக்கணததைத் திஷடாந்த ரூபமாகக் கூறுதல்.

ஆரோபமததியாசங் கற்பனையாவ.வெல்லா
மோரோர்வஸதுவினை வேறே யோரோர்வஸதுவெனவோர்த
ருடுபணியாததோன்றனாணுகத்தறியிற்றோன்ற
னிருடுகானற்றோன்ற னிரந்தாம்வெளியிற்றோன்றல்:

(இ-ள்.) ஆரோபம் ஆரோபமென்றும் அததியாசம் அததியாசமென்றும் கற்பனை கற்பனையென்றும் ஆவவெல்லாம் ஆவனவனைததும ஓர்வஸதுவினை ஒவ்வொருபொருளை வேறே வேறான ஓர்வஸதுவென ஒவ்வொருபொருளென ஓர்தல் அறிதலாம் நாருடு பழுதையினிடதது பணியாததோன்றல் சர்ப்பந்தோற்றுதல் தறியில் கட்டையினிடதது நரனுகததோன்றல் மகனுகததோற்றுதல் கானலூடு கானலினிடதது நீர்தோன்றல் சலந்தோற்றுதல் வெளியில் ஆகாயததினிடததில் நிரந்தரந்தோன்றல் தாமின்மைதோற்றுதலும்-எ-று.

(அ-கை.) முற்கூறியதிஷ்டாந்தம்போலச் சுத்தசைதன்னியத்திற் சகசீவபரந்தோற்றுமெனல். (உஎ)

இப்படிப்போலநாம ரூபங்களிரண்டுமின்றி
யொப்பமாயிரண்டற்றொன்று புணர்வொளிநிறைவாய்நிற்கு
மப்பிரமத்திற்றோன்று மைம்பூதவிகாரமெல்லாஞ்
செப்பியகற்பிதத்தாற் செனித்தவென் றறிந்துகொள்ளே.

(இ-ள்) இப்படிபோல- இவைபோல- நாமரூபங்க ளிரண்டுமின்றி-நாமரூபமான விருதன்மைகளின்றி- ஒப்பமாய் ஒற்றுமையாயும் இரண்டற்



றொன்றாய்- துவிதமின்றியேகமாகியும்- உணர்வொளி நிறைவாய்-ஞானப்பிரகாசநிறைவாயும்- நிற்கும்- இருக்கின்ற- அப்பிரமத்திற்றோன்றும் அப்பிரமத்திற் றோற்றுகின்ற- ஐம்பூதவிகாரமெல்லாம் பஞ்சபூதமுதலியவேறுபாடனைத்தும் செப்பிய- சொல்லாநின்ற- கற்பிதத்தால் ஆரோபத்தால்- செனித்தவென்று - உண்டானவைகளென்று அறிந்துகொள் தெரிவாய்-எ-று.

(இ-உ-க-ம்) உள்ளதான சத்தியில்லாததான சகசீவபரந்தோன்று முறைமை யிங்ஙனமென்றுகூறினதாம். (உஅ)

(அ-கை) பிரமத்திற்கற்பிதமாகச் சீவேஸ்வரசகத்துண்டான முறையை யிருவகையாகக் கூறத்தொடங்கி முன்னரொருவகையைக் கூறுகின்றார்.

அதுதானெப்படியென் றக்காலநாதியாஞ்சீவரெல்லாம்
பொதுவானசுழுத்திபோலப் பொருந்துமவ்வியத்தந்தன்னி
லிதுகாலதத்துவப்பே ரீசனுட்பார்வையாலே
முதுமூலசுபாவம்விட்டு முக்குணம்வியத்தமாமே.

(இ-ள்) அதுதானெப்படியென் றக்கால் அக்கற்பனையெப்படி யுண்டாயிற்றெனின்- அநாதியாஞ்சீவரெல்லாம்- சிதரூபமான சீவர்களனைவரும் பொதுவான சுழுத்திபோல- சாதாரணமான சுழுத்தியைப்போற்சூனியமாயிருக்கின்ற- அவ்வியத்தந்தன்னில- மூலப் பிரகிருதியில்-பொருந்தும்- அமையும் - இது-இவ்வவ்வியத்தம்- காலதத்துவப்பேர்-நாமங்காலதத்துவமாம்- ஈசனுட்பார்வையால் ஈஸ்வரன் சமுகத்தினால்முதுமூலசுபாவம் விட்டு-முதன்மையானபிரகிருதியினின்றுநீங்கி- முக்குணம் வியத்தமாம்- மூன்றுகுணங்களும் வெளிப்படும்-எ-று. (உகூ

(அ-கை) முக்குணவியல்புகூறல்.

உத்தமவெளுப்புநீல முபயமாஞ்சிவப்புமாகுஞ்
சுத்தசத்துவந்தமத்தோ டசுத்தசத்துவப்பேர்சொல்லுஞ்
சத்துவமழுக்கிருட்டாச் சாற்றுமுக்குணமுமூன்று
யொத்துளவெனினுந்தம்மு ளொருகுணமதிகமாமே.

(இ-ள்.) உத்தமவெளுப்பு- முதலானவெண்ணிறமும் உபயமாஞ்சிவப்பும்- இரண்டாவதாஞ்செம்மைநிறமும் - நீலம்-மூன்றுவதானகருநிறமும்- ஆகும்- ஆகாநின்ற சுத்தசத்துவம்-தூய்தான சத்துவகுணமும்-அசுத்தசத்துவம்- ரசோகுணமும் தமத்தோடு- தமோகுணமுமென- பேர்சொல்லும் நாமங்கூறப்பெறும்- சத்துவம்- சத்துவமானசுத்தமும்-அழுக்கு-அழுக்கும்- இருட்டா- இருட்டுமாக- சாற்றும் - சொல்லப்பட்ட

மூக்குணமும் இம்மூன்றுகுணங்களும்- மூன்றுயொத்துள வெனினும்
மூன்றுகியொத்திருப்பவைகளாயினும்- தம்முள்- அவைகளுள் ஒருகு
ணமதிகாம்-இரண்டடங்கி யொருகுணம் விசேடித்து நிற்கும்-எ-று. ()
(இ-உ-க-ம்.) வித்தைவடிவான் சீவர்கள் பந்தப்பட்டிருக்குந் தங்கண்
மறதியான வெவ்வியத்தத்திற் காலதத்துவமு மூக்குணங்களும் வியத்த
மாயினவென்பதாம் (கூ0)

(அ-கை.) மற்றொருவகை சிருட்டியின்மாபுகூறத்தொடங்கல்.

ஒருவழியிதுவாமித்தை யொருவழிவேறுச்சொல்வார்
மருவுமவ்வியத்தந்தானே மகத்துவமாகுமென்று
மருண்மகதத்துவந்தா னகங்காரமாகுமென்றுங்
கருவகங்காரமூன்றுக் காட்டியகுணமாமென்றும்.

(இ-ள்.) ஒருவழியிதுவாம்- ஒருமார்க்கமிதுவாம்- இத்தை-இதையே
ஃதென்னவெனின்- மருவுமவ்வியத்தந்தானே- பொருந்தியவவ்வியத்த
மே- மகதத்துவமாகுமென்றும்- மகதத்துவமாமெனவும்- அருண்மகத
த்துவந்தான்- சொல்லியமகதத்துவமே - அகங்கார மாகுமென்றும் அக
ங்காரதத்துவமாமெனவும்- கருவகங்காரம் கருவாகியவகங்காரமே-மூன
றுய்க்காட்டிய குணமாமென்றும்- மூன்றுய்த் தெரிவித்த குணங்களா
மெனவுஞ்சொல்லப்படும்-எ-று.

சுத்தசைதன்னியமான தன்னையெதிரிட்டறியவுதயமான வறிவுக்குமு
ன்புண்டானமறதியே- அவ்வியத்தமான பிறகிருதியெனவும் - அவ்வறி
வுபகிர்முக வுன்முகமானவிடமே- மகதத்துவமெனவும்-அஃது தன்னிட
த்துப் பிரதிபலனமான ஆரோபத்தை நானென்பதே- அகங்காரதத்து
வமெனவும்- அதனிச்சலமே சத்துவமெனவும்- அதன்சலனமோ-ரசமெ
னவும்- அதன்மக்கினமே- தமமெனவுமுண்டானவகபத் சிருஷ்டியைத்
தனதனுபவத்திற்காண்க.

(அ-கை) மேற்கூறிய குணங்களிற்சகசிவபரவுற்பத்தியைக் கூறுவா
ன்றொடங்கிமுன்னர்பானுற்பத்தியைக்கூறுகின்றார். (கூக)

இக்குணங்களிலேவிண்போன் றிருக்குஞ்சிற்சாயைதோன்று
மூக்குணங்களினுந்தாய்தா முதற்குணமாயையாகு
மக்குணப்பிரமச்சாயை யந்தரியாமியாயை
யெக்குணங்களும்பற்றுதோ னிமித்தகாரணமாமீசன்.

(இ-ள்.) இக்குணங்களில் - இம்மூன்று குணங்களில்- விண்போன்
று - ஆகாயம்போல - இருக்கும் - நிரவயவமாயிருக்கின்ற சிற்சாயை
தோன்றும் - சிற்சாயைபிரதி பலிக்கும் - முக்குணங்களினும் - மூன்
று குணங்களினும் - தாய்தாமுதற்குணம் - சுத்தமாகிய சத்துவகுண



ம், மாயையாகும்-மாயையாம்- அக்குணம்- அந்தசத்துவத்திற் பிரதிபலி
த்த- பிரமச்சாயை- பிரமப்பிரதிபலனமே- அந்தரியாமி- அந்தரியாமியா
ம்- மாயையெக்குணங்களும்- மாயாசம்பந்தமான வெந்தக்குணங்களுங்-ப
ற்றுதோன்- பற்றுதவனே- நிமித்தகாரணமாமீசன்- பஞ்சபூதபவுதிகமு
தலிய சிருட்டிக்கு நிமித்தகாரணமாகியவீசனும்-எ-று. (கூஉ)

(அ-கை) ஈசன்காரண சரீரவுற்பத்தியையுஞ் சீவ னுற்பத்தியையுங்
கூறல்.

ஈசனுக்கிதுசுழுத்தி யிதுவேகாரணசரீரங்
கோசமானந்தமாகுங் குணமிராசதமவித்தை
தேசறுமவித்தைதோறுஞ் சிற்சாயைசீவகோடி
நாசமாமுயிர்க்கப்போது நாமமும்பிராஞ்ஞனுமே:

(இ-ள்.) ஈசனுக்கு- இவ்வீஸ்பரனுக்கு-இது-இம்மாயையே- சுழுத்தி
சுழுத்தியவத்தையாம்- இதுவே- இஃதே- காரணசரீரம்-காரணசரீரமா
ம்- கோசமானந்தமாகும்-இதுவேயானந்தமயகோசமாம்- குணமிராசதம்-
ரசோகுணம்- அவித்தை- அவித்தையாம்- தேசுறும் வித்தைதோறும்-
விளக்கமின்றியவித்தைகடோறும் பிரதிபலித்த- சிற்சாயை - ஞானப்பி
ரதிபலனமே- சீவகோடி- சீவராசிகளாம்- நாசமாம்-யாவையுமிறந்தசுழு
த்தியை யபிமானிக்கும்- உயிர்க்கு- சீவர்களுக்கு- அப்போது- அவ்வவ
சாத்தில்- நாமும்பிராஞ்ஞனும்-பெயர்பிராஞ்ஞனும்-எ-று. (கூகூ)

(அ-கை) சீவனதுகாரணசரீரவுற்பத்தியைக்கூறுகின்றார்.

அழுக்கொடுபற்றுஞ்சீவர்க் கதுவேயானந்தகோசஞ்
சுழுத்திகாரணசரீரஞ் சொன்னவிம்மட்டுமோக
முழுக்குணத்திரண்டால்வந்தால் மூலவாரோபஞ்சொன்னேம்
வழுத்துசூக்குமவாரோ வழியுநீபொழியக்கேளாய்.

(இ-ள்.) அழுக்கோடுபற்றும்- அவித்தையைச்சேர்ந்திருக்கின்ற-சீவ
ர்க்கு-சீவாகளுக்கு- அதுவே- அவ்வவித்தையே- ஆனந்தகோசம்- ஆன
ந்தமயகோசமாம்- சுழுத்தி-அஃதே சுழுத்தியவத்தையாம் - காரணசரீ
ரம்- அஃதேகாரணசரீரமாம்- சொன்னவிம்மட்டும்- சொல்லிய விதுபரிய
ந்தம்- மோகம்- மயக்கமாகத்தோற்றியபிரகிருதியின் - முழுக்குணத்தி
ரண்டால்வந்த- முழுதுமானசத்துவரசோகுணத்திலுண்டான- மூலவா
ரோபம்- காரணசரீர வத்தியாசத்தை- சொன்னேம்-உரைத்தோம்-வழு
த்தி சூக்குமவாரோபவழியும் - சொல்லப்பட்டசூக்குமசரீராத்தியாசமு
ண்டானமார்க்கத்தையும்- மொழிய - யாஞ்சொல்ல - நீகேளாய்-நீகேட்
டாய்-எ-று.

சுத்தசைதன்னியச்சாயை- அதனிடமாதலின் - அதனைப்பிரமகூடஸ்
தனெனவும்- அஃது- சத்துவரசோகுணத்திற் றங்குதலில் அக்குணங்க

ளைமாயையவித்தையெனவும்- அவற்றிற் பிரதிபிம்பித்தசாயை யாரோப
மாதலின்- அவற்றைச்சிவேஸவரரெனவும்- அம்மாயையவித்தைகள் மே
ல்விளைவுக்குக்காரணமாதலின்- அவைகளைக்காரணசரீர மெனவும் - அ
வைகளிலனைத்துமடங்கிநிற்றலே- சுழுத்தியவத்தையெனவும் - அவைக
ளிலன்புற்றுநிற்றலே- ஆனந்தமயகோசமெனவும்- அவைகளையபிமானித்
து நிற்பவரை- அந்தரியாமிபிராஞ்ஞ னெனவுங்கொள்க. (இ-உ-க-ம்.)சி
வேஸ்வரவுற்பத்தியும்- அவர்களுக்குண்டான காரணசரீரவத்தியாசமு
ங்கூறினதாம். (௩௪)

(அ-கை.) சிவேஸ்வரர்களுக்குச் சூட்சுமசரீரமுண்டான முறைமை
யைக்கூறுவான் ருெடங்கிமுன்புசத்திகளின் ருேற்றமுரைத்தல்.

ஏமமாயாவிநோத வீசனருளினலே
பூமலியுயிர்கட்கெல்லாம் போகசாதனமுண்டாகத்
தாமதகுணமிரண்டு சத்தியாய்ப்பிரிந்துதோன்றும்
வீமமாமூடலென்றும் விவிதமாந்தோற்றமென்றும்.

(இ-ள்.) ஏமமாயாவிநோத- மோகமாகியமாயையவிளையாட்டாகவுடை
ய- ஈசனருளினல்- ஈஸ்வரனுடையகிருபையினல்-பூமலியுயிர்கட்கெல்லா
ம்- பொலிவுமிகுந்த சீவர்களனைவர்க்கும்- போகசாதனமுண்டாக- அநு
பேர்கசாதனமுண்டாகும்பொருட்டு-தாமதகுணம்- தமோகுணமானது-
வீமமாமூடலென்றும்- பயங்கரமான வாவரணமெனவும்- விவிதமாந்தோ
ற்றமென்றும் நாநாவிதமாகும் விக்ஷேபமெனவும்- இரண்டுசத்தியாய்ப்
பிரிந்துதோன்றும்- இருசத்திகளாய்ப் பிரிந்துதோன்றும்-எ-று. (௩௫)

உயிர்கட்கெல்லாம் போகசாதனமுண்டாகவென்பதனுற் சீவர்கள் சம
ஷ்டியேயீஸ்வரனுதலின் அவ்வீஸவரனுக்குங்கொள்க.

(இ-ம்) தமோகுணப் பிரதிபலனமான சிற்சபையின் அறிவின்மையா
வாணமும் அறிவுவிக்ஷேபமுமென விரண்டுசத்திகளாயினவெனபதாம்.

(அ-கை) விக்ஷேபசத்தியிற் றன்மாத்திரையான சூட்சுமபூத வுற்ப
த்திகூறல்.

தோற்றமாஞ்சத்திதன்னிற் சொல்லியவிண்ணும்விண்ணிற்
காற்றதாங்காற்றிற்றீயாங் கனலிநீர்நீரின்மண்ணும்
போற்றுமிவ்வைந்துநொய்யபூதங்களென்றுபேராஞ்
சாற்றுமற்றிவற்றிற்போக சாதனதனுவுண்டாகும்.

(இ-ள்) தோற்றமாஞ்சத்திதன்னில்- விக்ஷேபசத்தியில்- சொல்லிய
விண்ணும்- சொல்லப்படுஞ் சத்ததன்மாத்திரையான வாகாயமுண்டா



ம்- விண்ணில்- அவ்வாகாயத்தில்- காற்றதாம்-பரிசதன்மாத்திரையான
வாயுவுண்டாம்- காற்றில்- அவ்வாயுவில்- தீயாம்-ரூபதன்மாத்திரையான
வக்கினியுண்டாம்- கனலில்- அவ்வக்கினியில்- நீர்- ரசதன்மாத்திரையா
னவப்புண்டாம்- நீரில்- அவ்வப்பில்- மண்ணும்-கந்ததன்மாத்திரையான
பிருதிவியுண்டாம்- போற்றும்- போற்றப்பட்ட- இவ்வைந்தும் - இத்த
ன்மத்திரைகளைந்தும்- நொய்யபூதங்களென்றுபேராம்- சூக்குமபூதங்க
ளென்றுநாமங்களாம்- சாற்றும்- சொல்லப்பட்ட- இவற்றில் இத்தன்மா
த்திரைகளில்- போகசாதனதனுவுண்டாகும்- அனுபோகத்துக்குச்சாத
னமான சூக்குமசரீரந்தோன்றும்-எ-று. (௩௬)

(அ-கை) தன்மாத்திரையின் சத்துவகுணத்தில்அந்தக்கரணஞானே
ந்திரிய வுற்பத்திகூறல்.

ஆதிமுக்குணமிப்பூத மடங்கலுந்தொடர்ந்துநிற்குங்
கோதில்வெண்குணத்திலைந்து கூறுணர்கருவியாகு
மோதியபின்னையைந்து முளம்புந்தியிரண்டாஞான
சாதனமாமிவ்வேழுஞ் சற்குணப்பிரிவினலே.

(இ-ள்.) ஆதிமுக்குணம்- உண்டானமூன்றுகுணங்களும் - இப்பூதம
டங்கலும்- இத்தன்மாத்திரைகளைந்திலும்-தொடர்ந்துநிற்கும்- கூடியி
ருக்கும்- கோதில்- குறறமற்ற- வெண்குணத்தில்- சத்துவகுணத்தில்
ஐந்துகூறு- வியஷ்டியானவைந்துபங்கும்- உணர்கருவியாகும்-ஞானேந்
திரியங்களாம்- ஓதியபின்னையைந்தும் - சொல்லப்பட்டசமஷ்டியானவை
ந்துபங்கும்- உளம்புந்தியிரண்டாம்· மனம்புந்தியென விரண்டாகும்-சற்
குணப்பிரிவினல்- சத்துவகுணஞ்சமாதலால்- இவ்வேழும்- இந்தவேழு
ம்-ஞானசாதனமாம்- அறிகருவிகளாம்-எ-று. (௩௭)

(அ-கை.) தன்மாத்திரையின் ரசோகுணத்தில் வாயுகன்மேந்திரியங்
களினுற்பத்திகூறல்.

இராசதகுணத்தில்வேறிட் டெடுத்தகூறைந்துமைந்தும்
பிராணவாயுக்களென்றும் பெருந்தொழிற்கன்மமென்றும்
பராவியபெயராமிந்தப் பதினேழுமிலிங்கதேகஞ்
சுராசுரர்நரர்விலங்காய்த் தோன்றியவுயிர்கட்கெல்லாம்.

(இ-ள்.) இராசதகுணத்தில்- ரசோகுணத்தில்- எடுத்தகூறைந்தும்-
எடுத்தொன்றாகவைத்தபங்கைந்தும்- பிராணவாயுக்களென்றும்- தனித்
தனியேயெடுத்தபங்கைந்தும்- பெருந்தொழிற்கன்மமென்றும்- பெரியகி
ரியையைச்செய்யுங் கன்மேந்திரியங்களெனவும்- பராவியபெயராம்- பாவி
யநாமங்களாம்- இந்தப்பதினேழும்- இப்பதினேழுதத்துவங்களும்- சுர
-தேவர்களும்- அசுர- அவுணர்களும்- நரர்- மனிதர்களும்- விலங்காய்-

மிருகங்களுமாகி- தோன்றிய- உண்டான- உயிர்கட்கெல்லாட் - சீவர்கள்
ளைவர்க்கும்- இலிங்கதேகம்- சூக்குமசரீரங்களாம்-எ-று. சிலநூலாசிரிய
ர் சூட்சுமதேகமிருபத்துநான்கு தத்துவமென்றதை இந்நூலாசிரியர்வி
டயமைந்தையும் ஞானேந்திரியத்திலடக்கியும்- அகங்காரத்தையுஞ்சித்
தத்தையு மனம்புத்தியிலடக்கியும் பதினேழாகக்கூறினரெனக்கொள்க.
(இ-௩-௧-ம்) சிவேஸவருக்குண்டான சூக்குமசரீரத்தியாசங் கூறி
னதாம்.

(அ-கை) சூக்குமதேகத்தினல்வருங்கற்பனநாமங்களைக்கூறல். (௩அ)

இ வ்வுடன்மருவுஞ்சீவற் கிலங்குதைசதனென்றுகு
மிவ்வுடன்மருவுமீசற் கிரணியகருப்பனுகு
மிவ்வுடலிரண்டுபேர்க்கு மிலிங்கசூக்குமசரீர
மிவ்வுடற்கோசமூன்று மிதுகனவவத்தையாமே.

(இ-ள்.) இவ்வுடல்- இவ்வியஷ்டிசூக்குமதேகத்தை- மருவுஞ்சீவற்கு
சோர்ந்தபிமானிக்குஞ்சீவனுக்கு- இலங்குதைசதனென்றுகும் - விளங்கா
நின்ற வபிமானிநாமத்தை சதனென்பதாம்- இவ்வுடல்- இச்சமஷ்டிசூக்
குமதேகத்தை- மருவுமீசற்கு- சேர்ந்தபிமானிக்கின்ற ஈஸவரனுக்கு இ
ரணியகருப்பனுகும்- அபிமானிநாம மிரணியகருப்பனென்பதாம் - இவ்
வுடல்- இச்சரீரம்- இரண்டுபேர்க்கும்- சிவேஸவரிருவர்க்கும் - இலிங்
கசூக்குமசரீரம்- சூக்குமசரீரமாம்- இவ்வுடல்- இச்சரீரத்துக்கு- கோச
மூன்றும்- பிராணமயமனோமய விஞ்ஞானமயமெனக் கோசங்கண் மூன்
றுகும்-இதுசனவவத்தையாம்- இதுசொற்பனவவத்தையாம்-எ-று.
தன்மாத்திரைகள் சூக்குமமாதலின் - அவற்றைச்சூக்குமபூதமெனவு
ம்- அவற்றின் றடிப்பைச் சூக்குமதேகமெனவும் - அஃதையபிமானிப்ப
வர்களை இரணியகருப்பன் தைசதனெனவும்- அஃதுமனோசச்சியஞ்செ
ய்தலைச் சொர்ப்பனவஸ்தையெனவும் அஃது பிராமணை புத்திகளாகத்
தன்னைமறைத்தலைக்கோசங்களெனவுங்கொள்க.

(அ-கை.) பஞ்சபூதபௌதிகமான சகத்துற்பத்தியைக்கூறுவான்றெ (௩௯)
டங்கி யஃதுண்டாகுதற் கேதுகூறுகின்றார்.

சூ க்குமசகமிம்மட்டுஞ் சொல்லினேமிப்பாற்றூல
மாக்குமாரோபந்தானு மடைவினின்மொழியக்கேளாய்
தாக்குமிவ்வுயிர்க்குத்தூல தனுவும்போகமுமுண்டாகக்
காக்குமிவ்வீசன்பஞ்சி காணங்கள்செய்தான்றனே.

(இ-ள்.) சூக்குமசகம்- சூக்குமசரீரப் பிரபஞ்சத்தை- இம்மட்டும்-இ
துபரியந்தம்- சொல்லினேம்- சொன்னேம்- இப்பால்-மேல்-தூலமாக்கு
தூலபூதமுந் தூலதேகமு முண்டாகும்) ஆரோபந்தானும்- அத்தியா



சத்தையும்- அடைவினில்- கிரமமாக- மொழியக்கேளாய்- சொல்லக்கே
ட்பாய்- தாக்குமிவ்வுயிர்க்கு சூக்குமசரீரத்திற் சேர்ந்திருக்கின்றவிச்
சீவர்களுக்கு தூலதனுவும்- தூலதேகமும்- போகமும் - அனுபோகமு
ம் உண்டாக- உண்டாகும்படி- காக்குமிவ்வீசன்- சீவர்களைப் பாதுகாக்
குமிவ்வீஸவரன்- பஞ்சிகாணங்கள் பஞ்சீகரித்தலை - செய்தான் - செய்
தனன்-எ-று. தனுவும்போகமுமென்ற வும்மையால் அண்டமும் புவன
முங்கொள்க. (௪௰)

(அ-கை) பஞ்சிகாணமும் அவற்றிலாகிய காரியமுங்கூறல்.

ஐ ந்துபூதமும்பத்தாக்கி யவைபாதிநந்நான்காக்கி
நந்துதன்பாதிவிட்டு நாலொடுநாலுங்கூட்ட
வந்தனதூலபூத மகாபூதமவற்றினின்றுந்
தந்தனநான்காந்தூல தனுவண்டபுவனபோகம்.

(இ-ள்.) ஐந்துபூதமும்பத்தாக்கி- தமோகுணப்பங்காகிய சூக்கும ப
ஞ்சபூதங்களைப்பத்துபங்குசெய்து- அவைபாதி- அவற்றிற் பகுத்தபா
தியை- நந்நான்காக்கி ஒவ்வொன்றை நான்குநான்குசெய்து - நந்துதன்
பாதிவிட்டு கேடில்லாத்தன்னம் சமானபாதிநீக்கி- நாலொடு - மற்றநா
ன்கொடு நாலுங்கூட்ட- நான்கையுஞ்சேர்க்க வந்தஅதூலபூதம்- தூல
பூதமுண்டாயிஅ- மகாபூதமவற்றினின்றும் தூலமாகிய வவைகளினின்
றும் தந்தன உண்டாக்கப்பட்டஅ- தூலதனு தூலசரீரமும் - அண்டம்
அண்டமும்- புவஅம் புவமும்- போகம் போகங்களுமாகிய-நான்காம்-நா
ன்காகும்-எ-று. அண்டமென்பது பஞ்சபூத சமஷ்டியெனவும் புவனமெ
ன்பது அவைகளினுள்ளபதப்பிராப்தி ஸதானங்களெனவுங்கொள்க.

(இ-உ-௧-ம்) சூட்சுமபூதத்தைப் பஞ்சிகரித்துத்தூலபூதமும் அவற் (௪௧)
றிற்றூலசரீரமுதலிய நான்குந் தோன்றினவென்பதாம்:

(அ-கை.) தூலதேகத்தினல் வருங்கற்பனநாமங்களைக்கூறல்.

தூ லமேமருவுஞ்சிவன் சொல்லியவிசுவனுகுந்
தூலமேமருமீசன் சூழ்விராட்புருடனுகுந்
தூலஞ்சாக்கிரவவத்தை சொன்னதோரன்னகோசந்
தூலகற்பனையிதென்று தொகுத்ததுமனத்திற்கொள்வாய்

(இ-ள்.) தூலமேமருவுஞ்சிவன் வியஷ்டிதூலதேகத்தைச் சேர்ந்த
பிமானிக்கிறசிவனுக் கபிமானிநாமம் சொல்லிய சொல்லப்பட்ட விசுவ
னுகும் விசுவனென்பதாம்தூலமேமருவுமீசன் சமஷ்டி தூலதேகத்தை
ச்சேர்ந்தபிமானிக்கின்ற வீஸவரனுக்கபிமானி நாமம் சூழ்விராட்புருட
னுகும் கருதாநின்ற விராட்புருடனென்பதாம் தூலம் இவையிருவருக்

குந் தூலதேகமாம் சாக்கிரவத்தை இவையிவ் விருவர்க்குஞ்சாக்கிரவ வத்தையாம் சொன்னது சொல்லியவிது அன்னகோசம் இவ்விருவர்க்கு மன்னமயகோசமாம் தூலகற்பனை யீதென்று தூலசரீரவத்தியாசமிது வென்றுதொகுத்தது தொகுத்துச்சொன்னதை மனத்திற கொள்வாய் மனதிலுணர்வாய்-எ-று.

தன்மாத்திரைமீசிரமானதைத் தூலபூதமெனவும் அஃதொரு ரூபமானதைத் தூலசரீரமெனவும் அஃதைஅபிமானிப்பவர்களை விசுவன் விராட்டெனவும் அதினின்று எதிரிட்டறிதலைச் சாக்கிராவத்தையெனவும் அஃதன்னமயமாதலின் அதனை அன்னமய கோசமெனவுங் கொள்க (இம்) அபிமானி நாமமுதலியவைகளுண்டான வத்தியாசங்கூறினதாம். (௪௨)

(அ-கை.) சிவேஸ்வரர்களுக்கு பாதியொன்றாயி னவர்கள் பேதமறிவதெங்ஙனமென்றவினாவுக்குத்தாம்.

சிரியவீசனுர்க்குஞ் சிவற்குமுபாதியொன்றே
லாரியகுருவேபேத மறிவதெப்படியென்றக்கா
காரியவுபாதிசிவன் காரணவுபாதியீசன்
வீரியமிகுசமட்டி வியட்டியாற்பேதமாமே.

(இ-ள்.) சிரியவீசனுர்க்கும் சிறப்பையுடைய வீசுவானுக்கும் சிவற்கும் சீவனுக்கும் உபாதியொன்றேல் உபாதியொன்றானல்- ஆரியகுருவே அறிவுருவாகியவாசிரியனே பேதமறிவது-சீவேஸ்வரரென்கிற வேற்றுமையறிவது- எப்படிஎன்றக்கால் எவ்வாறென்பாயாகில் காரியவுபாதியுள்ள சிவன் சிவர்கள் வியட்டியால் வியட்டியினுலும் காரணவுபாதி காரணோபாதியுள்ள ஈசன் ஈஸ்வரன் வீரியமிகுசமட்டி வீரமிகுந்தசமட்டியினுலும் பேதமாம்-பேதமாகும்-எ-று. (௪௩)

(அ-கை.) (இ-து.)

மரங்கள்போல்வியட்டிபேதம் வனமென்சமட்டிபேதஞ்
சரங்கடாபரங்கள்பேதந் தனியுடல்வியட்டியென்பார்
பரம்பியவெல்லாங்கூட்டிப் பார்ப்பதுசமட்டியென்பா
ரிரங்கியபலசிவர்க்கும் மீசற்கும்பேதமீதே.

(இ-ள்) மரங்கள்போல்- தருக்களைப்போல்- வியட்டிபேதம்-வியட்டியின்பேதமாம்- வனமெனல்- வனமென்பது- சமட்டிபேதம்-சமட்டியின் பேதமாம்- சரங்கடாபரங்கள்- சராசரவுயிர்களின்- பேதம்- பேதமான தனியுடல்- தனிமையானதேகத்தை வியட்டியென்பார் - வியட்டியென்று சொல்லுவார்கள்- பரம்பியவெல்லாங்கூட்டி- விரிந்ததூலதேக முதலியவனத்தையுஞ்சேர்த்து-பார்ப்பது சமட்டியென்பார் காண்பதுசமட்டியென்றுசொல்லுவார்கள் இரங்கிய- இரங்காநின்ற- பலசிவர்க்கும்- அனந்த



சிவர்களுக்கும்- ஈசற்கும்- ஈஸ்வரனுக்கும் - பேதமீதே - பேதமிதுவாம் -எ-று.

(இ-உ-க-ம்) சமட்டியினு லீஸ்வரனுக்குக் காரணோபாதியும் வியட்டியினுற் சிவனுக்காரியோபாதியுமாமென்பதாம். (௪௪)

(அ-கை.) அத்தியாரோபவுத்தியினுற் றன்னிடத்தி லாரோபமாகத் தோற்றின சசசிவபரங்களைக் கூறியவைகளுண்டான கிரமப்படியபபி க்குமபவாதவுத்தியைக் கூறத்தொடங்கல்.

கற்பனைவந்தவாறு காட்டினேங்காண்பவெல்லாஞ்
சொற்பனம்போலவெண்ணித் துணிந்தவன்ஞானியாவான்
செற்புதைமழைக்காலப்போய்த் தெளிந்தவாகாயம்போல
வற்புதமுத்திசேரு மபவாதவழியுங்கேளாய்.

(இ-ள்.) கற்பனைவந்தவாறு- ஆரோபமான சிருட்டியுண்டான முறையை- காட்டினேம்- அறிவித்தோம்- காண்பவெல்லாம்-திரிசியமனத்தையும்- சொற்பனம்போல்- கனவைப்போல- எண்ணித்துணிந்தவன் - கருதித்தெளிந்தவன்- ஞானியாவான்- அறிஞனவன்- செற்புதை - மேகமறைந்திருக்கின்ற- மழைக்காலம்போய்- வருஷகாலநீங்கி- தெளிந்த-வாகாயம்போல- சாற்காலத்திற்றெளிந்தவிண்ணைப்போல- அற்புதமுத்தி சேரும்- அறபுதமான மோக்ஷமடையும்-அபவாதவழியுங்கேளாய்-அபவாதமார்க்கத்தையுங் கேட்பாய்-எ-று: (௪௫)

(அ-கை.) அபவாதவிலக்கணங்கூறல்:

அரவன்றுகயிலென்றற்போ லாளன்றுதறியென்றற்போற்
குரவன்றனுபதேசத்தாற் கூறுநூல்வெளிச்சங்கொண்டு
புரமன்றுபுவனமன்று பூதங்களன்றுஞானத்
திரமென்றும்பிரமமென்றுந் தெளிவதேயபவாதங்காண்.

(இ-ள்.) அரவன்று- சர்ப்பமல்ல- கயிறென்றற்போல்-பழுதையென்பதுபோலவும்- ஆளன்று- மகனன்று- தறியென்றற்போல்- குற்றியென்பதுபோலவும்- குரவன்றனுபதேசத்தால்- ஆசிரியருபதேசமென்னுஞானக்கண்ணினல்- கூறுநூல்- தத்துவத்தைச்சொல்லும் ஞானசாத்திரப்பிரகாசத்தைக்கொண்டு - புரமன்றுங்களாகிய- வெளிச்சங்கொண்டு- தேகமுதலியதத்துவங்களன்று- ஞானத்திரமென்றும்- அவைசட்கதிட்டானமான கூடத்தசைதன்னியமெனவும்- புவனமன்று - புவனங்களுமன்று- பூதங்களன்று- பஞ்சபூதங்களுமன்று- பிரமமென்றும்- அவைகட்கதிட்டானமானபிரமமெனவும்- தெளிவதே அனுபவமாய்த் தெளிவதே அபவாதங்காண்-அபவாதமாம்-எ-று.

(இ-ம்.) புவனமென்பது- சகளீகரித்திருங் கயிலாசமுதலிய ஸதானமும்- பூதங்களென்பது- விராட்டுருவமுமெனக்கொள்க.

(இ-உ-க-ம்) ஆரோபத்தைநீக்கிபதிஷ்டானத்தைத்தரிசிப்பித்ததாம்.

(அ-கை:) அதிஷ்டானத்தைத்தவிரவாரோபமின்றெனல்:

படமுநூலும்போற்செய்தபணியும்பொன்னும்போற்பார்க்கிற்
கடமுமண்ணும்போலொன்றுங் காரியகாரணங்க
ளுடன்முதற்சுபாபமீரு யொன்றிலொன்றுதித்தவாறே
யடைவினிலொடுக்கிக்காண்ப தபவாதவுபாயமாமே.

(இ-ள்.) படமுநூலும்போல்- படாமுந்தந்துவும்போல - செய்தபணியுங்கொன்னும்போல்- செய்தவாபரணமுமாடகமும்போல கடமுமண்ணும்போல் கலசமுமிருத்துவும்போல பார்க்கில் பார்க்குமிடத்தில் காரியகாரணங்கள் காரியகாரணங்களிரண்டும் ஒன்றும் ஒன்றேயாம் உடன்முதற்சுபாவமீருய் தூலதேகமுதற் பிரகிருதிபரியந்தம் ஒன்றிலொன்றுண்டானபிரகாரம் அடைவினில் முறையாக ஒடுக்கி அடக்கி காண்பதுசுத்தப்பிரமத்தைத் தரிசிப்பது அபவாதவுபாயமாம் அவ்வபவாதயுத்தியாம்-எ-று.

(இ-ம்.) தன்னிடத்திற் கற்பிதமான சகசிவபாங்களைத் தனதுருவமாகவொடுக்கிக்காண்பதே யபவாதயுத்தியெனபதாம். (௩௭)

(அ-கை.) முற்கூறிய ஆவரணசத்தியிலிலக்கணம் யாதெனவினுதல்

தூடணதபத்தில்வந்த தோற்றமாஞ்சத்திசெய்பு
மீடணைவிகாரஞ்சொன்னீ ரிரண்டுசத்திகளென்றீரோ
மூடலாஞ்சத்திசெய்பு மோகமுஞ்சொல்லுமையா
கேடறுங்குருவேயென்னக் கிருபையோடருள்செய்வாரோ:

(இ-ள்.) தூடணதமததில்வந்ததூஷிக்கத்தக்க தமோகுணத்திலுண்டான தோற்றமாஞ்சத்திசெய்யும் விக்ஷேபசத்திசெய்யாநின்ற ஈடணைவிகாரஞ்சொன்னீர்இச்சாரூபப்பிரபஞ்சமுண்டான வேறுபாடுகளைச்சொன்னீர் இரண்டுசத்திகளென்றீரோ இரண்டுசத்திகளென்றுசொன்னீரோமூடலாஞ்சத்திசெய்யும் ஆவரணசத்திசெய்கின்ற மோகமும் மயக்கத்தையும் கேடறும் சத்தியமான குருவே ஐயாகுருசுவாமியே சொல்லுமென்ன அருளவேண்டுமென்றுகேட்க கிருபையோடு கருணையோடும் அருள்செய்வார் ஆசிரியாநுக்கிரகிப்பார்-எ-று.



(அ-கை.) ஆவரணசத்தியின்றன்மைகூறல்.

தானிகர்தனக்காமீசன் றனையுந்தங்களைத்தான்கண்ட
ஞானிகடமையுமன்றி நாஸ்திபாதியென்னு
மூனிறையுயிர்களுள்ளி னுணர்விழிக்குருடாம்வண்ணம்.
வானிலந்திசைகண்மூடு மழைநிசியிருள்போன்மூடும்.

(இ-ள்.) தானிகர்- தனக்காம்- தனக்குத்தானேசமானமாகிய சேன்றனையும்- பிரமமயமான வீசனையும் - தங்களைத்தான்கண்ட - தானுகிய கூடஸ்தனைத்தரிசித்த- ஞானிகடமையும்- ஞானவான்களையும் அன்றி அல்லாமல் - நாஸ்தி-இல்லை, பாதியென்னும் - இருக்கிற்காணுனேவென்கிறவிருமுகத்தினுல் ஊனிறை-தேகத்தில்வசிக்கும் உயிர்களுள்ளின்- சீவர்களகத்தின்விளங்கிய உணர்விழி ஞானதிருஷ்டியானது குருடாம்வண்ணம்- தெரியாதபடி- வானிலந்திசைகள் விண்மதிக்குகளை மூடும்-மூடுகின்ற- மழைநிசியிருள்போல்- கார்காலத்திரவினிருளைப்போல- மூடும்- ஆவரணசத்தியானது மறைக்கும் -எ-று. (இ-ம்.) கூடஸ்தப்பிரமங்களை மறையாம னவைகளினுரோபமான சீவேஸ்வரர்களை மறைக்குமென்பதாம். (௪௬)

(அ-கை.) (இ-து.)

மூன்றமாம்பிரமத்துக்கும் புறத்துளவிகாரங்கட்கு
மான்றகூடஸ்தனுக்கு மகத்துளவிகாரங்கட்குந்
தோன்றியபேதஞ்சற்றுந் தோன்றுமனமறைத்துமூடு
மூன்றியபவவியாதி யுண்டாக்குமுபாதியீதே.

(இ-ள்.) பூனிறமாம் பிரமத்துக்கும்- பூரணமான பிரமஸ்வரூபத்துக்கும்- புறத்துளவிகாரங்கட்கும்- புறம்பிலுள்ளவீசன்முதலிய வேறுபாடுகளுக்கும்- ஆன்றகூடஸ்தனும்- மாக்ஷிமையான கூடஸ்தனுக்கும்-அகத்துளவிகாரங்கட்கும்- அகத்திலுள்ளசிவன்முதலிய வேறுபாடுகளுக்கும்- தோன்றியபேதம்- உண்டானசிற்சடபேதங்களை - சற்றுந்தோன்றாமல்- எவ்வளவுந்தோன்றாமல்- மறைத்துமூடும்- மறைக்கும்-ஊன்றியதிரமான-பவவியாதி- பவப்பிணியை உண்டாக்கும்- விளைக்கும்-உபாதி உபாதியானது ஈதே- இவ்வாவரணசத்தியேயாம்-எ-று. (இ-ம) அதிஷ்டானவாரோபங்களின் பேதந்தெரிய வொட்டாமனுஸ்தி - பாதியென்னு மிருமுகத்தான் ஞானதிருஷ்டியைமறைக்குதல்ஆவரணசத்தியின்றன்மையென்பதாம். (௫௰)

(அ-கை.) அதிஷ்டான திருட்டிசாமானியமாகத் தோற்றிய பின்வாரணஅஃது மறைபடுபோது மறைபடாதபோது மாரோபந்தோன்றக் கணக்கில்லையே யென்றசிடனைநோக்கி யவ்வதிஷ்டான விலக்கணத்தை இரண்டுவிதமாகக்கூறுகின்றுர்.

ஆ தாரமறைந்துபோனு லாரோபமெங்கேதோன்று
மாதாரமறையாதாயி னாரோபமிலேயேயென்று
லாதாரசமம்விசேட மாமெனவிரண்டுகூறு
மாதாரஞ்சமமாமெங்கு மாரோபம்விசேடமாமே.

(இ-ள்.) ஆதாரமறைந்துபோனால்- விம்பமறையுமானால்- ஆரோபமெ
ங்கேதோன்றும்பிரதிவிம்ப மெங்ஙனந்தோன்றும் ஆதாயமறையாதாயி
ல்- விம்பமறைவில்லையெனில்- ஆரோபமிலேயேயென்றால்- பிரதிவிம்பமி
ல்லேயேயெனின்- ஆதாரம்- ஆதாரமானது- சமம்- விசேடமாமென சம
மாமெனவும்- விசேடமாமெனவும் இரண்டுகூறும்-இரண்டுவகையாம் ச
மம் சமமானது எங்கும்- எவ்விடத்துமுள்ள- ஆதாரமாம்-ஆதாரமாகும்
விசேடம்-விசேடமானது- ஆரோபமாம்-கற்பிதமாம்-எ-று.

(இ-ம்.) ஆதாரமான சுத்த சைதன்னியம் பூரணமான கூடஸ்தபிரம
மாக விளங்குமிடத்திற் சமமெனவு மதனி லுதபமானவறிவு சிவேஸ்வ
ரசகத்தாகவிரிந்தொடுங்குமிடத்து விசேடமெனவு மிங்ஙனமுதித்தொ
டுங்கு மறிவுண்மையாயினு மக்கிரியைக்கண் மித்தையாதலி னவ்விசேட
த்தை யாரோபமெனவுங்கொள்க. (௫௧)

(அ-கை.) (இ-து.)

ச கமதிலிதுவென்சுட்டாச் சமானக்கண்மறைந்திடாது
மிகவுளாகயிறும்பாம்பும் விசேடங்கண்மறைந்துபோகு
மகமெனுஞ்சமானந்தன்னை யஞ்ஞானமறைத்திடாது
பகர்வதோர்விசேடஞ்சிவன் பானெனுமவளைமூடும்.

(இ-ள்.) சகமதில்- உலகத்தின்கண்- இதுவென்சுட்டா-இதுவென்று
சுட்டப்படாத- சமானக்கண்- சமமாகியகண்கள்- மறைந்திடாது - ஒன்
றுமறைக்கப்படாது- மிகவுளா கயிறும்பாம்பும்- மிகவுஞ் சொல்லாநின்ற
பழுதையுஞ்சர்ப்பமுமாகிய- விசேடங்கண்மறைந்துபோகும்- விசேடமா
கத்தோன்றினவையென்று- மறைக்க- மறைபடும்- (அதனைப்போல்)அ
கமெனுஞ்சமானந்தன்னை- தானென்னுங் கூடஸ்தபிரமத்தை-அஞ்ஞா
னமறைத்திடாது- அறியாமையான வாவரணமறைக்கமாட்டாது- பகர்
வதோர்விசேடம்- சொல்லப்பட்ட ஓர்விசேடமாகிய- சிவன்பானெனும்-சீ
வேஸ்வரனென்கிற- அவளைமூடும்- அவர்களைமறைக்கும் -எ-று. சீவன்ப
ரனென்னு மவளைமூடுமென்றது அவர்களுணர்வையெனவும்- அஞ்ஞா
னமறைத்திடாதென்று- ஆவரணமறைத்திடாதெனவுங்- கானலிருக்கு
மிடத்துச்சலந்தோற்றுதலும் அக்கானலாய்ப் பார்க்குமிடத்தஃது தோ
ற்றியுமில்லாததுபோல ஆதாரமிருக்குமிடத் தாரோபந்தோற்றுதலும்-



அவ்வாதாரமாய்ப்பார்க்குமிடத் தஃதுதோற்றியுமில்லாத தேயமாமென
க்கொள்க.

(இ-ம்:) ஆரோபமான சிவேஸ்வரனைத் தமக்காதாரமான கூடஸ்தபி
ரமத்தைப் பார்க்கவொட்டாம லவாதுணர்வையிவ்வாவரணமறைக்குமே
யன்றி யாதாரத்தை மறைக்கமாட்டாதெனபதாம். (௫௨)

(அ-கை.) அவ்வுணர்வை மனமுதலாகத் தோன்றின விட்சேபகாரிய
மறைத்ததேயன்றி ஆவரணமெங்கேமறைத்ததெனல்.

கே வலங்கிலேதோன்றுமற் கெடுத்ததுபஞ்சகோசஞ்
சிவனுஞ்சகத்துமாகிச் செனித்தவிக்ஷேபமன்றோ
வாவரணந்தானேபா ழார்த்தமென் றுளைத்ததேதோ
மேவருங்குருவேயென்று வினவினமகனேகேளாய்.

(இ-ள்.) கேவலங்கிலேதோன்றுமல்- முத்திநிச்சயந்தோன்றுமல்- கெடு
த்தது-அழித்தது- பஞ்சகோசம்- பஞ்சகோசமும் - சீவனும்-சிதாபாசனு
ம்- சகத்துமாகி- உலகமுமாய்- செனித்தவிக்ஷேபமன்றோ-உண்டானவி
ட்சேபமல்லவா- அங்ஙனமிருக்க ஆவரணந்தானே- ஆவரணமே- பாழ்-
பாழெனவும்- அனர்த்தமென்று - அனர்த்தமெனவும் - உளைத்ததேது-
சொல்லியதென்ன- மேவருங்குருவேயென்று-அடைதற்கரிய வாசிரியரே
யென்று- வினவினமகனே- கேட்ட- மாணாக்கனே- கேளாய்-நீகேட்டா
என்றவாறு.

ஆனந்தமயகோசமுஞ் சீவனும் விட்சேபகாரியங்க ளல்லாதனவாயிரு
க்கவங்கனங்கூறிய தென்னேயெனின் - அந்தக்காணப்பிரதிபலன்சீவனு
ம் அவனறியாமை யானந்தமய கோசமுமாதலா லிங்ஙனங் கூறியதெனக்
கொள்க (இ-ம்) வெளிப்படை. (௫௩)

(அ-கை) விட்சேபசத்தியின லுண்டாகு நன்மையு மாவரணசத்தி
யிலுண்டாகுந்தீங்கையுங்கூறுகின்றார்.

தோ ற்றமாஞ்சத்திதானே துன்பமாம்பவமானலு
மாற்றலான்முத்திசேர்வார்க் கனுகூலசகாயமாகு
மூற்றமாம்பகற்காலம்போ லுபகாரசியினுண்டோ
மாற்றமென்னுளைப்பேன்மைந்தா மறைப்பதுமிகப்பொல்லாதே.

(இ-ள்) தோற்றமாஞ்சத்திதானே- விட்சேபசத்தியே துன்பமாம்பவ
மானலும்- துன்பத்தைக்கொடுக்கின்ற தேகமுதலியவைகளானலும்-ஆ
ற்றலான-முயற்சியினால்- முத்திசேர்வார்க்கு- வீடடைபவர்களுக்கு- அ
னுகூலசகாயமாகும்- அதுமிகவுஞ்சகாயமாம்-ஊற்றமாம்- அறிதற்குதவி
யாம்- பகற்காலம்போல்- இரவைப்போல உபகாரம்- சகாயமானது - நி
சியினுண்டோ- இரவிலுளதோ- மாற்றமென்னுளைப்பேன் என்னசொ

ல்வேன்- மைந்தா-மகனே மறைப்பது- மூடுகின்றவாவரணம்- மிகப்பொல்லாது-மிகவும்பொல்லாததாம்-எ-று. (௫௪)

(அ-கை.) இன்னுமதனைவற்புறுத்தல்.

சுழுத்தியிற்பிரளயத்திற் றோற்றமாஞ்சகங்கண்மாண்டு
மழுத்தியபவம்போய்முத்தி யடைந்தபேரொருவருண்டோ
முழுத்தவிட்சேபமெல்லா முத்தியிறகூட்டுகிறகுங்
கொழுத்தவாவரணமுத்தி கூடாமறகெடுத்தகேடே.

(இ-ள்) சுழுத்தியில்- நித்தியப்பிரளயமாகியசுழுத்தியிலும்- பிரளயத்தில்- பிரமப்பிரளயத்திலும்-தோற்றமாஞ்சகங்கண்மாண்டும்- உண்டான வுலகமுதலியவைகண்டித்தும்- அழுத்தியபவம்போய் - நற்கதியிலமிழ்த்தியசனனநீங்கி- முத்திவீட்டை- அடைந்தபோ- பெற்றவர்கள்- ஒருவருண்டோ- ஒருவருளரோ- முழுத்தவிட்சேபமெல்லாம்- முழுதும் விட்சேபகாரியமான வனைத்தும்- முத்தியிறகூட்டுகிற்கும்- வீட்டிற் சேர்க்கும்- கொழுத்த- அறியாமைமிகுந்த- ஆவரணம்- ஆவரணமானது-முத்திகூடாமல்-வீட்டைச்சேராமல்-கெடுத்தகேடு- கெடுத்தகேடாம்-எ-று.

(ப-ம்.) மனோதியாதினாற் பரமசுகத்தையடைதலின்- விட்சேபமெல்லா முத்தியிற் கூட்டுகிற்குமென்றார் (இ-உ-க-ம்) முத்தியை யடைதற்கு அரிதலுள்ளவிட்சேபஞ்சாதனமாமேயன்றி- அறியாமையான வாவரணமாகாதென்பதாம்.

(அ-கை.) மித்தையான விட்சேபசத்தியினால் வெளிப்படுமுத்தியுமித்தையேயாமெனி லங்ஙனமாகாதெனல்.

சுத்தியில்வெள்ளிபோலத் தோன்றியதோற்றமான
சத்தியும்பொய்யேயென்றாற் சத்திசாதனமாவந்த
முத்தியும்பொய்யாமென்னின் மோகநித்திரைவிலங்கா
னித்திரைதெளியுமாபோ னிருவாணமிலைமெய்யாமே:

(இ-ள்.) சுத்தியில்- வெள்ளிபோல- கிளிஞ்சிலில்-ரசிதாரோபம்போலதோன்றிய-உண்டான-தோற்றமானசத்தியம்- விட்சேபசத்தியும்-பொய்யேயென்றால்- மித்தையாயின் - சத்திசாதனமாமந்த-அச்சத்திசாதனமாக உண்டான- முத்தியும்-வீடும்- பொய்யாமென்னில் - மித்தையமென்னின்- மோகநித்திரைவிலங்கால்- மோகமான சொர்ப்பன சிம்மத்தினால் நித்திரைதெளியுமாபோல்- நித்திரைதெளிந்து சாக்கிரம்வருவதுபோல் நிருவாணமிலை- அச்சத்தியினாலுண்டாகு முத்தியிலையும்- மெய்யாம்- உண்மையேயாமென்றவாறு:

(இ-ம்.) மித்தையான சொர்ப்பவசிம்மத்தினாலுண்டான சாக்கிரஞ்சத்தியமானதுபோல மித்தையான விட்சேபசத்தியின் காரியமான தினாலுண்டானவீடும் சத்தியமேயாமென்பதாம். (௫௬)



(அ-கை.) இச்சத்திகளின் காரணமான மாயைகளேக்குமேதுகூறல்

இப்பரினஞ்சைநஞ்சா லிரும்பினையிரும்பாலெய்யு
மம்பினையம்பாற்பற்று மழுக்கினையழுக்கான்மாய்ப்பர்
வம்பியன்மாயைதன்னை மாயையான்மாய்ப்பர்பின்னைத்
தம்பமாயதுவுங்கூடச் சவஞ்சுடுதடிபோறபோமே.

(இ-ள்.) இப்பரில்- இவ்வுலகத்தில்- நஞ்சை - சர்ப்பந்தீண்டின விஷத்தை- நஞ்சால்-ஒருவிதமானவிஷத்தினாலும்- இரும்பினை- அயத்தை-இரும்பால்-அரவயத்தினாலும்- எயுமம்பினை- விடுமம்பை- அம்பால்-அதற்குப்பகையானவம்பினாலும்- பற்றுமழுக்கினை- பிடித்தவழுக்கை-அழுக்கால்-அஃதைநீக்குமழுக்கினாலும்- மாய்ப்பர்- கெடுப்பார்கள்(அங்ஙனம்) வம்பியன்மாயைதன்னை- அசுத்தமாயை- மாயையால்-சுத்தமாயையால்- மாய்ப்பர்- கெடுப்பார்கள்- பின்னை-பின்பு - தம்பமாமதுவும்-பற்றுகோடானவசுத்தமாயையும்- கூட- அச்சுத்தமாயையோடுங்கூட- சவஞ்சுடுதடிபோல்- பிரேதத்தகனஞ்செய்யுந் தண்டமதனோடுவேவுதல்போல- போம்-கெடும்-எ-று.

(இ-ம்.) சகத்ரூபமான வசுத்தமாயையை-சித்ரூபமான சுத்தமாயையினாற்கெடுத்தவிடத்துதயமான பராஞானத்திற் சுத்தமாயையும்அசுத்தமாயையோடு கெடுமென்பதாம். (௫௭)

(அ-கை) ஆத்துமாக்களுக்கிவ்விருவிதமான மாயைகளாற் சத்தாவத்தைகள் வருவாறுமவற்றினுமமுங்கூறல்:

இந்தமாயையினாற்சீவர்க் கேழவத்தைகளுண்டாகு
மந்தவேழவத்தைத்தம்மை யடைவினின்மொழியக்கேளாய்
முந்தவஞ்ஞானமூடன் முளைத்தல்காணுதஞானஞ்
சந்ததங்கண்டஞானந் தழல்கெடல்குளிர்மையாதல்.

(இ-ள்.) இந்தமாயையினால்- இம்மாயையால்- சீவர்க்கு- சீவர்களுக்கு-எழவத்தைகளுண்டாகும்- சத்தாவத்தைகளுளவாய் - அந்தவழவத்தைதம்மை- அவ்வேழவத்தையினுமங்களை- அடைவினில்-கிரமமாக-மொழியக்கேளாய்- சொல்லக்கேட்பாய்- முந்தவஞ்ஞானம்- முன்னமஞ்ஞானமும்- மூடல்- ஆவரணமும்- முளைத்தல்-விட்சேபமும்-காணுதஞானம்-பரோட்சஞானமும்- சந்ததங்கண்டஞானம்-நித்தியாபரோட்சஞானமும்- தழல்கெடல்- துக்கநிவர்த்தியும் குளிர்மையாதல்- தடையற்றவானந்தமுமாம்-எ-று. (௫௮)

(அ-கை) அச்சவத்தாவத்தைகளின் றன்மையைக்கூறல்,

பிரமமாந்தனைமறந்த பேதமையேயஞ்ஞானம்
பரமிலைகாணேமென்று பகர்தலாவரணமூட

ஊறிஞெருகருத்தாற்சிவ ஞனெனமுளைத்தரேற்றங்
குரவன்வாக்கியத்தாற்றன்னைக் குறிக்கொளல்பரோட்சஞானம்.

(இ-ள்.) பிரமமாந்தனை- பிரமஸ்வரூபமாகியதன்னை - மறந்தபேதமையே-மறந்தவறிபாமையே- அஞ்ஞானம்- அஞ்ஞானமாம்- பாரிலே- பிரமமிலே- காணேபென்று- இருந்தாற்காணுணுமென்று- பகர்தல- சொல்லுதல்- ஆவாணமூடல்- ஆவாணசத்தியாம் - நானொருகருத்தால் - புருடனோர்வினைப்பினல்- சிவனுனெனல்- சிதாபாசனுனெனல்- முளைத்தரேற்றம்- விட்சேபசத்தியாம்-குரவன்வாக்கியத்தால்- ஆசிரியருபதேசத்திஞல்தன்னைக்குறிக்கொளால்- பிரமத்தைக்குறிப்பாகத் தெரிந்துகொள்ளுதள்- பரோக்ஷஞானம்-பரோக்ஷஞானமாம்---எ-று. (ருக)

(அ-கை.) (இ-து.)

தத்துவவிசாரஞ்செய்து சகலசந்தேகமும்போ
யத்துவிதந்தானுத லபரோட்சஞானமாகுங்
கத்தனுஞ்சிவபோதங் கழிவதேதுக்கம்போதன்
முத்தனுயெல்லாஞ்செய்து முடிந்ததானந்தமாமே.

(இ-ள்:) தத்துவவிசாரஞ்செய்து - தறபதசொம்பதம்விசாரித்து-சகலசந்தேகமும்போய்- எல்லாவையமுநீங்கி- அத்துவிதந்தானுதல்- கூடஸ்தபிரமவைக்கியமான வத்துவிதஸ்வரூபந்தானுக விளங்குதல் - அபரோட்சஞானமாகும்- அபரோட்சஞானமாம்- கத்தனுஞ்சிவபேதம்- அகமபாவமானசிவேஸ்வரபேதம்- கழிவதே- நீங்கலே- துக்கம்போதல்- துக்கநிவர்த்தியாம்- முத்தனுய்- சிவன்முத்தனுய்- எல்லாஞ்செய்துமுடிந்தது: கிருதகிருத்தியமானது- ஆனந்தமாம்- தடையற்ற வானந்தமாம்-எ-று.

(இ-ரு-க-ம்.) அஞ்ஞானமாவாணமிரண்டும்- அசுத்தமாயாசம்பந்தமாம்- விட்சேபமபரோட்சமிரண்டுஞ்- சுத்தாசுத்தமாயா சம்பந்தமாம்- அபரோட்சமுதலியமூன்றுஞ்- சுத்தமாயாசம்பந்தமாம்- அவைகளில்அபரோட்சஞானத்திஞல் பரோட்சமும் விட்சேபசத்தியின்காரியமான இரிஸ்யமும் துக்கநிவர்த்தியி ஞுவாணமும் தடையற்றவானந்தத்திஞலஞ்ஞானமுநீங்கும் அவைகணீங்கவே யிவைகளுமங்களுநீங்கி நிரதிசயானந்தமாகத்தானே விளங்குமென்பதாம். (சூய)

(அ-கை.) அச்சத்தாவத்தையை விளக்குநிமித்தந்தசபுமான் திட்டாந்தங்கூறல்.

இதுநினக்கறியும்வண்ண மிப்படி ஒருதிட்டாந்தம்
புதுமையாங்கதைகேள்பத்துப் புருடரோராறுநீந்தி
யுதகதீரத்திலேறியொருவனுென்பதுபேரெண்ணி
யதனேடுதான்பத்தாளென் றறியாமன்மயங்கிநின்ருன்:



(இ-ள்.) இதுநினைக்கறியுவண்ணம்- இஃதுனக்குத்தெரியும்படி- இப்படி-இவ்வண்ணம்- ஒருதிட்டாந்தம்- ஒருதிட்டாந்தமாக- புதுமையாங்கதைகேள்- வியப்பானவோர்சரித்திரங் கூறுவன்கேட்பாய்- பத்துப்புருடர்-பதின்மர்- ஓர்நதியைநீந்தி- உதகதீரத்திலேறி - நதிக்கரையிலேறி- ஒருவன்- ஒருபுருடன்-ஒன்பதுபேரெண்ணி- ஒன்பதுபேரையெண்ணி- அதனேடு- அவர்களோடு- தான்- எண்ணினதான்- பத்தானென்றறியாமல்- தசமனென்றுதெரியாமல்- மயங்கிநின்ருன்- பிரமித்துநின்ருன்--எ-று. (சூக)

(அ-கை.) திட்டாந்ததாட்டாந்தங்களுக்கொப்புமைகாட்டல்.

அறியாமயலஞ்ஞான மவனிலைகாணேமென்றற்
பிரியாவாவரணமாகும் பீடைகொண்டழல்விட்சேப
நெறியாளன்றசமனுண்டு நிற்கின்ருனென்றசொல்லைக்
குறியாகவெண்ணிநோக்கிக் கொள்வதுபரோட்சஞானம்:

(இ-ள்.) அறியாதமயல்- தன்னைத்தெரியாதமயக்கமே - அஞ்ஞானம்- அஞ்ஞானமாம்- அவனிலே- அத்தசமனில்லை- காணேமென்றல்- இல்லாமையாறகாணிலோமெனல்- பிறியாவாவரணமாகும்- அறியாமைநீங்காதவாவரணமாம் நீடைகொண்டழல்- தசமனைக்காணேமென்று - துன்பமுற்றலறல்- விட்சேபம்- விட்சேபமாம்- நெறியாளன் - வழிச்செல்வோனிவன்கருத்தைக்கண்டு- தசமனுண்டு- பதின்மனுளன்- நிற்கின்ருனென்றசொல்லை- இவ்விடத்திலிருக்கிருனென்று சொல்லியவசனத்தை-குறியாகவெண்ணி- குறிப்பாகநினைத்துநோக்கிக்கொள்வது-அறிந்துகொள்வது-பரோட்சஞானம்-பரோட்சஞானமாம்-எ-று.

(அ-கை.) (இ-து.)

புண்ணியபதிகன்பின்னும் புருடரொன்பதின்மர்தம்மை
யெண்ணியநீபத்தாவா னென்னவேதன்னைக்காணல்
கண்ணினிற்கண்டஞானங் கனைதல்போவதுநோய்போத
லிண்ணியமனதிலையந் தெளிதலானந்தமாமே.

(இ-ள்:) புண்ணியபதிகன்- புண்ணியவானுன நெறிச்சொல்வோன்-பின்னும்-பின்பும்- புருடரொன்பதின்மர்தம்மை- புமான்களொன்பதுபெயரை- எண்ணியநீ-எண்ணினநீ- பத்தாவானென்னவே - தசமனுமென்று சொல்லவே- தன்னைக்காணல்- தன்னைத்தசமனுகக் காண்டல்- கண்ணினிறகண்டஞான- அபரோட்சஞானமாம்- கனைதல்போவது- அழுகைநீங்கினது- நோய்போதல்- துக்கநிவர்த்தியாம்- திண்ணியமனதில்-வன்

மையானவுளத்தில்- ஐயந்தெளிதல்-சந்தேகந்தீர்தல்-ஆனந்தமாம் தடைபற்றவானந்தமாம் என்றவாறு.

(இ-உ-க-ம்:) தசமன்றிட்டாந்தத்தினாற் றன்னை மறந்ததனால்வந்த வுபாதிகளையும் தத்தரிசனத்திலவைகணீக்கத்தையுங்கூறினதாம்: (௬௩)

(அ-கை.) தசமன்றன்னைத்தானெனக் கண்டதுபோலத் தன்னைத்தானகத் தரிசிப்பிக்கவேண்டுமென்ற சிடனை நோக்கி மகாதாக்கியார்த்த நிருபகத்தினாலத்துவிதமான தன்னை அறிவிக்கத்தொடங்கல்:

தெசபுமான் றனைக்கண்டாறபோற றேசிகமூர்த்தியேயென்
னிசவடிவினையான்காண னீர்காட்டல்வேண்டுமென்றான்
சுசிபெறுமிலக்கியார்த்தந் தொம்பதந்தற்பதங்க
ளசிபதமயிக்கியஞ்செய்யு மதிசயவுண்மைகேளாய்.

(இ-ள்:) தெசபுமான் பதின்மனானவன் தனைக்கண்டாறபோல்தன்னைக்கண்டதுபோல் தேசிகமூர்த்தியே ஆசாரியரோ என்னிசவடிவினை என் தத்துவஸ்வரூபத்தை யான்காண் நான்றரிசிக்கும்படி நீர்காட்டல்வேண்டுமென்றான் தேவரீர்காண்பிக்கவேண்டுமென்று கேட்டான் தொம்பதந்தற்பதங்கள் நீயதுவென்னும் பதங்களின் சுசிபெறு மிலக்கியார்த்தம் பரிசுத்தவிலக்கியார்த்தமானகூடஸ்தபிரமத்தின் ஐக்கியம் ஐக்கியத்தை அசிபதம் ஆனாயென்னும்பதமானது செய்யும் காட்டும் அதிசயவுண்மை கேள் அற்புதமான வுண்மையைக்கேட்பாய்: (௬௪)

(அ-கை,) ஒன்றான சைதன்னியமே நான்கு சைதன்னியமாகத் தோன்றுமெனல்,

விண்ணொன்றேமகாவிண்ணென்று மேகவிண்ணென்றும்பாரின்
மண்ணென்றகடவிண்ணென்று மருவியசலவிண்ணென்று
மெண்ணுங்கற்பனைபோலென்றே யெங்குமாம்பிரமமீச
னண்ணுங்கூடஸ்தன்சீவ னான்குசைதன்யமாமே,

(இ-ள்) விண்ணொன்றே ஆகாயமொன்றே மகாவிண்ணென்றும் மகாகாயமெனவும் மேகவிண்ணென்றும் மேகசலப்பிரதிவிம்பாகாயமெனவும் மண்ணென்ற கடவிண்ணென்றும் மிருத்துவென்றகடாகாயமெனவும் மருவிசலவிண்ணென்றும் அதிற்பொருந்தியகடசலப்பிரதிவிம்பாகாயமெனவும் எண்ணுங்கற்பனைபோல் நினைக்கப்பட்ட கற்பிதத்தைப்போல் ஒன்றே ஏகமானசுத்த சைதன்னியமே எங்குமாம்பிரமம் பூரணமானபிரமமெனவும் ஈசன் ஈஸ்வரனெனவும் நண்ணுங்கூடஸ்தன் பொருந்திய



னுங்கூடஸ்தன்- பொருந்தியகூடஸ்தனெனவும்- சீவன்-சீவனெனவும் நான்குசைதன்யமாம்- நான்குசித்துக்களாம்-எ-று: (௬௫)

(அ-கை.) ஆரோபசைதன்னியத்தைநீக்கி யதிஷ்டான சைதன்னியத்தை யடையவேண்டுமெனல்.

பூச்சியவீசன்சீவன் புகல்பதமிரண்டினுக்கும்
வாச்சியமிலக்கியந்தான் மலமிலாப்பிரமமாத்மா
காச்சியபாலினெய்போற் கலந்தொன்றுங்கடைந்தெடுக்கு
மாச்சியமென்னவுன்னை யறிந்துநீபிரிந்துகொள்ளே.

(இ-ள்.) புகல்-மகாவாக்கியத்திற் சொல்லும்- பதமிரண்டினுக்கும்-தற்பதந்தொம்பதமான விருபதங்கட்கும்- வாச்சியம்- வாச்சியார்த்தமான, பூச்சியவீசன்சீவன் - ஆரோபமானசீவேஸ்வராராம், இலக்கியந்தான்- இலக்கியார்த்தமானது- மலமிலாப்பிரமமாத்மா-நிர்மலமான பிரமகூடஸ்தராம், காச்சினபாலில் - காச்சியபாலில், நெய்போல் - வெண்ணெயைப்போல், கலந்தொன்றும்- சடத்திற்சேர்ந்தொருமித் திருக்கின்ற, உன்னையறிந்து- ஆத்மாவைத்தரிசித்து, கடைந்தெடுக்கு மாச்சியமென்ன-கடைந்தெடுத் துருக்கியநெய்போல்- நீபிரிந்துகொள்-நீயனாத்மாவினின்றுபிரிவாயாக-எ-று.

(இ-உ-க-ம்.) தற்பததொம்பதங்களின் வாச்சியார்த்தமான சீவேஸ்வராரோபமெனக்கண் டவைகளைநீக்கி யிலக்கியார்த்தமான கூடஸ்தபிரமவதிஷ்டானத்தை யொன்றாகக்காண்கிலதுவே யசிபதார்த்தமான சுத்தசைதன்னியமாமென்பதாம். (௬௬)

(அ-கை.) தன்னைத்தரிசிப்பிக்குநிமித்தந் தானல்லாதவைகளை நியதி களைதல்.

பிரிவதெப்படியென்றக்காற் பிணமாகுமுடலானென்னு
மறிவினைக்கொல்லல்வேண்டு மைம்பூதவிகாரமன்றோ
வெறியதோர்துருத்திமூச்சு விடுவதுபோலமூக்கா
லெறிபிராணனுநீயல்லை யிராசதகுணவிகாரம்.

(இ-ள்.) பிரிவதெப்படியென்றக்கால்- அனாத்மாவைநீங்குவ தெங்ஙனமெனின், பிணமாகுமுடல்- சலமாகின்றதேகம், ஐம்பூதவிகாரம் - பஞ்சபூதவிகாரமாமாதலால் - நானென்னுமறிவினை - அஃதைநானென்கிறவுணர்வை- கொல்லல்வேண்டும்- கெடுதல்வேண்டும், வெறியதோர்துருத்தி-பெருந்துருத்தியானது,மூச்சுவிடுவதுபோல- காற்றைவிடுவதுபோல, மூக்காலெறிபிராணனும்- மூக்கினால்வீசும் பிராணவாயுவும்- இராசதகுணவிகாரம் - ரசோகுணத்தின் விகாரமாமாதலால்- நீயல்லை- நீயல்லை-எ-று. (௬௭)

(அ-கை.) (இ-து.)

காரணமானதுபுந்தி கருத்தாவாமவையான்மாவோ
தாமுளவிரண்டுகோசஞ் சத்துவகுணவிகாரம்
வரமறுகனவானந்த மயனையநானென்றதே
விரவியதமஞ்ஞான விருத்தியின்விகாரமாமே.

(இ-ள்.) காரணமான துபுந்தி- அந்தக்கரணமானமனமும்- புத்தியும், கருத்தாவாம்- அகம்பாவமாம், தாமுள- பேதமுள்ள- இரண்டுகோசம்- மனோமயகோசமும் விஞ்ஞானமயகோசமும்- வரமறுகனவு- திரமில்லாதசொர்ப்பனமும்- சத்துவகுணவிகாரம்- சத்துவகுணவிகாரமுமாம் (ஆதலால்) அவையான்மாவோ- அவ்விரண்டுமாத்மாவல்ல- ஆனந்தமயனேயும்- ஆனந்தமயகோசனெனசிவனையும், விரவியதமம் - பொருந்தியதமரூபமான, அஞ்ஞானவிருத்தியின்- அவித்தியாவிருத்தியினது, விகாரமாம் - விகாரமாமாதலால், நானென்றதே - ஆத்துமாவென்று கருதாதே-எ-று.

(இ-உ-க-ம்.) தேகமுதல்-அவித்தைபரியந்தமான மூன்றுதேகமூன்றவத்தை மூன்றபிமானியையும் பஞ்சகோசங்களையுந்தான் அன்றென நியதிகளைந்ததாம். (௬௮)

(அ-கை:) நியதிகளைந்தநீயவ்விடத்துள்ள சுத்தசைதன்னியத்தைத் தரிசித்துவரும்பொருட்டுப் பஞ்சகோசவிலட்சணனாவாயெனல்.

சத்தொடுசித்தானந்தஞ் சமந்திரசாட்சியேக
நித்தியவ்வியாபியான்மா நீயதுவாயறிந்து
பொத்தொடுசடந்துக்காதி பொருந்துபேதங்களான
குத்திரபஞ்சகோசக் குகைவிட்டுவெளியிலாவாய்.

(இ-ள்.) சத்தொடு-சத்தும், சித்து-சித்தும், ஆனந்தம்- ஆனந்தமும், சமம்-சமமும், திரம்-ஸ்திரமும், சாட்சி-சாட்சியும், ஏகம்-ஏகமும்- நித்தியம்-நித்தியமும்- வியாபி- பூரணமுமாகிவிளங்குவது' ஆன்மா-ஆத்மஸ்வரூபமாதலால்- நீயதுவாய்- கூடஸ்தனே - பிரமம்-பிரமமே; கூடஸ்தனென- வத்துவிதஸ்வரூபமாச, அறிந்து-தரிசித்து - பொத்தொடுசடந்துக்காதி- அனர்த்தசடதுக்கமுதலியவற்றை- பொருந்துபேதங்களான- அடையாநின்ற வேறுபாடுகளுள்ள குத்திரபஞ்சகோசக்குகைவிட்டு-வஞ்சகமான பஞ்சகோசமாகிய தேகத்தைநீக்கி, வெளியிலாவாய்-வெளிப்படுவாய்-எ-று.

(இ-ம்.) பஞ்சகோசங்களைக்கண்டவைசட்கு விலட்சணனாவாயென்பதாம்.

(அ-கை.) விலட்சணமான விடத்தைப்பார்த்து இவ்விருளோனானென வினுதல்.



பஞ்சகோசமும்விட்டப்பாற் பார்க்கின்றபோதுபாழே
விஞ்சியதுவல்லாமல் வேறொன்றுந்தெரியக்காணே
னஞ்சனவிருளேயோநா னகமெனவனுபவிப்பேன்
வஞ்சமில்குருவேயென்ற மகன்மதிதெளியச்சொல்வார்.

(இ-ள்.) பஞ்சகோசமும்விட்டு - ஐந்துகோசமுமான மூன்று தேகத்தையுநீக்கி- அப்பால்- மேல்- பார்க்கின்றபோது - பார்க்கும்பொழுது பாழேவிஞ்சியது- சூன்யமே விசேஷித்திருக்கின்றது அதுவல்லாமல்- அச்சூனியமேயன்றி- வேறொன்றும் மற்றொன்றும்- தெரிய- தோன்ற- காணேன்-பார்க்கிலேன- அஞ்சனவிருளேயோ- கரியவந்தகாரத்தையோ நான்-யான்- அகமெனவனுபவிப்பேன் நானென்றனுபவிப்பேன் வஞ்சமில்குருவேயென்ற- உண்மையானவாசிரியரோயென்றுகேட்ட - மகன்மதிதெளிய-சிடனறிவுதெளியும்படி- சொல்வார்-போதிப்பார்-எ-று. அஞ்சன விருளென்பது பிரகிருதியெனக்கொள்க (இ-ள்.) நியதிகளைந்தானிருக்க தன்னைக்காணாமல் நியதிகளையப்பட்டவைகடோற்றமையைத்தான்றோற்றவில்லையெனக் கலங்கிவினவினதாம். (௭௰)

(அ-கை.) பிரகிருதியைநீக்கிச் சுத்தசைதன்னியனான தன்னைத்தரிசிப்பிக்கும்பொருட் டிருளைக்கண்டவன்பாழா அவனே நீயெனக்காண்பாயெனல்.

முன்புகல்தசமன்புத்தி மோகத்தாலெண்ணியெண்ணி
யொன்பதுபேரைக்கண்ட வொருவனுந்தனைக்காணாத
பின்பவனிடையிற்கண்ட பெரியபாழவனேபாரா
யன்புளமகனேகாண்ப தடங்கலுங்காண்பானீயே.

(இ-ள்.) முன்புகல்தசமன்- முன்சொல்லிய பதின்மனானவன்- புத்திமோகத்தால்- புத்திமயக்கத்தினால்- எண்ணி-எண்ணி- நினைத்து- நினைத்து- ஒன்பதுபேரை - ஒன்பதுபெயர்களை-கண்டவொருவனுந்தனை பார்த்தவொருவனாகியதன்னை- காணாதபின்பு- பாராதபின்- அவனிடையிற்கண்ட- தன்னிடத்திலே தன்னைத்தசமனாகப்பார்த்த- அவனே அவன்- பெரியபாழ்- பெருங்பாழ்- பாராய்- பார்ப்பாய்- அன்புளமகனே- அன்புள்ளபுத்திரா- காண்பதடங்கலும் சூனியமுதலியதிரிஸ்யங்களனைத்தையும்- காண்பானீயே-பார்ப்பவனீயேயாவாய்-எ-று. (இ-ம்.) அவ்விருளாகிய வழியாமை நீயன்றதனைக்கண்ட ஞானயேநீயெனவறிவித்தாம்.

(அ-கை.) அங்ஙனமதிஷ்டான சைதன்னியமான தனது சந்நிதியிற்சகலமுமுதித்தொடுங்குமெனல்.

தூலசூக்குமவஞ்ஞானந் தோனறுமூன் றவத்தைதாமுங்
காலமோர்மூன் றுசன்மக் கடலெழுங்கல்லோலங்கள்
போலவேவந்துவந்து போனவெத்தனையென்பேனு
லலமர்கடவுளாணை யவைக்கெலாஞ்சாட்சிநீயே.

(இ-ள்.) தூலசூக்குமவஞ்ஞானம்- தூலசூக்குமகாரணமாகிய சரீரத்
திரயங்களும்- தோன் றுமூன் றவத்தைதாமும்- தோற்றுகின்ற சாக்கிர
சொற்பனசுழுத்தியென்னு மவத்தாத்திரயங்களும் அவற்றையபிமானி
க்கின்ற விசுவத்தை சதைபிராஞ்ஞனுமான வபிமானத்திரயங்களும்-கால
மோர்மூன்றும் திரிகாலங்களும்- சன்மம்- புவமாகிய - கடலெழும் - சாக
ரத்திலுண்டான- கல்லோலங்கள்போலவே- போலைகளைப் போலவே-
வந்துவந்து- உண்டாகியுண்டாகி- போனது-அழிந்தன - நான்-யான்-எ
த்தனையென்பேன்-எவ்வளவென்றுசொல்வேன் - ஆலமர்கடவுலாணை-க
ல்லாலிநிழலில் வசிக்குஞ் சற்குருவின்பேரி லாணைப்படிக்கு - அவைக்
கெல்லா- அவைகளனைத்திற்கும் - சாட்சிநீயே-நீயேசாட்சியாம்-எ-று.

(இ-ம்.) ஆரோபமான வவித்தை முதலியவைகளி னேகதேசத்தையு
ம் அவைகட் கதிஷ்டானமான வாத்மஞான வியாபகத்தையுந் தெரிவித்
ததாம். (எஉ)

(அ-கை.) அவ்வாத்மஞானத்தைத்தவிர மற்றோர் ஞானமன்றென்ப
தையுறுதிப்படுத்து நிமித்தந் தன்னையறிவது தானேயெனல்.

எல்லாங்கண்டறியுமென்னை யேதுகொண்டறிவேனென்று
சொல்லாதேசுயமாஞ்சோதிச் சுடருக்குச்சுடர்வேறுண்டோ
பல்லார்முன் றசமன் றன்னைப் பார்ப்பதுந்தனைக்கொண்டேதா
னல்லாதுபதியென்றுனு மவனிடத்துண்டேபாராய்.

(இ-ள்.) எல்லாம்-அனைத்தையும்- கண்டெறியுமென்னை- பார்த்தறிகி
ன்றவென்னை - ஏதுகொண்டறிவேனென்று- எதைக்கொண்டறிவேனெ
ன்று- சொல்லாதே- உரையாதே- சுயமாஞ்சோதியான சுடருக்கு- பிர
காசத்தை யறிவிப்பதற்கு சுடர்வேறுண்டோ- பிரகாசம்வேறுமுளதோ
பல்லார்முன் பலர்முன் தசமன் றனை- பதின்மனை- பார்ப்பது - காண்ப
தும் தனைக்கொண்டே.தானல்லாது-தன்னைக்கொண்டேயன்றி-பதினொ
ன்றுனும்- பதினோரம்புருடனும்- அவனிடத்து- அத்தசமனிடத்து-உ
ண்டோபாராய்-உளதோபார்ப்பாய்-எ-று.

(இ-ம்.) ஆத்மசைதன்னிய மொன்றேயென் றறிவித்ததாம். (எங)

(அ-கை.) சர்வகருத்துவஇஞ்சித் ருத்துவத்தையும் அறிவ்றியாமை
யையுநீக்கிச் சுத்தசைதன்னியத்தைத் தரிசிப்பித்ததாம்.



அறிவுக்குமறிவுசெய்யு மறிவுவேறுண்டென்றெண்ணு
மறிவற்றகுதர்க்கமூடர்க் கனவத்தைபலமாய்த்தீரு
மறிபடும்பொருணீயல்லை யறிபடாப்பொருணீயல்லை
வறிபொருளாகுமுன்னை யனுபவித்தறிவாய்நீயே.

(இ-ள்.) அறிவுக்கும் - சுயஞ்சைதன்யத்துக்கு- அறிவுசெய்யுமறிவு-
அறிவுக்குஞ்ஞானம்- வேறுண்டென்று • மற்றொன் றிருக்கின்றதென்று
எண்ணும்- நினைக்கின்ற-அறிவற்றகுதர்க்கமூடர்க்கு- உணர்வினறியகு
தர்க்கஞ்செய்யு மஞ்ஞானிகளுக்கு- அனவத்தை- அனவஸ்தாதோஷம்-
பலமாய்த்தீரும்- பிரயோசனமாய்முடியும்-அறிபடும்பொருணீயல்லை-தி
ரிசியவத்துக்களுநீயல்லை- அறிபடாப்பொருணையல்லை- அறியாமையான
சூனியவத்துக்களு நீயல்லை. அறிபொருளாகுமுன்னை - சைதன்னியவ
த்துவான வுனதாத்மஸ்வரூபத்தை நீயோ- நீஅனுபவித்தறிவாய்-அனு
பவித்துணர்வாய்-எ-று.

(இ-ம்.) துவிதமாகிய அபாவுணர்வைநீக்கி யத்துவிதமானபாவுணர்வி
துவெனவுணர்த்தியதாம். (எச)

(அ-கை.) அப்பாவுணர்வேதானாக விளங்கிய சிதானந்தமே சர்வமாக
விளங்குகின்றதென வுணர்த்துதல.

மதுராங்கட்டிசுட்ட மாப்பணியாரமெல்லா
மதுரமாக்கியவதற்கு மதுரந்தான்சுபாவமன்றோ
வதுவிதுவெனுஞ்சடங்க ளறிவாகவறிவைத்தந்தே
யதுவிதுவிரண்டுமாகா வகம்பொருளறிவாய்நீயே

(இ-ள்:) மதுராங்கட்டி- தித்திப்பாகியகரும்புக்கட்டிசேர்த்து- சு
ட்ட- சுடப்பட்ட- மாப்பணியாரமெல்லாம்- மாப்பலகாரங்களனைத்தையு
ம்- மதுரமாக்கிய- மதுரமாகச்செய்த- அதற்கு- அவ்வெல்லக்கட்டிக்கு-
மதுரந்தான்-மதுரமானது- சுபாவமன்றோ- சுபாவமல்லவா- அதுவென்
னுஞ்சமஷ்டியும்- இது - இது வென்னும்வியஷ்டியுமான- சடங்கள்- திரி
சியவஸ்துக்களை- அறிவாக ஞானமாக- அறிவைத்தந்து - ஞானதிஷ்டி
யைக்கொடுத்து- அதுவிதுவிரண்டுமாகா சிவேஸ்வரதுவிதமாகாத- அ
கம்பொருள் - தானாகியதத்துவித்துவை அறிவாய்நீயே - நீதரிசிப்பாய்
என்றவாறு.

(இ-ம்.) தனதம்சத்தைத்தவிர வேறொன் றுமில்லையெனத் தனதுவியா
பகத்தை விளக்கியதாம்.

(அ-கை.) இவ்வித்துவித நிலைசிந்திக்குப்பொருட் டதிஷ்டானத்துக்
கயிக்கியமேயன்றி யாரோபத்துக் கயிக்கியமின்றெனக.

இந்தநீதொம்பதத்தி னிலக்கியபொருளாமென்றும்
பந்தமிற்பிரமமேதற் பதந்தனினிலக்கியார்த்த
மந்தமாஞ்சிவனீச னவர்களேவாச்சியார்த்தஞ்
சந்ததம்பேதமாவார் தமக்கயிக்கிடங்கூடாதே.

(இ-ள்.) இந்தநீ-இத்தன்மையுள்ளகூடஸ்தனுனநீயே-தொம்பதத்தின் தொம்பதத்தினுடைய- இலக்கியப்பொருளாம்- லட்சியார்த்தமாம்- என் றும்- எப்போதும்- பந்தமிற்பிரமமே- மாயாரகிதமான பிரமமென்று ம துவே- தற்பதந்தனின்- தற்பதத்தினுடைய- இலக்கியார்த்தம்-லட்சியா ர்த்தமாம்- அந்தமாம்- தோற்றிகசிப்பதான- சிவனீசனார்களே - சீவேஸ் வாரானவர்களே- வாச்சியார்த்தம்- வாச்சியார்த்தமாம்- சந்ததம் - எப் போதும்- பேதமாவார்தமக்கு- பேதமாகியசீவேஸ்வரர்களுக்கு- ஐக்கிய ங்கூடாது-ஏகமாதல் கூடாதாம்-எ-று.

பேதமாவார்க்கைக்கியங் கூடாதென்றவதனுல்- அபேதமாவார்க்கயிக் கிங் கூடுமென்றுயிற்று (இ-ம்.) மகாவாக்கியத்தி னிலக்கியார்த்தமான கூடஸ்தபிரமம்-அபேதமாயினவர்கட்கயிக்கியங்கூடுமென்பதாம்.(எசு)

(அ-கை.) (இ-து.)

பே தமான துவங்கேளாய் போராலுமிடங்களாலு
மோதருமுபாதியாலு முடலாலுணர்வினுலும்
பாதலம்விசும்புபோலப் பலதாமகன்றுநிற்பா
ராதலாலிவர்க்கெந்நாளு மயக்கியமென்பதுகூடாதே.

(இ-ள்.) பேதமானதுவும் - பேதமென்பதுவும் -கேளாய்- கேட்பாய்- போலும்- சீவேஸ்வரனென்னு நாமங்களினுலும்- இடங்களாலும்-அண் டபிண்டங்களாயிருக்கின்ற ஸ்தானங்களினுலும்- ஓதருமுபாதியாலும் சொல்லுதற்கரியகாரணமான வுபாதிகளினுலும்- உடலாலும் - சமஷ்டி வியஷ்டியாகிய தேகங்களினுலும்- உணர்வினுலும்- சர்வஞ்ஞத்துவகிஞ் சிக்ஞத்துவமென்னு ஞானத்தினுலும்- பாதலம்விசும்புபோல- பாதாள மும் விண்ணுலகமும்போல- பலதாம்- நானுவிதத்திலும் - அகன்றுநிற் பாராதலால் நீங்கிநிற்பவர்களாதலால்- இவர்க்கு-இத்தன்மையுள்ளசீவே ஸ்வரர்களுக்கு- எந்நாளும்- எப்போதும்- ஐக்கியமென்பது- கலத்தலெ ன்பது-கூடாது-கூடாது - எ-று. (இ-ம்.) மகாவாக்கியத்தின் வாச்சி யார்த்தமான சீவேஸ்வரரிவ்விதம் பேதமாதலினவர்கட் கயிக்கியங்கூடா தென்பதாம்.

(அ-கை) மகாவாக்கியார்த்தப்படி கூடஸ்தபிரம மேகமென்னும்பொ ருடோன்ற மூவிதவிலக்கணைகைக்கூறுகிருர்.



வ டநூல்வல்லவர்கள்சொல்லும் வாசகப்பொருள்சேராம
லிடாகிற்பொருளாம்வண்ண மிலக்கணையுனாயாற்கொள்வர்
இடயானவதுவுமூன்றுச் செப்புவார்விட்டதென்றும்
விடலிலாதென்றும்விட்டு விடாததென்றும்பேராமே.

(இ-ள்.) வடநூல்வல்லவர்கள்- கிரந்தகர்த்தாக்கள்- சொல்லும்-சாஸ் திரங்களிற் சொல்லாநின்ற- வாசகப்பொருள்- வாச்சியார்த்தத்தினுக்- சோாமல்- பொருள்பொருந்தாமல்- இடாகின் · தடையாயின் - பொரு ளாம்வண்ணம்- அர்த்தமாகும்பொருட்டு- இலக்கணையுனாயால்- இலக்கி யார்த்தத்தினுல்- கொள்வார்- பொருள்-கொள்வார்கள்- இடயாக-இர யாக- அதுவும்- அவ்விலக்கணையையும்- மூன்றுச்செப்புவார்-மூன்றுவி தமாகச்சொல்லுவார்- விட்டதென்றும்- விட்டவிலக்கணையெனவும்-விட லிலாதென்றும்- விடாதவிலக்கணையெனவும்- விட்டுவிடாதென்றும் - வி ட்டுவிடாதவிலக்கணையெனவும்- பேராம்- நாமங்களாம்-எ-று. (எஅ)

(இ-ம்) இலக்கணையினுமங்களைக்கூறினதாம்.

(அ-கை) அவற்றிற்குதாரணங்கூறல்:

க ங்கையிற்கோஷமென்றுங் கறுப்புச்செப்போடுதென்றுந்
தங்கியசோயந்தேவதத்த னென்றுஞ்சொல்வார்க
ளிங்குதாரணங்களாக்கி யிந்தமூன்றுனாகளாலே
துங்கநூல்விரோதமான சொல்லெலாம்பொருளாந்தானே.

(இ-ள்.) கங்கையிற்கோஷமென்றும் - பாகீரதியி லிடைச்சேரி யென வும்- கறுப்புச்செப்போடுதென்றும் - கருமைசெம்மைகள் செல்லுகின் றனவெனவும்- தங்கிய-தங்காநின்ற- சோயம்-அவனேயிவனுன- தேவத த்தனென்றும்- தேவதத்தனென்றுமோர் புருடனெனவும் - சொல்வார்க ள்- உரைப்பார்கள்- இங்கு- இவ்விடத்து- உதாரணங்களாக்கி · உதார ணங்களாகக்கொண்டு- இந்தமூன்றுனாகளால் - இம்மூன் றிலக்கணைப் பொருள்களினுல்- துங்கநூல்- மேலானசாஸ்திரங்களில் - விரோதமா ன-அர்த்தப்பொருந்தாமல் வேறுபடுகின்ற சொல்லெல்லாம் - வாக்கியங்க ளனைத்தும்- பொருளாம்-அருத்தமாம்-எ-று:

(ப-ம்) கங்கைக்க ணிடைச்சேரியென்னுமிடத்து கங்கைவிடத் திடை ச்சேரியிருக்குமா அதன் கரையிலிருக்குமென் றஃதைவிட்டிஃதைக்கொ ள்வது விட்டவிலக்கணையென்பார் கங்கையிற்கோஷமெனவும - கருமை செம்மை செல்லுகின்றனவென்னு மிடத்தவைக டனியேசெல்லுமா-கரு மைநிறமாகியபசுவும்- செம்மைநிறமாகியகுதிரையுஞ்செல்லுகின்றனவெ ன் றந்நிறத்தைவிடாமல்- அவ்வாமாவைகொள்வது-விடாதவிலக்கணை

மென்பார்- கறுப்புச்செப்போடெனவும்'- அவ்விடமுமக்காலமுமவ்வேட
முமுள்ளவனேயிவனென அவைகளெனிக்கி இப்புருடனேமாத்திரங்கொ
ள்ளும்போது- அவ்விடமுதலானவைகணீங்கி இப்புருடன்மாத்திரமிரு
க்கின்றதை விட்டுவிடாத விலக்கணையென்பார் தங்கியசோயுந்தேவதத்
தனெனவும் இவ்விலக்கணு வாக்கியப்படி பொருள்கோடலே நூல்க
ளனைத்தினுமுள்ள அவிரோத பொருள்கோடலென்பார் இந்தமூன்று
னைகளாலே துங்கநூல் விரோதமான சொல்லெலாம் பொருளாமெனவு
ங்கூறினர்.

(இ-ம்) தொம்பதார்த்தத்தைவிட்ட விலக்கணையாற் றரிசிக்கவேண்டு
மென்பது தூலமுதலவித்தைபரியந்தமான சரீரத்திரயங்களைவிட்டு- அ
வைகட்கு விலட்சணமான கூடஸ்தசைதன்னியத்தைத் தரிசிப்பதும் த
ற்பதார்த்தத்தைவிடாத விலக்கணையாற் றரிசிக்கவேண்டுமென்பது சை
தன்னியம் ஆனந்தனு பூதியின்றி விளங்காமையால் - இச்சை தன்னிய
த்தைவிடாம லானந்தோப்பிரமத்தைத்தரிசிப்பதும் அசிபதார்த்தத்தை
விட்டுவிடாத விலக்கணையாற் றரிசிக்கவேண்டுமென்பது ஆனந்தமின்றி
யறிவும் அறிவின்றியானந்தமு மின்மையால் அவைகளின் பேதமானது
விரத்தைவிட்டு - அபேதமான அத்துவிதவஸ்துவை விடாமற் றரி
சிப்பதுமாம்.

(எகூ)

பன்னியசோயமென்னும் பதங்களின்வாச்கியார்த்த
மன்னியதேயங்கால மவனிவனென்பவெல்லாம்
சொன்னவிவ்விரோதம்விட்டுத் தொகையிலக்கியம்விடாம
லுன்னிடிற்றேவதத்த னொருவனைவெளியாக்காட்டும்.

(இ-ள்) பன்னிய முன்சொன்ன சோயமென்னும் அவனே யிவனென்
னும் பதங்களின் பதங்களுக்கு வாச்சியார்த்தம் வாச்சியார்த்தமானது
அன்னிய வேறுன தேயம் தேசமும் காலம் காலமும் அவனிவனென்ப
அவனிவனென்பனவாக சொல்ல சொல்லப்பட்ட இவ்விரோதமெல்லாம்
விரோதமாயுள்ள விவ்வனைத்தையும் விட்டு விடுத்து தொகையில் முடி
வில் இலக்கியம்விடாம லுன்னிடில் இலக்கியார்த்தத்தை விடாமற்சிந்தி
க்கில் தேவதத்தனொருவனை தேவதத்தனென்னுமொருபுருடனையே வெ
ளியாக்காட்டும் பிரத்தியட்சமாகக் காண்பிக்கும்-எ-று.

(இ-ம்) இவ்விலக்கணையின் பொருளொருமையை நன்றாகத் தெரி
வித்ததாம்.

(அ-கை) இத்திஷடாந்தப்படி தாஷடாந்தத்தை விளக்குதல்:

தத்துவப்பதங்கடாமுஞ் சாட்சியாய்ப்பிரமமான
வத்துவைவிடாமறபேத வாச்சியார்த்தத்தைவிட்டு



நித்தமுமதுநீயாகு நீயதுவாகுமென்னு
மர்த்தமுமகண்டமென்றே யசிபதமைக்கியங்காட்டும்.

(இ-ள்.) தத்துவப்பதங்கடாமும்- தற்பதந்தொம்பதங்களின் - பேத
வாச்சியார்த்தத்தைவிட்டு, வாச்சியார்த்தமான பேதமாயுள்ள சிவேஸ்
வராவைவிட்டு, சாட்சியாய்ப்பிரமமான- கூடஸ்தபிரமமான- வத்துவை
விடாமல்- பொருளைவிடாமல்- நித்தமும்- எப்போதும்-அதுநீயாகும்-பி
ரமமேகூடஸ்தனும்- நீயதுவாகுமென்னு- கூடஸ்தனேபிரமமாமென்னு
ம்- அர்த்தமும்- பொருளும்- கண்டமென்று- ஒன்றென்று- அசிபதம்-
ஆனுய்என்னும்பதமானது- ஐக்கியங்காட்டும்- அத்துவிதத்தை- விளக்
கும்-எ-று.

(இ-ம) ஆசிரியருபதேசப்படி யாராண நிச்சயமிருப்பது தோன்றவதி
ன்முடிவான மகாவாக்கியத்தி னிலக்கியார்த்தமான கூடஸ்த பிரமத்தி
னொருமையை யுணர்த்தியதாம்.

(அச)

(அ-கை.) இவ்வத்துவிதமான சுவானுபூதியே தானுகவிளங்குவாயெ
னல்:

கடநீரின்மேகநீரிற் கண்டவானிரண்டும்பொய்யே
குடவானும்பெரியவானுக் கூடியொன்றுமெப்போது
மிடமானபிரமஞ்சாட்சி யிரண்டுமெப்போதுமேகத்
திடமாகச்சுவானுபூதி சிலோகமென் றிருந்திடாயே.

(இ-ள்.) கடநீரில்- கடசலத்திலும்- மேகநீரில்- மேகசலத்திலும்-கண்
டவான்- தோற்றுகின்றபிரதிவிம்பாகாயமான - இரண்டும்பொய்யே-இ
ரண்டுமித்தையேயாம்- குடவானும்- கடாகாயமும்- பெரியவானும்-ஆகா
யமும்- எப்போதும்- எக்காலமும் - கூடியொன்றும் - கலந்தேகமாகும்
(அதுபோல) இடமானபிரமம்- வியாபகமானபிரமமும் - சாட்சி-கூடஸ்
தனுமான- இரண்டும்- இரண்டுசைதன்னியமும்- எப்போதும்- எக்கால
மும்- ஏகம்- ஒன்றேயாமாதலின்- இடமாநாஸ்திரமாக - சுவானுபூதி-சு
வானுபூதியாகிய- சிவோகமென்று-சிவோகமென்று இருந்திடாய்- இரு
ப்பாய்-எ-று.

(இ-ம்:) சுருதிகுரு வாக்கியார்த்தமென்று பட்டவத்துவிதமான சுத்
தசைதன்னியமே தானுகவிளங்குவாயெனமௌன நிலையையுணர்த்தியா
சிரியர் மௌனமாயிருந்தாரென்பதாம்.

(அஉ)

(அ-கை.) குருவாக்கியப்படி சமாதியின்றன்னைத்தரிசித்தல்.

தஞ்சமாங்குருவுஞ்சொன்ன தத்துவவழிதப்பாமற்
பஞ்சகோசமுங்கடந்து பாழையுந்தள்ளியுள்ளிற்

கொஞ்சமாமிருப்பும்விட்டுக் கூடஸ்தபிரமமென்னு
நெஞ்சமுநாமுழுவியொன்ருய் நின்றபூரணத்தைக்கண்டான்.

(இ-ள்.) தஞ்சமாம்- தனக்குயிர்த்துணையாகிய-குருவுஞ்சொன்ன-ஆ
சாரியானுக்கிரகஞ்செய்த- தத்துவவழி-தற்பதசொம்பத சோதனைசெய
தமார்க்கங்கள்- தப்பாமல்- தவருமல்-பஞ்சகோசமுங்கடந்து- ஐந்துகோ
சங்கட்கும்விலட்சணனுய்- பாழையுந்தள்ளி- அங்ஙனங்கண்ட சூனியத்
தையுநீக்கி- உள்ளி- அசத்தில்- கொஞ்சமாமிருப்பும்-அற்பமாகத்தோ
ற்றியிருக்கின்ற ஸ்மரணத்தையும்- விட்டு-விடுத்து - கூடஸ்தபிரமமெ
ன்னும்- கூடஸ்தபிரமமென்கிற- நெஞ்சமுநாமுழுவி- நினைவுமிறந்து- ஒன்
ருய்நின்ற- அத்துவிதமாயிருந்த- பூரணத்தைக்கண்டான் - பரிபூரணஸ்
வரூபத்தைத்தரிசித்தான்-எ-று.

(அ-கை,) சமாதிகூடி சுவானுபூதிமயமாதல்:

அனுபவானந்தவெள்ளத் தழுந்தியேகண்டமாகித்
தனுகரணங்களாதி சகலமுமிறந்துசித்தாய்
மனதுபூரணமாய்த்தேக மானசற்குருவுங்காண
நனவினிற்சுழுத்தியாகி நன்மகன்சுபாவமானன்.

(இ-ள்.) அனுபவானந்தவெள்ளத்து - சுபாவமாகிய நிரதிசயானந்தச
முத்திரத்தில்- அழுந்தி- மூழ்கி அகண்டமாகி- அகண்டாகாரமாய்- த
னுகாரணங்களாகி- தேகேந்திரியவந்தக்கரணமுதலிய- சகலமுமிறந்து-அ
னைத்துநசித்து- சித்தாய்- சின்மாத்திரானுபவத்தினல் - மனதுபூரண
மாய்-மனம்பூரணமாகி- தேகமான- பூரணமேதிருவுருக்கொண்ட-சற்கு
ருவுங்காண- ஆசிரியரும்பார்க்கும்படி- நனவினிற்சுழுத்தியாகி - நனவி
னிற் சுழுத்தியையடைந்து நன்மகன்- சற்சீடன்- சுபாவமானன்-தனதி
யல்பானஸ்வரூபமாகவிளங்கினன்-எ-று.

(இ-உ-க-ம்.) சுருதிகுருவாக்கியப்படி சுபானுபவம்விளங்கிற்றென்ப
தாம்:
(அச)

(அ-கை.) சமாதியினின்றும்வெளிப்படல்.

அளிமகனெடும்போதிவ்வா ருனபின்மனதுமெள்ள
வெளியில்வந்திடவுணர்ந்தான் விமலதேசிகனைக்கண்டான்
துளிவிழிசொரியப்பாதந்தொழுதுவீழ்ந்தெழுந்துசூழ்ந்தான்
குளிர்முகச்சுவாமிகேட்கக் கும்பிட்டுநின்றுசொல்வான்.

(இ-ள்.) அளிமகன்- கனிவுள்ள சீடனனவன- நெடும்போது - வெகு
நேரம்- இவ்வாருனபின்- இவ்வண்ணமாக விளங்கினபின்பு- மனது-ஸ்
வரூபசமஸ்காரமானமனது- மெள்ளவெளியில்வந்திட- மெள்ளச்சமாதி
யினின்றுந் துரியமாய் வெளிப்பட உணர்ந்தான் - அறிந்தவனுய் - விமல



தேசிகனை- நிர்மலமானவாசிரியனை- கண்டான்- பார்த்து- விழி-கண்கள்
துளிசொரிய- ஆனந்தபாஷ்பம்பொழிய- பாதம்-அவரதுபாதத்தில்-தொ
ழுது- வீழ்ந்து- சாஷ்டாங்கமாக- நமஸ்காரஞ்செய்து- எழுந்து-பின்பெ
ழுந்து- சூழ்ந்தான்- வலம்வந்து- குளிர்முகம்- பிரமானந்தம் விளங்குகி
ன்றமுகத்தையுடைய- சுவாமிகேட்க- ஆசாரியர்கேட்கும்படி-கும்பிட்டு
நின்று சொல்வான்- சிரசின்மேலஞ்சலியோடுநின்று துதிப்பான்-எ-று.

(இ-ம்.) சமாதியனுபவசமஸ்காரத்தோடு சகசநிட்டைக்கு வெளிப்ப
ட்டதாம்.
(அரு)

(அ-கை.) சைமாறுகாணேனெனக்குருவைத் துதிசெய்தல்.

ஐயனேயெனதுளேநின் றனந்தசென்மங்களாண்ட
மெய்யனேயுபதேசிக்க வெளிவந்தகுருவேபோற்றி
யுய்யவேமுத்திநல்கு முதவிக்கோருதவிநாயேன்
செய்யுமேவேறென்றுங்காணேன் றிருவடிபோற்றிபோற்றி.

(இ-ள்:) ஐயனே- ஆசாரியனே- எனதுளேநின்று-எனதகத்தினின்று
அனந்தசென்மங்கள்- அளவிற்பவங்கடோறும்- ஆண்டமெய்யனே- ஆ
ளாநின்றகர்த்தனே- உபதேசிக்க அனுக்கிரகிக்குநிமித்தம்-வெளிவந்தகு
ருவே- மானிடவடிவுகொண்டெழுந்தருளியவாசிரியனே- போற்றி- வண
ங்குகின்றேன்- உய்யவே- அடியேனீடேறும்பொருட்டு-முத்திநல்குமு
தவிக்கு- வீடளித்தசகாயத்திற்கு- ஒருதவி- ஓர்கைமாறு- நாயேன்செ
ய்ய-அடியேன்செய்ய- வேறொன்றுங்காணேன் - மற்றொன்றுங்காண்கி
லன்- திருவடிபோற்றிபோற்றி - தேவரழகியபாதங்களைத் துதிக்கின்
றேன்-எ-று.
(அசா)

(அ-கை.) சமாதியனுபவம்பெற்ற சீடனைநோக்கிச் சகசநிட்டையனுப
வமுதலியமாம்பொருட்டு தன்னுபவந்தடையின்றி விளங்குமெனிலஃதே
கைம்மாறெனக்கூறுதல்.

சிட்டனிவ்வாறுசொல்லத் தேசிகர்மகிழ்ந்துநோக்கிக்
கிட்டவாவெனவிருத்திக் கிருபையோடருளிச்செய்வார்
துட்டமாந்தடைகண்மூன்றுந் தொடராமற்சொரூபஞான
நிட்டனுயிருப்பாயாகி னீசெய்யுமுதவியாமே.

(இ-ள்.) சிட்டன்- சீடனனவன்- இவ்வாறுசொல்ல- இவ்வணந்துதித்
துரைக்க- தேசிகர் - ஆசிரியானவர் - மகிழ்ந்துநோக்கி - மகிழ்ச்சியுடன்
பார்த்து- கிட்டவாவெனவிருத்தி- சமீபத்தில் வாவென்றழைத்திருக்க
ச்செய்து- கிருபையோடு- கருணையோடும்- அருளிச்செய்வார்- தனுக்கி
ரகஞ்செய்வார்- துட்டமாம்- பொல்லாதனவாகிய தடைகண்மூன்றும்-மூ
ன்றுதடைகளும்- தொடராமல்- தொடர்ந்துவராமல் - சொரூபஞானநிட்

டனுய் - ஸ்வரூபசைதன்னியசமாதியைபுடையவனுய்- இருப்பாயாகின்-
இருப்பாயானுல் - நீசெய்யுமுதவியாம் - இஃதேநீ யெனக்குச்செய்யுங்
கைமாறும்-எ-று.

(இ-உ-க-ம்) தானெனவனுபவமான சுகபோகத்தைத்தவிர வேறுகரு
தாமலிருக்கவேண்டுமென்பதாம். (அஎ)

(அ-கை.) அனுபவமான வத்துவிதஞானந் தடைகளினுல் நீங்குமோ
வென்ற சீடனேநோக்கி யவைகளுண்டே லனுபவந் திரமாகவிளங்கா
வெனில்.

நீ நானென்றிரண்டில்லாம னிறைந்தபூரணமாயெங்கு
நானுந்தெரிந்தஞான நழுவுமோகுருவேயென்முன்
ருனுகும்பிரமரூபஞ் சற்குருநூலாற்றோன்று
மானுலுந்தடைகளுண்டே லனுபவமுறைத்திடாதே.

(இ ள்) நீநானென்று - நீயெனவுநானெனவும் -இரண்டில்லாமனிறை
ந்த- துவிதமின்றியத்துவிதமாக வியாபித்தபூரணமாய் - பரிபூரணமாய்-
எங்கும்-எவ்விடத்தும்- நானுசத்தெரிந்தஞானம்- தானுசவிளங்கியசைத
ன்னியமானது - குருவே - ஆசாரியரே - நழுவுமோவென்முன் நழுவு
மோவென்றுகேட்டான்- தானுகும்பிரமரூபம்- தன்மயமானபிரமஸ்வரு
பமானது - சற்குரு - ஆசாரியருபதேசத்தினுலும் - நூலால் - வேதாந்
தசாஸ்திரங்களினுலும் - தோன்றுமானுலும் - உதிக்குமானுலும்-தடை
களுண்டேல்- தடைகளிருக்குமானுல்- அனுபவமுறைத்திடாது- வவ்வ
னுபவந்திரப்படாது என்றவாறு. நீயென்பதுமுன்னிலையிற் குருவாகவி
ளங்கியவானந்தமெனவும் நானென்பது தன்மையிற் சீடனுகவிளங்கியவ
திவெனவுங்கொள்க.

(அ-கை) தடைகளேயு மவற்றைநீக்கு முபாயங்களேயுங்கூறல். (அஅ)

தடைகளேதெனிலஞ்ஞானஞ் சந்தேகவிபரீதங்கள்
படர்செயுமந்தமூன்றும் பலசன்மப்பழக்கத்தாலே
யுடனுடன்வரும்வந்தக்கா லுயர்ஞானங்கெடுமிவற்றைத்
திடமுடன்கெடுப்பாய்கேட்டல் சிந்தித்தறெளிதலாலே.

(இ-ள்.) தடைகளேதெனில்-அத்தடைகளியாவையென்முல்-அஞ்ஞா
னம்- அஞ்ஞானமும்- சந்தேகம்-சந்தேகமும்- விபரீதங்கள்- விபரீதங்க
ளுமாம்- படர்செயும் - துன்பஞ்செய்யும் - இந்தமூன்றும் - இம்மூன்றுந
டைகளும்- பலசன்மப்பழக்கத்தால்- அனேகசென்மப் பழக்கத்தினுல்-உ
டனுடன்வரும்- அடிக்கடிவரும் வந்தக்கால்- அங்ஙனம்வருமாகின்- உயர்
ஞானங்கெடும்- மேலானஞானமறைபடும் - இவற்றை - இத்தடைகளை



திடமுடன்-ஸ்திரமாக- கேட்டல்-சிரவணத்தினுலும்- சிந்தித்தல்-மன
னத்தினுலும்-தெளிதலால்நித்தியாயினுலும் - கெடுப்பாய்- நீக்குவாய்
என்றவாறு.

(அ கை.) தடைகளுளவாயினனுபவம் விளங்காதெனத்திருஷ்டாந்த
முசத்தா லறிவித்தல்.

அக்கினிகட்டுபட்டா லற்பமுஞ்சுடமாட்டாது
மக்கினஞானத்தாலே வந்தபந்தமும்வேவாது
சிக்கெனப்பழகிக்கேட்டல சிந்தித்தறெளிதலாலே
விக்கினமடஞ்சந்தேகம் விபரீதம்போக்குவாயே.

(இ ள்:) அக்கினி-நெருப்பானது - கட்டுப்பட்டால் - மந்திரத்தினுல்
ஊஷ்ணசத்திஸ்தம்பனமானுல் - அற்பமும்- சற்றும்- சுடமாட்டாது- எ
ரிக்கமாட்டாது- (அதுபோல) மக்கினிஞானத்தால்-தடைகளினுற்பிரகா
சங்குன்றினசித்தினுல் - வந்தபந்தமும் - வரப்பட்ட திரிசியவாசனையும்-
வேவாது - கெடாது (ஆதலால்) சிக்கெனப்பழகி - இடைவிடாமற்பழக்க
ஞ்செய்து - கேட்டல்- சிரவணத்தினுல் - விக்கினமடம் - ஞானத்துக்கு
த்தடையாகிய வஞ்ஞானத்தையும் - சிந்தித்தல் - மனத்தினுல் - சந்தே
கம்- சந்தேகத்தையும் - தெளிதலால் - சுபானுபவமாய்த் தெளிதலினுல்
விபரீதம்- கற்பிதமான திரிசியத்தையும்- போக்குவாய்-நீக்குவாய்-எ-று.

(அ-கை) அத்தடைகளினியல்புகூறல்.

பிரமபாவனைமூடிப் பேதங்காட்டுவதஞ்ஞானங்
குரவன்வாக்கியம்பார்ற் குழம்பினமனஞ்சந்தேகந்
திரமறுசகமெய்யென்றுந் தேகநானென்றுமுள்ளே
விரவியமோகந்தானே விபரீதமென்பர்மேலோர்.

(இ-ள்) பிரமபாவனையைமூடி - திருக்குஸ்மரணத்தைமறைத்து பே
தங்காட்டுவது- திரிசயத்தைக்காண்பிப்பது- அஞ்ஞானம் - அஞ்ஞான
மாம் - குரவன்வாக்கியம் - ஆசாரியருபதேச வாக்கியார்த்தத்தை - நம்பா
மல் - நம்புதல்செய்யாமல் - குழம்பினமனம் - மனக்கலக்கம் - சந்தேகம்-
சந்தேகமாம் - திரமறு - நிலையில்லாத - சகமெய்யென்றும் - சகஞ்சத்திய
மெனவும் - தேகநானென்றும் - சரீரம்யானெனவும் - உள்ளே - மனத்தி
ன்கண் - விரவியமோகந்தானே - கலந்தமயக்கமே - விபரீதமென்பர்- வி
பரீதமென்றுசொல்லுவார்கள்-எ-று.

(அ-கை) அத்தடைகளைக் கெடுக்குங் கேட்டன்முதலியவைகளி னி
யல்புகூறல்.

தத்துவவனுபோகந்தான் சாதித்தல்கேட்டலென்பா
ரொத்துளபொருளுகத்தா லுசாவல்சிந்தித்தலென்பார்

சித்தமேகாந்தமான தரிசனந்தெளிதலென்பார்
நித்தமிப்படிசெய்தக்கா னிர்வாணம்பெறுவாய்நீயே:

(இ-ள்) தத்துவவனுபோகந்தான் - மகாவாக்கியார்த்தமான பிரமோ
பதேசத்தை - சாதித்தல்- குருமுகமாகப்பெறுதலை - கேட்டலென்பார்-
கேட்டலென்றுரைப்பார்- ஒத்துளபொருள் - அதனையிக்கியார்த்தத்தை-
உசாவல் - விசாரித்தலை - சிந்தித்தலென்பார்-சிந்தித்தலென்று சொல்லு
வார்கள் - சித்தம் - மனது- ஏகாந்தமானதரிசனம் - தனிமையானசுவானு
பூதியைத்தரிசித்தலை - தெளிதலென்பார்- தெளிதலென்று சொல்லுவா
ர்கள் - நித்தம்- எப்போதும்- இப்படிசெய்தக்கால் - இவ்வண்ணமனுசந்
தித்தால்நிர்வாணம் - முத்தியை- பெறுவாய்நீ-நியடைவாய்-எ-று.

(இ ரு க ம்:) அஞ்ஞானமுதலிய தடைகளைக் கேட்டன்முதலியவுபா
யங்களாற்கெடுக்கிற்சுவானுபவந்தடையின்றிவிளங்குமென்பதாம். (௩௨)

(அ-கை.) அக்கேட்டன்முதலியவைகள் வேண்டுங்காலவளவு கூறல்:

எத்தனைநாண்ஞாதாவு ஞானமுமிருக்குமென்னி
லத்தனைநாளும்வேண்டு மப்பாலோர்செயலும்வேண்டா
நித்தமும்வெளிபோற்பற்று ஞேயமாத்திரமாய்ச்சீவன்
முத்தானவர்விதேக முத்திபெற்றிருப்பரொன்றும்.

(இ-ள்.) எத்தனைநாள் -எவ்வளவுகால ஞாதாவும் - காண்பானும்-ஞா
னமும்- காட்சியும்- இருக்குமென்னில் - இருக்குமாகில் - அத்தனைநா
ளும்- அவ்வளவுகாலமும் - வேண்டும் - இக்கேட்டன் முதலியமூன்று
ம்வேண்டும் - அப்பால் - அதற்குமேல் - ஓர்செயலும்வேண்டாம்-ஓரனு
ஷ்டானமும்வேண்டுவதில்லை - நித்தமும் - எப்போதும் - வெளிபோல்-
நான்குபூதத்திலுந் தாக்கற்றிருக்கின்றவாகாயத்தைபோல - பற்று-
இந்திரியங்களிற்பற்றுது நிற்கும் - ஞேயமாத்திரமாய் - ஆத்துமஸ்வரூப
மாய் - சீவன்முத்தானவர் - சீவன்முத்தியையடைந்தவர்கள் - என்றும்
எப்போதும் - விதேகமுத்தி - விதேககைவல்யத்தைபெற்றிருப்பார்- அ
டைந்திருப்பார்கள்-எ-று.

(இ-ம்.) காண்பானுங் காட்சியுநீங்கி ஸ்வரூபந்தானாகிற பரியந்தங்கே
ட்டன்முதலியவைகளைப் பழகல்வேண்டுமென்பதாம், (௩௩)

(அ-கை.) அச்சீவன்முத்தர்கள் தொகையுநாமமுஞ் சொல்லியவர்களி
யல்புகூறத்தொடங்கல்.

ஞானமார்சீவன்முத்தர் நால்வகையாவர்கேளாய்
வானிகர்பிரமவித்து வான்வரியான்வரிட்ட





னைவர்நாமமீதா மவர்களிற்பிரமவித்தின்
ஞனமுமற்றைமூவர் தாரதம்மியமுஞ்சொல்வேன்

(இ-ள்.) ஞானமார்சீவன்முத்தர் - ஞானநிறைந்த சீவன்முத்தர்கள்-
நால்வகையாவர் - நான்குவிதமானவர்கள் - கேளாய்-அதனைக்கேட்பாய்
வானிகர்பிரமவித்து- ஆகாயத்துக்கொப்பான பிரமவித்தெனவும்-வான்
பிரமவானெனவும் - வரியான் - பிரமவரியானெனவும்- வரிட்டன்-பிரமவ
ரிட்டனெனவும்- ஆனவர்நாமமீதாம் - ஆவர்களுடையபெயரிவையாம்-அவ
ர்களில்- அவர்களுக்குள்- பிரமவித்தின்ஞனமும்- பிரமவித்தினிலைபும
ற்றைமூவர்- ஏனையமூவருடைய- தாரதம்மியமுஞ்சொல்வேன் - தாரத
ம்மியத்தையுஞ்சொல்வேன்-எ-று.

(இ-ம்) வெளிப்படை:

(அ-கை:) சீவன்முத்தர்களிற் பிரமவித்தினியல்புகூறல்:

தீராய்ப்பிரமவித்தாய்த் தெளிந்தவர்தெளிதமுன்னம்
வாரமாயிருந்ததங்கள் வருணமாச்சிரமஞ்சொன்ன
பாரகாரியமானாலும் பலர்க்குபகாரமாக
நேரதாச்செய்வார்தீர்ந்த நிலைவிடாச்சீவன்முத்தர்.

(இ-ள்:) தீராய் தீரமுள்ளவர்களாய் பிரமவித்தாய் பிரமவித்தாய்தெ
ளிந்தவர் தெளிவுற்றவர்கள் தெளியுமுன்னம் இங்ஙனந் தெளிவதற்கு
முன்பு வாரமாயிருந்த உரிமையாயிருந்த தங்கள் தங்களுடைய வருண
மாச்சிரமம் வன்னச்சிரமங்களைக்குறித்து சொன்ன கன்மநூலாற்சொ
ல்லப்பட்டவைகள் பாரகாரியமானாலும் வருத்தமான கருமங்களாயினு
ம் பலர்க்குபகாரமாக யாவற்குமனுகூலமாக தீர்ந்தநிலைவிடா முடிவானநி
சசயத்தைவிட்டு நீங்காதசீவன்முத்தர்பிரமவித்தானவர்கள் நேரதாச்செ
ய்வார் கிரமமாகவவற்றைச் செய்வார்களென்றவாறு:

(இ-ம்.) பிரமவித்து லோகோபகார நிமித்தஞ் சற்கரும மனுஷ்டிப் (௩௫)
பானென்பதாம்.

(அ-கை.) (இ-து.)

காமமாதிகள்வந்தாலுங் கணத்திற்போமனத்திற்பற்றூர்
தாமரையிலைத்தண்ணீர்போற் சசத்தொடுங்கூடிவாழ்வார்
பாமரரெனக்காண்பிப்பார் பண்டிதத்திறமைகாட்டார்
ஏருமருமாவாருள்ளத் துவகையாஞ்சீவன்முத்தர்.

(இ-ள்.) காமமாதிகள்வந்தாலும் - காமமுதலிவைக ளொருபோதுநேரிட்டாலும் - கணத்திற்போம்- அநிச்சாபிராத்வமாக க்ஷணத்தினீங்கும் - மனத்திற்பற்றுர் - மனதில்வையார்கள் -தாமரையிலைத்தண்ணீர்போல்- கமலபத்திரோதகம்போல- சகத்தொடுங்கூடி வாழ்வார்உலகத்தாருடன் சேர்ந்துவாழ்வார்கள் பாமரொன அஞ்ஞானிகளைப்போல காண்பிப்பார் காட்டுவார்கள் பண்டிதத் திறமைகாட்டார் வித்துவத் திறத்தைகாண்பியார்கள் உள்ளத்து அசத்தின்கண் உவமையாம் நித்தியானந்தத்தையுடைய சீவன்முத்தர் பிரமவித்தானவர்கள்ஊமருமாவார்மௌனமாயிருப்பார்கள்-எ-று. காமமாதிகள்வந்தாலு மென்றவும்மை-அவைகள் வாராவென்பதை யுணர்த்தியதாம்.

(ப-ம்.) பிராரத்வமனுபவித்துத் தீரும்படியான இச்சையாதிகளொருபோதேகதேசமாகவுதிக்கினும் அவைகளாத்மசுகத்தை விளக்குதற்குவெஞ்சகமாகின்றுவிளக்கித் தானுடனே நசித்தலின் காமமாதிகள்வந்தாலுங் கணத்திற்போமெனவும் மனம்பூரணானந்தமாகத் தெளிந்திருத்தலின் மனத்திற்பற்றுரொனவும் உலகருடன் மனமொவவாமல் வாக்குங்காயமுமொத்திருத்தலை - தாமரையிலைத்தண்ணீர்போற் சகத்தொடுங்கூடிவாழ்வாரொனவும் எவரெவரெங்ஙனமெங்ஙனம் வஸ்து நிச்சயங்கூறினும் நிச்சயங்களனைத்தும் தனது சுவானுபவத்திற்கொடுத்தலினவைகளை மறுக்கத் தெளிவின்றிய பேதையர்கள்போலக் காட்டுதலை பாமாரொனக் காண்பிப்பாரொனவும் அங்ஙன நிச்சயித்த நிச்சயங்களனைத்துந் தனதனுபவவியாபகத்திற்கங்கபாசத் தானவைகளி னங்கிபாக விளங்கு மனுபவத்தை யதிவியாதிருத்தலை பண்டிதத்திறமை காட்டாரொனவும் அரியாதீதமான மகாமௌனமாயிருத்தலை ஊமருமாவாரொனவும் மனஞ்சென்றவிடமெல்லாஞ் சிதானந்தமாக விளங்குதலை உள்ளத்து வகையாமெனவுங்கூறினர்.

(இ-ம்.) பிரமவித்தினனுபவவிலாசத்தைக்கூறினதாம். (சுசு)

(அ-கை.) (இ-து.)

பேதகன்மத்தால்வந்த பிராரத்வநாநாவாகு
மாதலால்விபகாரங்க ளவரவக்கானவாகு
மாதவஞ்செயினுஞ்செய்வர் வாணிபஞ்செயினுஞ்செய்வார்
பூதலம்புரப்பரையம் புகுந்துண்பர்சீவன்முத்தர்.

(இ-ள்.) பேதகன்மத்தால்வந்த அறிவின்மையான சஞ்சிதான் மதாலுண்டான பிராரத்வம் பிராரத்வஜன்மம் நாநாவாகும் பலவிதமா



ம் ஆதலால் ஆதலினால் விபகாரங்கள் விருத்திகள் அவரவர்க்கானவாகும் அவரவர்களுக்கு நியமித்தவையாம் சீவன்முத்தர் பிரமவித்தானவர்கள் மாதவஞ்செயினும்செய்வர் மாதவத்தைச்செய்தாலுஞ் செய்வார்கள் வாணியஞ்செயினும்செய்வர் வியாபாரஞ்செய்தாலுஞ்செய்வார்கள் பூதலம்புரப்பர் பூமிபாலனஞ்செய்தாலுஞ்செய்வார்கள் ஐயம்புகுந்துண்பர் பிட்சைவாங்கிப் புசித்தாலும்புசிப்பார்கள் எ-று.

(இம்) பிரமவித்தேத்தொழிலைச்செய்யினும் அவைகள்பிராரத்தகன்மமேயன்றி யவர்க்கில்லையென்பதாம். (சுஎ)

(அ-கை.) (இ-து.)

சென்றதுகருதார்நாளைச் சேர்வதுநினையார்கண்முன்
னின்றதுபுசிப்பார்வெய்யி னிலவாய்விண்விழுதுவீழ்ந்தும்
பொன்மினசவம்வாழ்ந்தாலும் புதுமையாவொன்றும்பாரார்
நன்றுதீதென்னார்சாட்சி நடுவானசீவன்முத்தர்.

(இ ள்.) சென்றதுகருத்தார் முன்னீங்கினவைகளைநினைத்து வாடார்கள் நாளைச்சேர்வதுநினையார் எதிர்க்காலத்து வரும்பொருளை நினைத்துருகிழார்கள் கண்முன்னின்றதுபுசிப்பார நிகழ்காலத்துள்ள பொருளைப் பிரார்த்தமென்றனுபவிப்பார்கள் வெய்யில் உஷ்ணகிரணமானது நிலவாய் அமிர்தகிரணமாய் விண்விழுதுவீழ்ந்தும் ஆகாயத்தி னின்றும் விழுதாக விறங்கினும் பொன்றின மரித்த சவம்வாழ்ந்தாலும் பிரேதஞ்சீவித்தாலும் புதுமையா அதிசயமாக ஒன்றும்பாரார் ஒன்றையுங்காணார்கள் நன்றுதீதென்னார் இதுநன்றெனறுந் தீதென்றுஞ்சொல்லார்கள் சாக்ஷி சாக்ஷியாய் நடுவான மத்தியகதமாய் விளங்கிய - சீவன்முத்தர்- பிரமவித்துக்கள்-எ-று.

(இ-ம்) முன்புள்ள வறின்மையும் பின்புள்ள திரிசியவுணர்வையுங் காணுது நடுநிலையாகியபாவுணர்விற் சுகித்திருத்தலின் சென்றது கருதார் நாளைச்சேர்வது நினையார் கண்முன்னின்றது புசிப்பாரொனவும், சகலவிசித்திரமுந் தனது லீலையாகக்கருதி அவைகளில் வியப்புறு திருத்தலின் வெய்யினிலவாய் விண்விழுது வீழ்ந்தும் பொன்றின சவம்வாழ்ந்தாலும் புதுமையாவொன்றும்பாராரெனவும், சர்வமுந்தனது சித்துருவமாக விளங்குதலின் நன்றுதீதென்னாரொனவும்: மத்தியகத சர்வசாட்சியான தானத்துவிதமாக விளங்குதலின் சாட்சிநடுவான சீவன்முத்தரொனவுங்கூறினூர்.

(இ-ள்.) பிரமவித்து மனபடங்கியனுபவமாய் நிற்றலின்றென்றைக்கரு துதலும் வியப்புறுதலு மிலவென்பதாம். இந்நான்குசெய்யுளின் முத்தி னபிரமவித்தினியல்பைக்கூறினதெனக்கொள்க. (கூஅ)

(அ-கை.) மற்றமூவரியல்புகூறல்.

பின்னைமூவரிலிரண்டு பேர்களுஞ்சமாதியோகத்
தன்னையுற்றிருப்பார்தேக சஞ்சாரநிமித்தந்தானு
யுன்னுவோன்வரன்வேற்ருேரா லுணர்பவன்வரியானுகு
மன்னியர்தம்மாற்றன்னு லறியாதோன்வரிட்டனுமே.

(இ-ள்.) பின்னைமூவரில்- மற்றுமூன்றுபேர்களில்- இரண்டுபேர்களு ம்-பிரமவான் பிரமவரியானென்னு மிரண்டு சீவன்முத்தர்களும், சமாதி யோகந்தன்னை- சமாதிஞானத்தை- உற்றிருப்பார்- அடைந்திருப்பார்க ள், தேகசஞ்சார நிமித்தந்தானுய்- தேகஞ் சஞ்சரிக்கும்பொருட்டு-உன் னுவோன்- உணவுமுதலியவற்றை நினைப்பவன், வான் - பிரமவானும், வேற்ருேரால்- மற்ருெருவரால்- உணர்பவன்-முன்சொல்லியவைகளைக் கொள்ளவறிபவன், வரியானுகும்- பிரமவரியானுகும்- அன்னியர்தம்மால் பிறாலும், தன்னல்-தம்மாலும், அறியாதோன் - முன்சொல்லியவைக ளைக் கொள்ளவறியாதவன். வரிட்டனும்-பிரமவரிட்டனும்-எ-று.

பிரமவரிட்டன்சமாதியிலதீதமானவனெனக்கொள்க.

(இ-ம்.) பின்னுள்ளபிரமவான் பிரமவரியான் பிரமவரிட்ட னிவர்களிய ல்பைக்கூறினதாம். (கூகூ)

(அ-கை.) இந்நால்வர் பயன்களைக்கூறல்.

அரிதாகுமிவர்களிவ்வா றனேகாநுலுமுத்தி
சரியாகும்பாடுபட்ட சமாதிக்குப்பலனேதென்றுற்
பெரிதானதிட்டதுக்கம் பிரமவித்தனுபவிப்பன்
வரியானும்வரனுமற்றை வரிட்டனுஞ்சுகமாய்வாழ்வார்.

(இ-ள்.) அரிதாகும் - திரிலோகதுல்லபமாகும், இவர்கள் - இச்சீவன் முத்தர்கள், இவ்வாறு-இவ்வண்ணம், அனேகாநுலும் - அளந்தானு லும், முத்திசரியாகும்- வீடொருதன்மைத்தாம், பாடுபட்ட-வருத்தமு ற்றுச்செய்த, சமாதிக்கு- நிஷ்டைக்கு, பலனேதோன்றுமல் - பிரயோச னமியாதெனில்- பெரிதான மகத்தான, வரியானும்-பிரமவரியானும், வரனு ம்- பிரமவானும்' வரிட்டனும் - பிரமவரிட்டனும், சுகமாய்வாழ்வார்-நிர திசயானந்தமாக வாழ்வார்கள், மற்றை-ஏனைய- பிரமவித்து-அச்சமாதி யிற்பாடுபடாத பிரமவித்தானவன், திட்டதுக்கம்-மீளிடுந்துன்பங்களை அ னுபவிப்பன்-அனுபவிப்பான் என்றவாறு.



(இ-ம்.) இச்சீவன்முத்தர்கள் பிராரத்வத்தினல்வருஞ் சுகதுக்கானு பவத்திற் ருரதம்மியராயினும் பிரமானந்த கைவல்யம்யேற்றி லஃதில (ஶ)
ரென்பதாம்.

பிரமஞானிகளுங்கன்மப் பேதையர்போலேவாழ்ந்தார்
திரமுறுமஞ்ஞானம்போய்ச் செனியாதவழியேதென்னிற்
பரவுமாகாயமொன்றிற் பற்றுதுமற்றைநாலும்
விரவினதோடுங்கூடும் விதமிருவோருமாவார்.

(இ-ள்.) பிரமஞானிகளும் - ஸ்வரூபஞானிகளும், கன்மப்பேதையர் போல - கர்மிகளானவஞ்ஞானிகளைப்போல; வாழ்ந்தால் - சீவித்திருந் தால்: திரமுறுமஞ்ஞானம்போல் - நிலையாகத்தோற்றியவறியாமைநசித் து: செனியாத- இனிப்பிறவாத, வழியேதெனில்- மார்க்கமியாதென்று ல், பரவுமாகாசம் வியாபித்திருக்குங் ககனமானது: ஒன்றிற்பற்றுது-ஒ ன்றிலுந்தோயாதுநிற்க- மற்றைநாலும்- மறறைநான்குபூதங்களும்- வி ரவினதோடுங்கூடும்- ஒன்றுடனென்றுகலக்கும்: விதம்-இவ்விதமாக இ ருவோரும்- ஞானியஞ்ஞானிகளிருவரும்- ஆவார்-ஆகுவார்-எ-று.

(இ-ம்.) ஞானியஞ்ஞானிகளின் கிரியையொன்ருயினுங் கருத்துவே (ஶக)
றென்பதாம்.

(அ-கை.) சீவன்முத்தர்களின் தரிசனமகிமை சொல்லியவர்கள் விதே கமுத்தரான வழிசொல்லத்தொடங்கல்.

சீவன்முத்தனைச்சேவித்தோர் சிவனயனெடுமாலான
மூவருமகிழநோன்பு முழுவதுஞ்செய்துசம்ம
பாவனமானுரென்று பலமறைமுழங்குமிப்பான்
மேவருஞ்சீவன்முத்தர் விதேகமுத்தியுநீகேளாய்.

(இ-ள்.) சீவன்முத்தனை - சீவன்முத்தர்களை: சேவித்தோர்- தரிசித் தவர்கள்: சிவன்-அரனும்- அயன்-பிரமனும்- நெடுமால்-திருமாலும்-ஆ ன-ஆகிய- மூவருமகிழ- மும்மூர்த்திகளுமகிழ்கூர: நோன்பு முழுவது ஞ்செய்து - தவங்களனைத்துமுடித்து: சம்மபாவனமானுரென்று - பவ ப்பரிசுத்தமானுர்களென்று: பலமறைமுழங்கும்- அநந்த வேதங்கண்மு றையிடும்- இப்பாம்- இனி- மேவருஞ்சீவன்முத்தர்- அறிதற்கரியசீவன் முத்தர்களடையும்- விதேகமுத்தியும்- விதேகமுத்திப்பதத்தையும்- நீ (ஶஉ)
கேளாய்-நீகேட்பாய்-எ-று.

சம்மபாவனமானுரென்பது ஞானதானூராயினதெனக்கொள்க.

(அ-கை.) கருவத்திரயவொழிபுகூறல்.

பஞ்சினையூழித்தீப்போற் பலசங்மவிவிதவித்தாஞ்
சஞ்சிதமெல்லாஞானத் தழல்சுட்டுவெண்ணீருக்குஞ்
கிஞ்சிலாகாமியந்தான் கிட்டாமல்விட்டுப்போகும்
விஞ்சினபிராரத்வத்தின் வினையனுபவித்துத்தீரும்.

(இ-ள்.) பஞ்சினை-பஞ்சை - ஊழித்தீப்போல்- வடவாமுல மெரிப்பது போல-பலசங்மம்- அநந்தபவங்களுண்டானதற்கு- விவிதவித்தாம்- பலவிதவிதைகளான, சஞ்சிதமெல்லாம்- சஞ்சிதகன்மங்களனைத்தையும்-ஞானத்தழல்- ஞானக்கினியானது- சுட்டுவெண்ணீருக்கும் - எரித்துவெண்மையாகிய சாம்பலாக்கும்- கிஞ்சில்- அற்பமும்- ஆகாமியந்தான்-ஆகாமியகன்மமானது-கிட்டாமல்விட்டுப்போகும் நெருங்காமனீங்கும்-விஞ்சினசேடித்த- பிராரத்வத்தின்வினை பிராரத்துவகன்மமானது-அனுபவித்துத்தீரும்-மூன்றுவிதமாகவனுபவித்துநீங்கும்-எ-று.

மூவிதமாவன; இச்சையனிச்சைபாவிச்சையென்பனவாம். (௫௩)

(அ-கை:) இருவினைநீங்குமேதுகூறல்.

பொறுமையாற்பிராரத்வத்தைப் புசிக்குநாட்செய்தகன்ம
மறுமையிற்றொடர்ந்திடாமன் மாண்டுபோம்வழியேதென்னிற்
சிறியவரிகழ்ந்துஞானி செய்தபாவத்தைக்கொள்வ
ரறிபவரறிந்துபூசித் தறமெலாம்பறித்துண்பாரே.

(இ-ள்.) பொறுமையால்- சாந்தத்தினால்- பிராரத்வத்தை பிராரத்வகன்மத்தை: புசிக்குநாள்- அனுபவிக்குங்காலத்தில்- செய்தகன்ம-செய்யுங்கருமங்கள்- மறுமையில்- மேற்பிறவியைக் கொடுப்பதற்கு-தொடர்ந்திடாமல்- தொடர்ந்துவாராமல்- மாண்டுபோம்- நசிக்கும் - வழியேதென்னில்- மார்க்கமியாதென்றால்-சிறியவரிகழ்ந்து-மூடர்கணிந்தித்து- ஞானிசெய்த- ஞானவான்செய்யும்- பாவத்தைக்கொள்வர்- பாவகன்மத்தைப்பெற்றுக்கொள்ளுவார்கள்- அறிபவர்- விவேகிகள்- அறிந்து - சிவஸ்வரூபமென்றறிந்து பூசித்து- ஆராதித்து- அறமெலாம்- அவர்கள் செய்யுந்தருமங்களனைத்தையும்-பறித்துண்பார்-கவர்ந் தனுபவிப்பார்கள்-எ-று.

(அ-கை) சரீரத்திரயவொழிபுகூறல்.

அரியமெய்ஞ்ஞானத்தீயா லவித்தையாமுடனீருமே
பெரியதூலமுங்காலத்தாற் பிணமாகிவிழுமங்ஙோ
முரியசூக்குமசரீர முலையிரும்புண்டநீர்போற்
றுரியமாய்விபுவாய்நின்ற சொரூபத்திலிறந்துபோமே.



(இ-ள்.) அரியமெய்ஞ்ஞானத்தீயால் - அறிதற்கரிய ஞானக்கினியினால்- அவித்தையாமுடனீரும்- காரணசரீரநசிக்கும்- பெரியதூலமும்-பருத்ததூலசரீரமும்- காலத்தாற்பிணமாகிவிழும்- காலநியமப்படி பிராரத்தமாம்- அங்ஙோம்- அப்போது- உரியசூக்குமசரீரம்-சாதனத்துக்குரித்தானசூக்குமதேகமானது- உலையிரும்பு- கொல்லனுலையிற்காய்ந்தவயமானது- உண்டநீர்போல்- இரகித்தசலத்தைப்போல- துரியமாய - துரியமாகவும்- விபுவாய்நின்ற- வியாபகமாகவுமிருந்த-சொரூபத்திலிறந்துபோம்- பிரமஸ்வரூபத்தினசிக்கும்-எ-று.

(இ-ச-க-ம்.) சஞ்சிதவினையுங் காரணசரீரமும் ப்ரஞானத்தினாற் கெடுதலு மாகாமியவினையுஞ் சூக்குமதேகமுமந்தஞானத்தி லயமாகுதலும் பிராரத்வகன்மமுந் தூலதேகமு நியமித்தகாலவளவி னீங்குதலுமாமென்பதாம். (௫௫)

(அ-கை.) விதேகமுத்தியினியல்புகூறல்.

கடமெனுமுபாதிபோனாற் ககனமொன்றானாற்போல
வுடலெனுமுபாதிபோன வுத்தாஞ்சீவன்முத்த
ரடிமுடிநடுவுமின்றி யகம்புறமின்றிநின்ற
படிதிகழ்விதேகமுத்திப் பதமடைந்திருப்பரொன்றும்.

(இ-ள்.) கடமெனும்- குடமென்கிற- உபாதிபோனால்-உபாதிநீங்கினதுபோல்- ககனமொன்றானாற்போல- கடாகாயமுதலியநான்குமேகமானதுபோல- உடலெனும்- மூன்றுதேகமென்கிற- உபாதிபோனவுத்தாம்-உபாதிநீங்கினக்ஷணம்- சீவன்முத்தர்- சீவன்முத்தானவர்- அடிமுடிநடுவுமின்றி- ஆதிமத்தியாந்தரகிதமாய் - அகம்புறமின்றி- உட்புறமின்றி- என்றுநின்றபடிதிகழ் - எப்போதுமிருந்தவண்ணம் விளங்குகின்ற விதேகமுத்திப்பதம் - விதேகமுத்திப்பதத்தை- அடைந்திருப்பார்- பெற்றிருப்பார்-எ-று. (௫௬)

(அ-கை.) இவ்வனுபவமெஞ்ஞான்றும் விளங்குவதெனல்.

சொல்லியமகனேயெங்குஞ் சூழ்வெளியிருக்கமண்ணைக்
கெல்லியபின்புதோன்றுங் கிணற்றினாகாயம்போலே
வொல்லையாய்பிரமநூலா லுற்றதுபோலேதோன்று
மெல்லையினுமெப்போது மேகமென்றிருந்திடாயே:

(இ-ள்.) சொல்லியமகனே - முன்னனுபவஞ்சொன்ன புத்திரா- எங்கும்-எவ்விடத்தும்- சூழ்வெளியிருக்க- சூழ்ந்தவாகாயமிருக்க-மண்ணை பூமியை- கெல்லியபின்ப- அகழ்ந்தபின்பு-தோன்றும்-உண்டானதுபோலத்தோற்றுகின்ற- கிணற்றினாகாயம்போல - கூபாகாசம்போல- ஒல்லை

பரம்பிரமம்- அநாதியாய்விளங்குகின்ற- பிரமஸ்வரூபமானது- நூலால்
ஆத்மஞானசாஸ்திரங்களால்- உற்றதுபோலேதோன்றும் - உதித்தது
போலத்தோன்றும்- எல்லையில்- பிரமாணாதீதமான- நாம்-சுத்தசைதன்
னியஸ்வரூபமானயாம்- எப்போதும்- எக்காலமும்-ஏகமென்றிருந்திடா
ய்-ஒன்றேயென்றிருப்பாய்-எ-று.

(இ-உ-க-ம்.) இப்போதுதித்ததுபோலத்தோன்றியவனுபவஞ்சிருஷ்
டிக்குமுன்னும் பின்னுநடுவுமான வெப்போதுமிருந்துநித்தியதிருத்தி
யாகவிளங்கிய சச்சிதானந்தமேயன்றி இப்போதுதித்ததன்றென்பதாம்.

(அ-கை) சுத்தசத்தி னுண்மையைத்தெரிவித்தல்.

கானனீர்கிளிஞ்சில்வெள்ளி கந்தர்ப்பநகர்கனவூர்
வானமைகயிற்றிற்பாம்பு மலடிசேய்முயலின்கோடு
மீனமாந்தவிபுமானிற் பிரபஞ்சமெல்லாம்பொய்யே
ஞானமெய்மகனேயுன்னை நம்மாணைமறந்திடாதே.

(இ-ள்.) கானனீர்- கானற்சலம்போலவும் - கிளிஞ்சில்வெள்ளி-சுத்தி
காரசிதம்போலவும்- கந்தர்ப்பநகர் - கந்தர்வநகரம்போலவும்- கனவூர்-
சொற்பனநகரம்போலவும்- வானமை - ஆகாயநீலம்போலவும்- கயிற்றிற்
பாம்பு-ரச்சுசர்ப்பம்போலவும்- மலடிசேய்- வந்தியாபுத்திரன் போலவு
ம்- முயலின்கோடு- சசவிஷாணம்போலவும்- மீனமாந்தவிபுமானில்-பரு
த்ததாணுசோரனைப்போலவும்- பிரபஞ்சமெல்லாம்- பிரமத்திற் றோற்
றுகின்ற சகத்தனைத்தும்- பொய்யே- மித்தையேயாம்- ஞானமெய்-சு
த்தசைதன்யமொன்றுமே யுண்மையாம் - மகனேமாணாக்கனே-உன்னை
இங்ஙனம்விளங்கியவனது ஸ்வரூப சைதன்னியத்தை-நம்மாணை-நமதாணை
ப்படிக்கு மறந்திடாதே மறவாமலதுவாய் விளங்குவாய்-எ-று.

(இ-ம்.) எப்போதுஞ் சத்தானசுகபோதமிருக்கின்றதேயன்றி சத்தா
னதிரிசியங்களில்லவென்பதாம்.

(௱அ)

தத்துவவிளக்கப்படலம்.

முற்றுப்பெற்றது.



௨

சிவமயம்.

## இரண்டாவது
## சந்தேகந்தெளிதற்படலம்.

(அ-கை) முற்படலத்திற் றத்துவமான வானந்தபிரஞ்ஞையை நிஷ்
டாபிரஞ்ஞையால் விளக்கி னிச்சொரூப பிரஞ்ஞையினுன் முற்கற்ப
னையாகத்தோற்றிய சிவேஸ்வாசகஞ் சிற்சுகாகாரமாக விளங்குவதைவி
ளக்கும்பொருட்டுச் சந்தேகந்தெளிதலைக்கூறுகின்றார்.

நரற்குழிபறித்துமெள்ள நாட்டியநெடியகம்ப
முரமுறக்குத்திக்குத்தி யுரப்பிக்குமுபாயம்போலப்
பரமமாஞ்சொரூபந்தன்னிற் பற்றியமனோவிருத்தி
திரநிலைபெறச்சந்தேகந் தெளிதலைமொழிகின்றேனே.

(இ-ள்.) நரர்-மானிடர்கள்- குழிபறித்து-பள்ளங்கல்லி- மெள்ளநாட்
டிய- மெள்ளவெடுத்துநட்ட- நெடியகம்பம்- நீண்டஸ்தம்பமானது-உர
முற- அசைவின்றித்திரமாகநிற்கும்பொருட்டு- குத்திக்குத்தி-குத்தி
க்குத்தி- உரப்பிக்கும்- பலப்படுத்துகின்ற- உபாயம்போல-யுத்தியைப்
போல- பரமமாஞ்சொரூபந்தன்னில்- பிரமஸ்வரூபத்தில்- பற்றியமனோ
விருத்தி-பொருந்திய சித்தவிருத்தியானது திரநிலைபெற- திரநிலையை
யடையும்பொருட்டு- சந்தேகந்தெளிதலை- சந்தேகந்தெளிதலை-மொழிகி
ன்றேன்-சொல்லுகின்றேன்-எ-று. இத்திட்டாந்தந் தூணநிகனநியாயமெ
னக்கொள்க.

(ப-ம்.) தானல்லாத விஷயங்களை நீக்கித்தானகிய பிரமத்திற்கலந்த
மனம் அப்பிரமவியாபகமான பூரணவிருத்தியிற் சஞ்சரிக்குமிடத்திற் ச
ர்வப்பிரமமயமென்னுஞ் சாட்சாத்காரானுபவந் தடையின்றி விளங்குவ
தே- விவகரித்தும் விவகரியாத நிலையாதலின் அதற்குத்தடையா யுள்ள
வைகளைக் களைதல்வேண்டுமென்பார்- சொரூபந்தன்னிற்பற்றிய மனோ
விருத்தி திரநிலைபெறச் சந்தேகந்தெளிதலென்றார். (இ-ம்.) சித்தினிட
த்துதயமாய்ப் பகிர்முகமின்றியச்சித்திற் கரைந்தமனமானது சென்றவி
டமெல்லாஞ் சிதானந்தமாக ரமிக்கும்பொருட்டுச் சந்தேகந்தெளிதலைக்
கூறத்தொடங்கினதாம்.

(அ-கை.) குருகுலவாசஞ்செய்யுந்தன்மையைக்கூறல்.

நற்கருத்துடையோனுகி ஞானவானுகிநின்றேன்
மார்க்கடநியாயம்போல மகாபூதவிகாரந்தொட்டு

நிற்குணவிதேகமுத்தி நிலைபரியந்தஞ்சொன்ன
சற்குருவினை விடாமற் சந்ததமனுசரித்தான்.

(இ-ள்.) நற்கருத்துடையோனுகி- பேரானந்தமான சிந்தையையுடைய வனுய்- ஞானவானுகி - சைதன்னியஸ்வரூபியாகி - நின்றோன் இருந்தசி டனவன்- மார்க்கடநியாயம்போல- மார்க்கடநியாயத்தைப்போல- மகா பூதவிகாரந்தொட்டு- பஞ்சபூதகாரியமான தூலதேகமுதல்- நிர்க்குண-நி ர்குணாதிதமான- விதேகமுத்திநிலைபரியந்தம் - விதேககைவல்யமட்டும்- சொன்னசற்குருவினை விடாமல் - அருளியவாசாரியனைவிட்டு நீங்காமல்- சந்ததமனுசரித்தான்- சதாகாலமுந்தொடர்ந்துநின்றுன்-எ-று. (௨)

(அ-கை.) ஆசிரியர் சீடனை யனுபவம்வினுதல்.

சந்ததம்புருடன்றன்னைச் சாயைபோல்விடாமலன்பா
மைந்தனே நோக்கிச்சாட்சி மாத்திரமாய்நின்றுயோ
சிந்தையிலையமெல்லாந் தீர்ந்தவோதெளிவினுள்ளே
யந்தாங்கலந்ததுண்டோ வனுபவமுறைசெய்வாயே.

(இ-ள்.) சந்ததம்-எப்போதும் - புருடன்றன்னை-ஓர்புருடனை-சாயை போல்- விட்டுநீங்காதசாயைபோல- விடாமல்- ஆசாரியனைவிட்டு நீங்கா மல்- அன்பாமைந்தனே - அன்புருவமாய் நிற்கின்றசீடனே- நோக்கி- அ ருட்கண்சாத்தி- சாட்சிமாத்திரமாய்நின்றுயோ- பிரத்யேகாத்ம ஸ்வ ரூபமாய்நிற்கின்றுயோ- சிந்தையில்- மனதின்கணுள்ள - ஐயமெல்லாம்- சமுசயங்களனைத்தும்- தீர்ந்தவோ- நீங்கினவோ- தெளிவினுள்ளே-தெ ளிவின்கண்- அந்தரம்- சிவேஸ்வரசகத்பேதம்- கலந்ததுண்டோ-சேர்ந் ததுமுளதோ - அனுபவமுறைசெய்வாய் - உனதனுபவத்தைச்சொல்வா யென்றவாறு.

(இ-ம்.) பேதமின்றித்தெளிவாகச் சுவானுபவமாய் விளங்குகின்றுயா வென மூவகையான வினவினதாம்.

(அ-கை.) மூன்வினுமூன்றற்கும்விடைகூறல். (௩)

எனவுணாத்தருளுநபாசா னிருபதம்வணங்கியெந்தாய்
சன்னவன்காட்டின்மோகத் தமத்தெழுபேதப்பேய்க
ளுனதருளுதயவெற்பி லுபதேசவருக்கன்றேன்றி
மனவிழிதெரியஞான வான்கதிர்பாந்தாலுண்டோ.

(இ-ள்) எனவுணாத்தருளும் - என்றுகேட்டருளிய-ஆசானிருபதம்வ ணங்கி - தேசிகருபயபாதங்களைப்பணிந்து - எந்தாய்-என்னுடையபிதா வே- சனனவன்காட்டில்- வலிமையான பவாரண்யத்திலிருக்கும்-மோக த்தமத்து - மோகாந்தகாரத்தில்-எழும்-தோற்றுகின்ற- பேதப்பேய்க ள்-பேதங்களென்னும்பிசாசங்கள்- உனதருளுதயவெற்பில் - தேவரீரது கருணையென்னுமுதயகிரியில் - உபதேசவருக்கன்றேன்றி - பிரமோப



தேசமென்னுஞ்சூரியனுதித்து- மனவிழிதெரிய- அகக்கண்விளங்க-ஞா னவான்கதிர்- மேலானசிற்பிரகாசமானது- பாந்தால் - வியாபித்தால்-உ ண்டோ-இருக்குமோ-எ-று.

(ப-ம்) சாட்சிமாத்திரமாய் விளங்குகின்றதென்பார் - உபதேசவருக் கன்றேன்றியெனவும் சிந்தையிலையமெல்லாந் தீர்ந்ததென்பார் மனவிழி தெரியுமெனவும் அந்தரமான பேதமுதிக்கவில்லையென்பார் ஞானவான் கதிர்பாந்தாலுண்டோ வெனவுங்கூறினர்.

(இ-ம்) தனதனுபவத்திற் சந்தேகவிபரீத மின்றென்பதை யறிவித்த தாம். (௪)

(அ-கை.) சமாதியிற் றடையின்றியினுஞ்சகத்தி லவையின்றி நிற்பத ற்கு வினவவேண்டுவதுண்டெனல்.

மந்திரமூர்த்திதன்னுன் மாற்றியபேய்போனுலு
மெந்திரமெழுதிக்கட்டி யினிவாாவகைசெய்வார்போன்
முந்தியுன்னுபதேசத்தான் மோகம்போனுலுமையா
புந்திநின்றுறைக்கவின்னம் புகலும்விண்ணப்பமுண்டே.

(இ-ள்.) மந்திரமூர்த்திதன்னுல்- மாந்திரிகனுல், மாற்றியபேய்-நீக்கி யபிசாசமானது- போனுலும்- நீங்கினுலும்- எந்திரமெழுதிக்கட்டி- எந் திரஸ்தாபஞ்செய்து- இனிவாாவகை மேல்வாாதவண்ணஞ்செய்வார்போ ல் செய்பவர்களைப்போல முந்தி முன்னமே - உன்னுபதேசத்தால் தே வரீரனுக்கிரகத்தினுல் மோகம்போனுலும் மயக்கநீங்கினுலும் ஐய - எ னதாசிரியரோ புந்திநின்றுறைக்க அறிவுநிலை பெறும்பொருட்டு இன் னம் மேலும் புகலும்விண்ணப்பமுண்டு அடியேன்கேட்கும் விண்ண ப்பமுளது-எ-று.

(இ-ம்) சகசத்துக்குத் தடையாயுள்ள சந்தேகங்களைநீக்கும்பொருட் டு வினவத்தொடங்கினதாம். (௫)

(அ கை.) சீடன்றனக்கனுபவமான பிரமவஸ்து மனோவாக்குக் கோச ரமா கோசரமா வெனவறிவுநிமித்த மங்ஙனங் கூறுஞ் சுருதிவாக்கியத் தை யிரண்டுசங்கையாகவினுதல்.

ஆகமப்பிரமாணத்தா லறியென்றும்வாக்குக்கெட்டா
தேகமாம்பிரமமென்று மிதாாத்தாலுணர்வாயென்றுஞ்
சோகமமனதிறகெட்டாச் சுயஞ்சோதியென்றுஞ்சொன்னீர்
மோகமாமிரண்டுசங்கை முளைத்தனபறித்திரோ.

(இ ள்.) ஏகமாம்பிரமம் அத்துவிதபிரமத்தை ஆகமப்பிரமாணத்தா ல் வேதமுடிவான மகாவாக்கியப்பிரமாணத்தினுல் அறியென்றும் அறி வாயெனவும் வாக்குக்கெட்டாதென்றும் வேத வாக்கியத்துக் கெட்ட மாட்டாதெனவும் சுயஞ்சோதி இச்சுயம்பிரகாசத்தை இதயத்தா லு ணர்வாயென்றும் மனதினுலறிவா யெனவும் சோகமமனத்திறகு துன்

பமானமனதிறகு எட்டாதென்றும் அறிதறகரியதெனவும் சொன்னீர் அருளினீர் மோகமாம் மயக்சமாகிய இரண்டுசங்கை முளைத்தன இரண்டுசெங்கைகளுளவாயின பறித்திடீர் அவைகளைக்களைந்திடீர்-எ-று. பிரமவஸ்து மனோவாக்குகளுக் ககோசரமுங் கோசரமுமாமென வேதங் கூறுவதை ஆசிரியர் கூறினதாகக்கொண்டு வினவினதென்க (இ-ம்.) வெளிப்படை. (௬)

(அ கை.) முதறசங்கையிற பிரமஞ்சுருதிக் ககோசரமா மென்றதற குத்தரங்கூறல்.

ம. றைமுப்பிரமாணத்தால் வஸ்துநிர்ணயங்கூடாதே
யுற்றதோர்விடயம்பூத முபயமன்றுதலாலே
குற்றமாங்குணவிசேடங் கூடாமலிருக்கையாலே
யிற்றதுவாக்குக்கெட்டா தென்பதுமறிவாய்நீயே.

(இ-ள்.) மற்றைமுப்பிரமாணத்தால்- ஏனையமூன்று பிரமாணங்களினாலும், வஸ்துநிர்ணயங்கூடாது- ஸ்வரூபநிச்சயத்தைபறிதற் கூடாவாம், உற்றதோர்விடயம்- பிரத்தியட்சமே திரிடுவதோர் விஷயமாதலானும், பூதம்அனுமானங்காரியத்தைக் கொண்டறியப்படுங் காரணமாதலானும்- உபயம்- உபமானமுபமேயமென்னு மிரண்டாதலானும்- அன்றுதலால்- கூடதாதலால்- குற்றமாம்- அவைகளாலறியலாமென்பதும் பிழையே யாம்குணவிசேடங்- குணவிசேடங்களானவை- கூடாம லிருக்கையால்- சேராதிருக்கின்றபடியால்- இற்றது- இத்தன்மையான பிரமம்-வாக்குக்கெட்டாதென்பதும்- சத்தமாகியவேதங்களுக் கதீதமென்பதும்-அறிவாய்நீ- தெரிந்துகொள்வாய்-எ-று.(இ-ம்) பிரமம் அகோசரமமென்பதையுறுதிப்படுத்து நிமித்தமாகமுதலிய நான்கு பிரமாணங்களினுலுமறியக்கூடாதென் றறிவித்ததாம். (௭)

(அ-கை.) அச்சங்கையிற் பிரமஞ் சுருதிக்ககோசரமா மென்றதற்குத்தரம்.

வ ாக்கியந்தனக்கெட்டாத வஸ்துவென் றுரைத்தவேதம்
வாக்கியவிருத்தியாலவ் வஸ்துவைக்காட்டிற்றன்றே
வாக்கியங்களிலேமான மாவதேதென்றுயாகில்
வாக்கியமிரண்டுமெய்யே மறைகள்பொய்யாநீகேளாய்.

(இ-ள்.) வாக்கியந்தனக்கு- சத்தத்திற்கு- எட்டாத வஸ்துவென்றுரைத்த- பெட்டாதபொருளென்றுசொன்ன- வேதம்- வேதமானது-வாக்கியவிருத்தியால்- மகாவாக்கியவிசாரத்தால்- அவ்வஸ்துவை - அப்பிரமப்பொருளை- காட்டிற்று- காட்டியது - வாக்கியங்களில்-இவ்விரண்டுவாக்கியங்களில்- மானமாவதேதென்றுயாகில - பிரமாணமாவதியாதென்று



கேட்பாயாகில்- வாக்கியமிரண்டுமெய்யே - இவ்விரண்டுவாக்கியமுமுண்மையே- மறைகள்- வேதங்கள்- பொய்யார்- அசத்தியமுனாயா-நீகேளாய்- அதைநீகேட்பாய்-எ-று. (௮)

அன்றேவென்பதசை(இ-ம்)வெளிப்படை.

(அ-கை) பிரமஞ்சுருதி வாக்கியங்களுக் ககோசரமுங் கோசரமுமெனக்கூறுதல்.

த ன்பதியல்லாப்பேர்க டமையல்லனல்லனென்று
ளன்பனைக்கேட்டநோ மவள்வெட்கிமௌனமானு
ளென்பதுபோலநீக்கி யிதன்றிதன்றெனச்சேடித்த
பின்பரப்பிரமந்தன்னைப் பேசாமற்பேசும்வேதம்.

(இ-ள்.) தன்பதியல்லாப்பேர்கடமை- தனதுநாயகனல்லாதவர்களை அல்லனல்லனென்றுள் - இவனல்லனிவனல்லனெனக்கூறினுள்-அன்பனைக்கேட்டநோம் - நாயகனைக்காட்டிக்கேட்டபோது- அவள்-அத்தலைவியானவன்- வெட்கி- வெட்கமுற்று - மௌனமானுளென்பதுபோல-பேசாதிருந்தாளென்பதைப்போல- இதன்றிதன்றென- இதுவல்லவிதுவல்லவென்று- நீக்கி- தள்ளி- பின்-பின்பு- சேடித்த- விஞ்சின-பரப் பிரமந்தன்னை- பரப்பிரமவஸ்துவை- வேதம்- வேதமானது - பேசாமற்பேசும்-சொல்லாமற்சொல்லும் என்றவாறு.

(இ-ம்) சுருதிசத்தரூபத்தாலறிவிக்காமல் - அருத்தரூபத்தாலறிவிக்குமென்பதாம். (௯)

(அ-கை.) இரண்டாஞ்சங்கையிற் பிரமமனதிற்கெட்டு மெட்டாதென்பதற் குத்தரங்கூறுவான்றொடங்கி மனோவுற்பத்தியின் காரணங்கூறுகின்றார்.

மு ந்தியசங்கைதீர மொழிந்ததையறிந்துகொள்வாய்
பிந்தியசங்கைதீரப் பேசுமுத்தாநீகேளாய்
யிந்தியங்களுக்கிராச னிதயமாமதினெண்ணங்கள்
புந்தியுமனமுமென்றே புறத்தகத்துலாவியாடும்.

(இ-ள்) முந்தியசங்கைதீர- முதற்சங்கைதீரும்படி-மொழிந்ததை-சொன்னதை- அறிந்துகொள்வாய்- தெரிந்துகொள்வாய - பிந்தியசங்கைதீர இரண்டாஞ்சங்கைதீரும்படி - பேசுமுத்தாம்- சொல்லுமுத்தரத்தையுநீகேளாய்- நீகேட்பாய்- இந்தியங்களுக்கு- மனமுதலியவிந்திரியங்களுக்கு- இராசன்- தலைவனை- இதயமாம்- ஞானமாம்-அதினெண்ணங்கள் அதனினைவுகள்- புந்தியுமனமுமென்று- புந்தியெனவும்- மனமெனவும்- புறத்தகத்து -புறம்பிலு முள்ளிலும்-உலாவியாடும்-சஞ்சரிக்கும்-எ-று.

(இ-ம்.) ஞானஸ்மரணமே மனமும் புத்தியுமாமென்பதாம். ௺ ௩

(அ-கை.) (இ-து.)

உன்முகம்போற்கண்ணாடிக் குள்ளொருமுகங்கண்டாற்போற்
சின்மயவடிவின்சாயை சித்துப்போற்புத்திதோன்றும்
நின்மலவிருத்தியந்த நிழல்வழியாயுலாவுந்
தன்மகன்மகனேயித்தைத் தானன்றோஞானமென்பார்.

(இ-ள்.) உன்முகம்போல் - உனதுவதனத்தைப்போல - கண்ணாடிக்குள்-எதிரிட்டகண்ணாடிக்குள்ளே- ஒருமுகங்கண்டாற்போல் - ஒருவர் வதனங்கண்டதுபோல - சின்மயவடிவின்சாயை- சைதன்யஸ்வரூபச்சாயையே- சித்துப்போல்- அறிவைப்போல்- புத்திதோன்றும்- புத்தியிற் பிரதிபலிக்கும்- நின்மலவிருத்தி- நின்மலவிருத்தியானது - அந்நிழல் வழியாய்- அச்சாயையின்மார்க்கமாக- உலாவும்- சஞ்சரிக்கும்- தன்மகன் மகனே- தர்மரூபியான சற்புத்திரா- இதைத்தானன்றோ இவ்விருத்தியையன்றோ- ஞானமென்பார்- அறிவென்று சத்துக்கள் சொல்லுவார்கள்-எ-று. (ப-ம்.) அந்தக்காணப்பிரதிபலனஞ் சிதாபாசனென்பார்சித்துப்போற் புத்திதோன்றுமெனவும் புத்தியிற்றங்குஞ் சிற்சாயையேவிருத்தியென்பார் நின்மலவிருத்தியெனவும் அவ்விருத்தி சிதாபாசனுக்கிடமாக விளங்குமென்பார் அந்நிழல்வழியா யுலாவவெனவும் லோகாந்தகுந்தம்போலச் சிதாபாசாந்தவிருத்தியே ஞானமென்பார் - இதைத்தான் போலச் சிதாபாசாந்தவிருத்தியே ஞானமென்பார்-இதைத்தானன்றோ ஞானமென்பாரெனவுங்கூறினார் (இ-ம்.) விருத்திஞானமுஞ் சிதாபாச னுமினையவெனக்கூறினதாம், (௬௧)

(அ-கை.) (இ-து.)

உருக்கியதாரீர்நாநா வுருவங்களாறுற்போல
விருத்திகள்கடபடாதி விடயமாய்ப்பரிணமிக்கு
மருப்பலவிடயமெல்லா மாபாசன்றோற்றுவிக்கு
மிருட்டினில்விளக்குங்கண்ணு மில்லாமற்பொருள்காணுதே.

(இ ள்:) உருக்கியதாரீர்- குகையில்லைத்துருக்கிய தாரீரானது-நாநாவுருவங்களாறுற்போல- பலவிதவடிவங்களானதுபோல- விருத்திகள் விருத்திகளானவை - கடபடாதிவிடயமாய்ப் பரிணமிக்கும் - கடப்படமுதலிய வாகாரங்களாகவேறுபடும்- விடயமெல்லாம்- விடயங்களனைத்தையும்- அருப்பலம்- அரும்பலமென்னப்பட்ட- ஆபாசன்றோற்றுவிக்கும்-சிதாபாசன்றெரிவிக்கும்- விளக்குங்கண்ணுமில்லாமல்- தீபமும்- விழியுமின்றி- இருட்டினில்- இருளிலிருக்கும - பொருள்காணுது-வஸ்துதெரியமாட்டாது-எ-று. சிற்சாயையே சகத்தாகத்தோற்றுதலின் விருத்தியே கடபடாதிவிடயமாய்ப்பரிணமிக்குமென்றார்: (௬௨)



(அகை.) (இ-து.)

எரிகின்றவிளக்காற்கண்ணு லிருட்பொருள்காணல்வேண்டுந்
தெரிகின்றபரிதிகாணச் சென்றிடிற்கண்ணேபோதும்
விரிகின்றசகத்தைக்காண விருத்தியும்பலமும்வேண்டும்
புரிகின்றவிருத்தியொன்றேபோதுமெய் பொருள்காண்போர்க்கே

(இ-ள்.) எரிகின்றவிளக்கால்- பிரகாசிக்கின்றதீபத்தினலும்- கண்ணுல்-விழியினலும்- இருட்பொருள்காணல்வேண்டும்-இருட்டின்கண்ணுள் வஸ்துவைப்பார்க்கவேண்டும்- தெரிகின்றபரிதி - தெரியாநின்றசூரியனை- காணச்சென்றிடில்- பார்க்கச்செல்லில்- கண்ணேபோதும்- நேத்திரமொன்றுமேபோதும்- (அவைபோல) விரிகின்றசகத்தைக்காண- பரந்திருக்கின்ற வுலகத்தைப்பார்க்க- விருத்தியும்பலமும்வேண்டும்- மெய்ப்பொருள்காண்போர்க்கு- உண்மையான பிரமவஸ்துவைத் தரிசிப்பவர்களுக்கு- புரிகின்ற- முன்சொல்லாநின்ற- விருத்தியொன்றேபோதும் விருத்தியொன்றுமே போதும்-எ-று. (ப-ம்:) விஷயாஞ்ஞானத்தைப் போக்குதற்கு விருத்திஞானமும் அதை யறிதற்குப் பலரூபமானசிதாபாசனும்வேண்டுமென்பார்- சகத்தைக்காண விருத்தியும்பலமும்வேண்டுமெனவும் - விருத்தியொன்றேபோது மெய்பபொருள் காண்போர்க்கெனவுங்கூறினார்.

(இ-உ-க-ம்.) லோகாந்தகுந்தம்போலவாரமான விருத்தி ஞானமுமாதேயமானசிதாபாசனுமாகியவிவவிரண்டிலக்கணமுங்கூறினார். (௬௩)

(அ-கை) மனத்தினுருவங்கூறல்.

விருத்தியும்பலமுங்கூடும் விகாரமேமனமென்பார்கள்
கருத்தெழும்விருத்திவேண்டுங் கணக்கினுன்மனதிற்கெட்டும்
வருத்தியபலமாமிந்த மனத்திற்கெட்டாதுகண்டா
யருத்தமிப்படியென்றைய மகன்றுநீதெளிந்திடாயே:

(இ-ள்:) விருத்தியுப்பலமுங்கூடும் - விருத்தியும்பலமுஞ்சேர்ந்த- விகாரமே- விகாரரூபமே மனமென்பார்கள்- மனமென்று சத்துக்கள்சொல்லுவார்கள்- கருத்து- பகுத்தறியுநினைவில்-எழுமவிருத்தி-உண்டாகும்விசாரஞானமானது- வேண்டுங்கணக்கினுல்- சிந்தையறிதற் கொருதலையாக வேண்டுதலின்- மனதிற்கு- அவ்விருத்திரூபமானமனதிற்குஎட்டும்-சித்தெட்டும்- வருத்திய- வருத்துகின்ற-பலமாம்-விடயத்தையறியும் பலரூபமான- இந்த மனதிற்கு- அம்மனத்திற்கு- எட்டாதுகண்டாய் சித்தெட்டாது- அருத்தம்- முன்சொல்லிய விரண்டுக்கும்பொருள் இப்படியென்று- இவ்வண்ணமென்றறிந்து- ஐயமகன்று - சந்தேகநீங்கி-நீதெளிந்திடாய்- நீதெளியக்கடவாய்-எ-று. சித்துசப்பர்தஞானம் விரு

த்தியும் சடசப்பந்தஞானம் பலமுமெனக்கொள்க. (ப-ம்.) சித்சடருபம
னமென்பார் - விருத்தியும்பலமுங்கூடு விகாரமேயனமெனவும் - சித்த
ம்சமானவிருத்தியினுற் சிந்தைபறியலாமென்பார் - விருத்திவேண்டுங்
சணக்கினுன் மனதிற்கெட்டுமெனவும்- சடாம்சமானமனதினுற் சித்தத
யறிப்க்கூடாதென்பார் வருத்தியபலமா மிந்தமனத்திற் கெட்டாதென
வுங்கூறினுர்.

(இ-ம்.) அகமுகமுள்ளமனதிற் கறியப்படுமெனவும் பகிர்முக முள்ள
மனதிற் கறியப்படாதெனவுந் தெரிவித்ததாம்.

(அ-கை.) முற்கூறியகடாவிடைகளாற் கோசராகோசரமின்றிய சுத் (மச)
தப்பிரமமான சுவானுபூதியே தானென்றறிந் ததிலுதிக்குமனதையதிற்
கரைக்கும்பொருட் டோர்சங்கைவினுதல்

( வேறு. )

வஞ்சகமில்பாமார்த்தகுருவேசொன்ன வழிகளறிந்தேனினியோ
ர்வசனங்கேளீர்- சஞ்சலமற்றகண்டபூரணமாய்ச்சித்தந் ததாகாரமாவ த
ன்றேசமாதியோக- முஞ்சலையொத்தலைவதுதன் சுபாவமாகி யொருக
ணத்திற்பலவுலகாயுதிக்குமிந்த- நெஞ்சகம்வஸ்துவி லசையா நிவாதநீப
நிலைபடைவதெப்படியோ நீர்சொல்வீரே.

(இ-ள்.) வஞ்சகமில் - வஞ்சனையின்றிய - பரமார்த்தகுருவே-யதார்த்
தமாக விளங்கியவாசிரியரே- சொன்னவழிக ளறிந்தேன்-தேவரீரனுக்கி
ரகித்த மார்க்கங்களைத் தெரிந்துகொண்டேன்- இனியோர்வசனங்கேளீர்
இன்னுமோர் விண்ணப்பங் கேட்கவேண்டும்- சித்தம்-மனமானது-சஞ்
சலமற்று- சலனமின்றி- அகண்டபூரணமாய்- அகண்டபரிபூரணஸ்வரூப
மாய்- ததாகாரமாவதன்றே- தன்மயமாவதனறே- சமாதியோகம்-நிஷ
டையிலுதிக்குஞானம்- உஞ்சலையொத்து - ஊஞ்சலைப்போல அலைவது
சஞ்சலப்படுவது- தன்சுபாவமாகி- தனதியல்பாய்- ஒருகணத்தில்-ஒரு
க்ஷணத்தில் - பலவுலகாயுதிக்கும் - நாநாவுலகமாய்த்தோன்றுகின்ற-இ
ந்தநெஞ்சகம்- இம்மனது - வஸ்துவில்- பிரமத்தில்- அசையா-சலனமின்
றிய- நிவாதநீப- காற்றில்லாத விளக்கைப்போல - நிலைபடைவதெப்படி-
நிலைமையைப்பெறுவதெவ்வண்ணம் - நீர்சொல்வீர்- தேவரீரருளிச்செய்
வீர்-எ-று.

(இ-ம்.) வெளிப்படை.

(அ-கை.) மனதின்முக்குணமுமவைகளாலுண்டாகும்பயனையுங்கூறல்

கருதுமனேகுணமூன்றுமூன்றிலொன்று கதித்தெழுந்தான் ம
ற்றிரண்டுங்காந்துநிற்குந்- தருமமிகுசத்துவமேலானபோது சன்மார்க்
கமானதெய்வசம்பத்துண்டா- மருவுமிராசதமாகிலுலகதேக வாதனையா
ஞ்சாத்திரவாதனையுமாகு- மருமகனேதாமதமேலானபோதி லசுரசம்ப
த்துண்டாகுமறிந்துகொள்ளே.



நிற்கு- குணமூன்றும்- இரிகு

(இ-ள்:) கருதுமனம்- நினைக்கின்றமனதிற்கு- குணமூன்றும்- இரிகு
ணமாம்- மூன்றில்- அம்மூன்றுகுணங்களில்- ஒன்றுகதித்தெழுந்தால்
ஒன்றுமிகுத்தெழுமாயின- மற்றிரண்டும்- பின்னிரண்டுகுணங்களும்-க
ரந்துநிற்கும்- மறைந்திருக்கும்- தருமமிகும்- சற்கருமமுயர்ந்த- சத்துவ
ம்- சத்துவகுணமானது- மேலானபோது-மிகுந்தபோது- சன்மார்க்கமா
ன-சன்மார்க்கமாகிய- தெய்வசம்பத்துண்டாம் - தெய்வச்செல்வ முண்
டாகும்- மருவுமிராசதமாடல்- பொருந்தாநின்ற ரசோகுணமிகுமாயின
உலக- லோகவாதனையும்- தேக-தேகவாதனையும்- சாத்திரவாதனையும்-
சாஸ்திரவாதனையும்- ஆகும்-உண்டாகும்- அருமகனே- அருமையாகிய
புத்திரா- தாமதமேலானபோதில்- தமோகுணமிகுந்தபோதில்- அசுர
சம்பத்துண்டாகும் - அசுரசெல்வமுண்டாகும் - அறிந்துகொள்-தெரிந் (மசு)
துக்கொள்வாய்-எ-று.

(அ-கை:) சித்தம்சமானசத்துவஞ் சேடிக்கின் மனஞ்சித்தி லசைவி
ன்றி நிற்குமெனல்.

மனதுசத்துவசொருபமற்றிரண்டும் வந்துகலந்தன வவற்றைமாற்
றினுற்போந்- தனதுசன்மார்க்கத்தைவிடாதிருந்தபோது தாமதமுமிரா
சதமுஞ்சமிக்கும்பின்னைக்- கனபரிணமஞ்சலனம்போனக்காற் களங்கம
ற்றுநின்ற வாகாயம்போலு- நினதுளமப்படியாமப்பிரமத்தொன்றாய்நி
ருவிகற்பசமாதியிலே நிற்குந்தானே.

(இ-ள்.) மனது-மனமானது- சத்துவசொருபம்- சத்துவவடிவமாம்-ம
ற்றிரண்டும்- மற்றாசோதமோ குணங்களாகியவிரண்டும் - வந்துகலந்த
ன-வந்துசேர்ந்தவைகளாம்- அவற்றை- அவ்விரண்டுகுணங்களையும்-மா
ற்றினுறபோம்- நீக்கிடினீங்கும்- தனதுசன்மார்க்கத்தை - தனதான்மா
ர்க்கமான சத்துவகுணத்தை விடாதிருந்தபோது - விடாமலிருந்தபோ
து தாமதமுமிராசதமுஞ்சமிக்கும்- தமோகுணமு மிரசோகுணமுமணி
க்கும்- பின்னை- பின்பு- கனபரிணமம்- கனமானதிரிசியமாதலும் - சலந
ம்-அதிரசலனமடைதலும் - போம்-நீங்கும் - போனக்கால்- அவைநீங்கி
னல்- களங்கமறறுநின்ற- நிர்மலமாயிருந்த-ஆகாயம்போலும்- அம்மாத்
திரையைப்போலும்- நினதுளம்- உன்மனமானது- அப்படியாம் - அவண்ண
மாம்- அப்பிரமத்து- அப்பிரமஸ்வரூபத்தில் - ஒன்றாய்-ஏகமாய்-நிர்வி
கறபசமாதியிலே - நிருவிகறபசமாதியிலே - நிலைபெறறிருக்கும்
என்றவாறு.

(அ-கை.) (இ-து.)

களங்கமறற கண்ணாடிதன் முன்வேறோர் களங்கமற்ற கண்ணாடி
காட்டும்போது- விளங்கிய தன்மயமாகி யபேதமாகி நவிகறபமின்றி

ருவிகறபமாறுறபோல- வளாந்தறியப்படாவிபுவாய்ச் சத்தாய்ச்சித்தாயா
னந்தமாம்பிரமத் தயிக்கியமான- வுளாந்தெளிந்தபடி யிருந்தா லுலகமெங்
கேயுலேவெங்கேயென் றுசங்கையொழித்திடாயே.

(இ-ள்.) களங்கமற்றகண்ணாடிதன்முன் - நிர்மலமாகிய கண்ணாடிமு
ன்-வேறோர்- மற்றொரு- களங்கமற்றகண்ணாடி-நிர்மலமாகிய கண்ணாடி
யை- காட்டும்போது - காண்பிக்கும்போது- விளங்கியதன்மயமாகி- பிர
காசியாநின்றதனது ஸ்வரூபமாய் - அப்பேதமாகி- பேதமிறந்ததாகி-வி
கறபமின்றி - வேறுபாடின்றி- நிருவிகறமாறுறபோல-ஒன்றுனதுபோ
ல்-அளந்தறியப்படா- அளவிட்டறியக் கூடாத - விபுவாய் - வியாபகமா
கியும்- சத்தாய்- சத்தாகியும் - சித்தாய்-சித்தாகியும் - ஆனந்தமாம்-ஆன
ந்தமாகியும் விளங்குகின்ற- பிரமத்து- பிரமஸ்வரூபத்தில்- ஐக்கியமான
வுளம்- கனாந்தமனமானது - தெளிந்தபடியிருந்தால் - பிரமமாசத்தெளி
ந்தவண்ணம் விளங்கிநின்றால்- உலகமெங்கே - திரிஸ்யமானசகத்தின்று
உலேவெங்கேயென்று- அதைப்பறறிய சஞ்சலமின்றென்று சங்கையொ
ழித்திடாய்- சங்கையைநீக்குவாய்-எ-று. (இ ங க ம்:) சித்தம்சமானமன
ஞ் சித்தாசவேவிளங்கின சகமாதலுமதிற சலனமடைதலுமதற இன்றெ
னவறிவித்ததாம்.

(டுஅ)

(அ கை,) முறகூறியவுத்தாரத்திறை சித்தம்சமானமனஞ் சித்தேயா
யிறறெனவறிந்து மேறசடாம் சமானமனமுமதன்றெழிலு மெவ்விதமா
யின வென்பதைபறியுகிமித்த மனஞ்சித்திலிறக்கிற சிவன்முத்தரெங்ங
னஞ்சஞ்சரிப்பானெனல்.

ஏ கமாய் மனமிறந்தாற சிவன்முத்தரிருக்குமட்டும் பிராரத்வமெ
திறைலுண்பார்- போகமாமனதுபுசித்துத் தொலைப்பதன்றோ புசித்தா
லுமநந்தாலும்போனதன்றே- சோகமாயமனமிறந்தாறபோகமில்லை தோ
ன்றுணமெனின்முத்தரொன்று சொல்லக்கூடாதே- மோகமாமிதுதெரியக்
குருவேநன்றாய் மொழிந்தருள வேண்டுமென்றான் முழுதுமானேன்.

(இ-ள்.) ஏகமாய் - பிரமஸ்வரூபமாகி - மனமிறந்தால்-மனதுநசிக்கின்
சிவன்முத்தரிருக்குமட்டும்-சிவன்முத்தர்களிருக்குமளவும்- பிராரத்வம்
பிராரத்வகன்மங்களை - எதிலுண்பார்- யாதினாலனுபவிப்பார்கள்- போ
கமானது போகங்களை புசித்துத் தொலைப்பதன்றோ- அனுபவித்துநீக்
கவேண்டுமென்றோ புசித்தால் அனுபவிக்கின் மனந்தானும்போன க
ன்றேமனமிறந்ததன்றே சோகமாமனமிறந்தால் துன்பமாகிய மனமி
றக்கின் - போகமில்லை போகானுபவமில்லை தோன்றுமெனில் மனமு
திக்குமாயின் முத்தரொன்று சிவன் முத்தரொன்று சொல்லக்கூடாதே
உரைத்தல்கூடாதே- மோகமாமிதுதெளிய மயக்கமான விச்சங்கைதெ



ளியுமாறு முழுதுமானேன் யாவுமானசீடன் குருவே ஆசிரியரே நன்று
ய் தெளிவாக மொழிந்தருளவேண்டுமென்றான் சொல்லவேண்டுமென்,
றுகேட்டான்-எ-று.

(இ-ம்.) வெளிப்படை.

(அ-கை.) அச்சங்கைக்குத்தரங் கூறுவான் றொடங்கி மனோநாசமிரு
விதமாகக் கூறுகின்றார்.

ம னநாசஞ்சொரூபமென் றுமரூபமென் றும்வகுத்துரைப்பா ரிருவி
கையால்வருமிவற்றில்; வினவாதசிவன்முத்த ரிடத்திலொன்றும் விதே
கமுத்தரிடத்திலொன்று பேறுமைந்தா, தனதானசத்துவமாய் மனஞ்சே
டித்துத் தாமதமாசதன்சித்தல்சொரூபநாச' மனசாகித்துவந்தானுமிலி
ங்கதேகபடங்கும்போதடங்குவதேயரூபநாசம்.

(இ-ள்) மனநாசம் மனோநாசமானது சொரூபமென்றும்' உருவநாசமெ
னவும் அரூபமென்றும் அருவநாசமெனவும் வகுத்துரைப்பார் வகுத்து
ச்சொல்லுவார்கள் இருவகையாய் வருமிவற்றில் இரண்டுவிதமாகவருகி
ன்றவிவைகளில் வினவாத சங்கையறத்தெளிந்த சிவன்முத்த ரிடத்தில்
சிவன்முத்தர்களிடத்து ஒன்றும் உருவநாசமென்றும் விதேகமுத்தரிடத்
தில் விதேகமுத்தர்களிடத்தில் ஒன்றும் அருவநாசமொன்றும் மைந்தா
பாலுக்கனே மேவும் உண்டாகும் தனதான சத்துவமாய் தனதுசுபாவ
மான சத்துவகுணமாக மனஞ்சேடித்து மனம்விஞ்சி தாமதாாசதனசித்
தல் தமோரசோ குணங்களிறத்தல் சொரூபநாசம் உருவநாசமாம் அன
தா மாசற்றவனே சத்துவந்தானும் அச்சத்துவகுணமும் இலிங்கதேக ம
டங்கும்போது சூக்குமசரீர நசிக்கும்போது அடங்குவது நசிப்பதே அ
ரூபநாசம் அருவநாசமாம் -எ-று. (இ-ம்.) மனமுருவ நாசமாயின் சிவன்
முத்தியும் அருவநாசமாயின்விதேகமுத்தியுமாமெனக்கூறினதாம்.(உய)

(அ-கை.) உருவமின்றி யருவமா யுணருருவமானமனதினால் யாவுமனு
பவிக்கலாமெனல்.

சு த்தமாஞ் சத்துவமே யுண்மையாகுந் துகளிருள்போ ஞன்மன
மென்சொல்லும்போம்போம்-வர்த்தமானத்தில் வந்தவுணவையுண்பார்வ
ருவதும்போவது நினைந்து மகிழார்வாடார்- கர்த்தாமகர்த்தைவிட் டகர்
த்தாகிக்காணவிருத் திகளத்தை காண்பாராகி, மூத்தாயிருக்கலு
மாம்- புசிப்புங்கூடு முட்டிலையென்றறிந்து சங்கை மோசிப்பாயே.

(இ-ள்.) சுத்தமாஞ்சத்துவ - களங்கமற்ற சத்துவகுணமே-உண்மை
யாகும்- தத்துவமாம், துகளிருள்போனால் ரசோதமோகுணங்க ளிங்கி

னால், மனமென்சொல்லும் போம்போம் - மனமென்றுரைப்பது நீங்கும்;
வர்த்தமானத்தில்- நிகழ்காலத்தில், வந்தவுணவையுண்பார்- கிடைத்தவு
ண்டியைப் புசிப்பார்கள், வருவதும்- எதிர்காலத்துவரும்பொருளையும்
நினைந்துமகிழார் - கருதிமகிழார்கள், போவதும்-செல்காலத்திற்போன
பொருளையும், நினைந்து - கருதி, வாடார் - வாடார்கள், கர்த்தாம் கந்
தையைவிட்டு, யானெனதென்னு மகந்தையைநீக்கி, அகர்த்தாகி-அகர்
த்தாய், கரணவிருத்திகள்- அந்தக்கரண விருத்திகளையும்' அவத்தை
அவஸ்தாத்ரயங்களையும், காண்பாராகி- பார்ப்பவர்களாகி, முத்தாயி
ருக்கலுமாம் - சீவன்முத்தராயிருக்கலுமாம், புசிப்புங்கூடும்-எல்லாவ
ற்றையு மனுபவிக்கவுங்கூடும், முட்டிலையென்றறிந்து- தடையில்லையெ
ன்றறிந்து, சங்கையோசிப்பாய்- சங்கையைப்புசிக்கினு மவைகளால்வரு
ஞ் சுகதுக்க மிவர்க்கில வென்பதாம்.

(அ-கை.) மனஞ் சத்துவமாக விவகரிக்கின் சமாதியெங்ஙனங்கூடுமெ (உக)
ன்ற வினாவிற்குத்தரம்.

விவகாரவேளையெல்லாஞ் சமாதியென்றால் விகற்பமன்றோமனம
லைந்துவிடாதோவிட்டா,லது தானழுவுமன்றோ வென்றாயாகிலதற்கொ
ருதிட்டாந்தங்கேளாசைகொண்டு, நவமாகப்பரபுருடன் றன்னைக்கூடி
நயந்து சுகமனுபவித்த நாரிநெஞ்சந், தவமானமனைத் தொழில்கள்செய்
யும்போதுந்தழுவியனுபவித்தசுகந் தனைவிடாதே.

(இ-ள்.) விவகாரவேளையெல்லாம்- விவகரிக்குஞ் சாலங்களனைத்தும்,
சமாதியென்றால்- சமாதியென்றசொன்னால் - விகற்பமன்றோ-அவ்விவ
காரதிரிசிய வேறுபாட்டைத் தோற்றுவிக்குமன்றோ - மனமலைந்துவிடா
தோ (அங்ஙனமாயின்) மனஞ்சஞ்சலத்தை யடையாதோ, விட்டால்(அவ்
வனஞ்) சஞ்சலத்தை யடையுமாயின்- அவதானமழுவுமன்றோ-ஞானநழு
வுமன்றோ- என்றாயாகில்- என்றுகேட்பாயாகின்-அதற்கு-அத்தாட்டா
ந்தத்திற்கு- ஒருதிட்டாந்தங்கேள்- யாமொரு திட்டாந்தஞ்சொல்லுது
ங்கேட்பாய்- ஆசைகொண்டு - காமமுற்று- நவமாக-நூதனமாக- பரபு
ருடன்றன்னை- சோரபுருடனை- கூடிநயந்து - இன்புற்றுப்புணர்ந்து-சு
கமனுபவித்த- விடயானந்தத்தை யனுபவித்த- நாரிநெஞ்சம்- ஒருஸ்திரீயின்
மனமானது- தவமான- தவத்துக்குரிய- மனைத்தொழில்கள்- இல்வாழ்க்
கைக்குரிய செயல்களை- செய்யும்போதும்- செய்யுங்காலத்தும்- தழுவிய
னுபவித்த சுகந்தனை - முன்கூடியனுபவித்த விடயானந்தத்தை- விடா
து-நீங்காது-எ-று. நெஞ்சம் சுகந்தனை விடாதென்பதைச் சுகநெஞ்சந்த
னைவிடாதெனப்பொருள்கொள்க - மனதைவிழுங்குவது சுகமாதலின்



(இ-ம்.) விவகாரங்களைச் சத்துவத்தினுதயமான சுகபோதம் விழுங்கிக் (உஉ)
கோடலி னவ்விவகாரஞ் சமாதியே யாமென்பதாம்.

(அ-கை.) விவகாரங்களி லகம்பாவை நீங்குதற்பொருட்டுச்சிற்சுகமா
னசீவன் முத்தரது சத்துவமான மனதிற் கரங்கூடுமோவென்றவினாவி
ற்குத்தரமாக விரதத்திரயங்கூறல்.

தேகத்தனல்லனாகியகர்த்தனாகிச் சீவனின்றிப்பிரமமாய்த்தெளிந்த
முத்தன்- போகத்தையுண்பனென்றாற் கர்த்தாவாமே பூரணமாமகர்த்த
னுக்குப் போகமுண்டோ சோகத்தையறுத்தருளுங் குருவேயிந்தத்து
களறுக்கவேண்டுமென்று சொன்னாயாகில்- மாகர்த்தன்மாபோகிமாத்தி
யாகி வகைமூன்றாயவரிருக்குமகிமைகேளாய்.

(இ-ள்.) தேகத்தனலனாகி-உடலோனானென்ப தல்லாதவனாய்- அகர்த்த
னாகி-அகர்த்தாவாய்- சீவனின்றி- சீவேஸ்வரத்துவமில்லாமல்- பிரமமா
ய்- கூடஸ்தபிரமவைக்கியமாகி- தெளிந்தமுத்தன்-தெளிந்தசீவன்முத்
தனானவன்- போகத்தை யுண்பனென்றால்- விடயபோகங்களையும் புசிப்
பானென்றால்- கர்த்தாவாமே- யானென்பவனாமே-பூரண மாமகர்த்தனு
க்கு- பரிபூரணமான கர்த்தாவுக்கு- போகமுண்டோ- விடயபோகமுள
வோ- சோகத்தையறுத்து - துன்பத்தைக்கெடுத்து-அருளுங்குருவே
இன்பத்தைக்கொடுக்கின்ற வாசிரியரே- இந்தத்துகளறுக்க வேண்டுமெ
ன்று இக்குற்றத்தை நீக்கவேண்டுமென்று- சொன்னாயாகில்- கேட்பா
யாகில்- மாகர்த்தன்- மாகர்த்தனும்- மாபோகி- மாபோகியும் மாத்தியா
கி- மாத்தியாகியுமாகிய- வகைமூன்றாய் - மூன்றுவிதமாக அவரிருக்கு
மகிமைகேளாய் - அச்சீவன் முத்தர்களிருக்கின்ற பெருமையைக்கேட்
பாய்-எ-று.

(இ-ம்.) கர்த்தத்துவமின்றிய கர்த்தத்துவமானசீவன் முத்தருக்குப்
போகங்கூடுந் தன்மை யெங்ஙனமென்ற வினாவிற் குத்தரங்கூறத்தொ (உங)
டங்கினதாம்.

(அ-கை.) மாகர்த்தனிலக்கணங்கூறல்.

செய்கையுஞ்செய்விக்கையு மற்றிருக்குங் காந்தச் சிலைமலைமுன்
னிரும்புகள் சேடிக்குமாபோற்- செய்கையுஞ் செய்விக்கையு மற்றிருக்
கு மென்முன் சடமானவுலகமெல்லாஞ் சேட்டைசெய்யு - மெய்கலந்த
விந்திரிய விகாரரூபவிவகாரவிருத்திக்குவிருத்திதானு- மெய்கலந்தசமா
திக்குஞ் சாட்சியோனான் வெயில்போலென் றுரைத்தவனே விபுமாகர்
த்தன்.

(இ-ள்) செய்கையும்- தொழில்செய்தலும் செய்விக்கையும் தொழில்
செய்வித்தலும்- அற்றிருக்கும்- இல்லாதிருக்கிற-காந்தச்சிலைமலைமுன்

காந்தக்கல்லின் சந்நிதானத்தில் இருப்புகள்- அயங்கள் - சேடிக்குமா போல்- அசையுமாபோல- செய்கையுஞ் செய்விக்கையும் பிரோகபிரோ யங்கள் - அற்றிருக்கும் - இல்லாதிருக்கின்ற - என்முன்-எனது சந்நிதியில்- சடமானவுலகமெல்லாம் - சடமாயுள்ள சகங்களனைத்தும் - சேட்டைசெய்யும்- அசைத்துக்கொண் டிருக்கும் - மெய்கலந்த - தேகத்திற்சேர்ந்த - இந்திரிய - ஞானேந்திரியகன்மேந்திரிய - விகாரரூப - பேதரூபங்களான - விவகாரவிருத்திக்கும் - பிரோகபிரோியமான விருத்திகளுக்கும் விருத்திதானும் - அவ்விருத்திகளடங்கித்தன்மயமான மெய்கலந்தசமாதிக்கும் உண்மைகலந்திருக்கும் ஸ்வரூபசமாதிக்கும்- வெயில்போலன்று- சூரியகிரணத்தைப்போலச் சர்வசாட்சியே நானென்று- உறைத்தவனே ஸ்திரமானவனே - விபு - சர்வவியாபகமாகிய- மாகர்த்தன் மாகர்த்தனும்-எ-று.

(இ-ம்) அத்துவிதமானவெனது சந்நிதியிணடக்குந் தேகமுதலிய விவகாரங்களுக்கு மிவைகளிறந்து நின்றஞானசமாதிக்குஞ் சாட்சிநானே யென்றவைகளோடுங் கூடாமற்கூடி யிருப்பவனே யாகர்த்த னென்பதாம்.

(அ-கை.) மாபோகிமாத்தியாகிகளினிலக்கணங்கூறல். (உ௪)

அறுசுவையின் குணங்குற்றமசுத்தஞ்சுத்த மபத்தியம்பத்திய மெனவுணயந்திடாமற்- பொறுமையுடன் இட்டினதைக்காட்டுத்தீப்போற் போகங்கள் புசிப்பவன்மா போகியாகுஞ் சிறிதுவலிதுகடனதன்னியங்கணன்மைதீமைகள் சேரினும்படிகச்செயல்போற் சித்தம்- வெறிதிருக்குமவனேமாத் தியாகியாவன்விரதமிம்மூன் றுள்ளவரோவீடுள்ளோரே.

(இ-ள்.) அறுசுவையின்- சடுவிதரசங்களின்- குணங்குற்றம்-குணங்கள்- அசுத்தஞ்சுத்தம்- சுத்தாசுத்தங்கள் - அபத்தியம் பத்தியமெனபத்தியாபத்தியங்களென - ஊணயந்திடாமல்-உணவையாராய்ந்துபாராமல் - பொறுமையுடன்- சாந்தத்தோடும் - இட்டினதை - கொடுத்ததை- காட்டுத்தீப்போல்- சடாக்கினிபோல - போகங்கள் புசிப்பவன்- போகங்களை யனுபவிப்பவன்- மாபோகியாகும்- மாபோகியாம்- சிறிது வலிதுகள்- அற்பமகத்துக்கள்- தனதன்னியங்கள்- அன்னியான்னியங்கள்- நன்மை தீமைகள்-நன்குதீங்குகளாகிய விவைகள் - சேரினும்- அடைந்தாலும்- படிகச்செயல்போல்- படிகத்தின்றன்மையைப்போல- சித்தம்- சித்தமானது- வெறிதிருக்குமவனே - பற்றின்றி நிற்பவனே மாத்தியாகியாவான்மாத்தியாகியாவான்-விரதமிம்மூன்று இம்மூன்றுவிரதங்களும் உள்ளவரோ - உடையவர்களோ- வீடுள்ளோர்-முத்தியுடையசிவ



ன்முத்தர்கள்-எ-று. (இ-ம்.) உணவின்ரசாரசங்களைப்பாராமற் றனதுரசமாக யாவையும்புசிப்பவனே மாபோகியெனவும் தன்னிடத்திற் றனக்கன்னியமானவைகளியாதுபற்றினுந்தான் பற்றின்றிச் சுயமாகவிளங்குகின்றவனே மாத்தியாகியெனவுங்கூறியதாம்.

(அ-கை.) சீவன்முத்தன் விவகரித்துக்கொண்டிருக்க வஃதின்றிக்கிருத்தியனுன தெங்ஙன மெனவினுதல். (உ௫)

( வேறு. )

மெய்யுங்கொண்டுபிராரத்வந்தரு விதிவழிநின் றிடவு
முய்யுங்கன்மிகளுக்கனுகுணமாவுறுதொழில்செய்திடவுஞ்
செய்யுஞ்செய்கைமுடிந்தவனென்றுரை செப்புவதெப்படியோ
வையுந்துன்பமகற்றியகுருவேநலமாவருள்வீரே.

(இ-ள்.) மெய்யுங்கொண்டு - தேகத்தைத்தாங்கிக்கொண்டு - பிராரத்வந்தரு- பிராரத்துவகன்மங்கொடுக்கிற - விதிவழிநின் றிடவும்-நியதிமார்க்கத்திநிற்கவும்- உய்யுந்தன்மிகளுக்கு- முமுட்சுகளுக்கு- அனுகுணமா அனுகூலமாக- உறுதொழில்செய்திடவும் - பொருந்திய சிரவணாதிகளைச் செய்துக்கொண்டிருக்கவும் - செய்யுஞ்செய்கை முடிந்தவனென்று கிருதகிருத்தியனென்று- உரைசெய்வதெப்படியோ சொல்லுவதெவ்வண்ணம் வையுந்துன்பம் - வருந்துன்பத்தை அகற்றியகுருவே சீக்கியவாசாரியரே- நலமாவருள்வீர்-நலமாகச்சொல்வீர்-எ-று.

(உ௬)

(இ-ம்.) வெளிப்படை.

(அ-கை.) அவ்வினுவிற்குத்தாங்கூறல்.

ஆடவர்செய்தொழின்மூவகையாகு மவித்தைவசத்துறுநா
ளீடணைமமதையகந்தையுளார்க்கே யிகபரவிவகாரம்
வீடணுவமெனுமிச்சையுளார்க்கே வித்தைபடிப்பவெலாம்
பாடன்மிகுந்தொழிலாற்பலனுண் டோபரிபூரணபானுல்.

(இ-ள்.) ஆடவர்செய்தொழில்- புருஷர்செய்கின்ற கிரியையானது-மூவகையாகும்- மூன்றுவிதமாம்- அவித்தை வசத்துறுநாள்- அஞ்ஞானவசமாய்ச்செல்கின்ற காலத்தில் ஈடணை - ஈஷணைத்திரயமும் - மமதையும்- அகந்தை - அகந்தையும் - உளார்க்கே - உள்ளவர்களுக்குள்ளே- இகபரவிவகாரம் - இகலோகபரலோக விவகாரங்களுளவாம்-வீடணுகுவமெனுமிச்சையுளார்க்கு - முமுட்சுகளுக்கு - வித்தைப்படிப்ப

வெல்லாம்- சட்சித்தைப்பகுத்தமியுஞ் சாஸ்திரங்க ளனைத்தையு மப்பி
யசித்தலுளவாம்- பரிபூரணமானால்- பரிபூரணமானவர்களுக்கு பாடன்
மிகுந்தொழிலால்- மிகுந்தசாஸ்திராப் பியாசத்தினால்- பலனுண்டோ-
பயனுளதோ-எ-று.

(இ-ம்.) அஞ்ஞானதிசையி லுலகவிவகாரங்களு முமுட்சு திசையி
ற்சிரவணாதிவிவகாரங்களுமுளவாம்- முத்தித்திசையிற் பலவியாப்தியி
னறி விர்த்திவியாப்தியாக விவகாரங்களைச்செய்தலினவையுஞ்செய்தஞ்
செய்திலனென்பதாம். (உஎ)

(அ-கை.) சிவன்முத்தர்க் குலகவிவகாரங்க ளிலவாயினுஞ் சிரவணாதி
விவகாரங்கள் வேண்டாமோவெனவினுதல்.

குரவர்சிகாமணியேநீர்சேளீர் கூறினவழியொக்கும்
பாமுடனிகமுமிசழ்ந்தவான்றே பழகுவர்மெய்ஞ்ஞானம்
விரவுமுயற்சியின்மீண்டவாதையினிவேண்டுவரோவேண்டார்
சிரவணமனனாதிகள்வேண்டாவோ சித்தமுறைத்திடவே.

(இ-ள்.) குரவர்சிகாமணியே- தேசிகசிரோரத்னமே- சேளீர்- கேட்
டருள்வீர்- நீர்கூறியவழியொக்கும்- தேவரீரருளிச்செய்த முறைசரியே
பரமுடன்- பரலோகவிச்சையோடும்- இகமும்- இகலோகவிச்சையையும்
இகழ்ந்தவான்றே- நீங்கினமுமுட்சுகளலரோ-மெய்ஞ்ஞானம் உண்மை
ஞானத்தை- பழகுவர் - அப்பியாசிப்பவர்கள்- விரவுமுயற்சியின் மீண்
டவர்- கலக்கின்ற முயற்சியினின்று நீங்கினவர்கள்-அதை- அவ்விகலோ
கபரலோகவிச்சையை- வேண்டுவரோவேண்டார்- விரும்புவாகளோ வி
ரும்பார்கள் (ஆயினும்) சித்தமுறைத்திட- மனநிலை பெறும்பொருட்டு
சிரவணமனனாதிகள்வேண்டாவோ-சிரவணமன்ன முதலியவைகளும்வே
ண்டாவோ-எ-று.

(இ-ம்.) வெளிப்படை.

(அ-கை) அவ்வினாவிற்குத்தாங்கூறல். (உஅ)

கிளர்மகனேகேள்தத்தும்மியார்கேட்டல்செயக்கடனே
தளர்வறுசிந்தித்தலின்முயல்வார்சிலர்சந்தேகங்களுளார்
தெளிதலினிற்பார்விபரிதப்பேய்நீராவாதனையோ
வெளியுருவாயறிவாய்நிறைவாயினர் வேண்டுவதொன்றுண்டோ.

(இ-ள்.) கிளர்மகனே - விளங்காநின்ற புத்திரனே - கேள்- சேட்க
க் கடவாய்- தத்துவமறியார் - உண்மைஞானத்தைத் தெரியாதவர்கள்-
கேட்டல் செயக்கடன்- சிரவணஞ் செய்ய வேண்டியது கடமையாம்-சி
லர்சந்தேகங்களுளார்-சேட்ட வஸ்துநிச்சயத்திற் சந்தேகமுள்ளவர்களா
கியசிலர்தளர்வறுசிந்தித்தலின்-முயல்வார்தளர்வறுற்றிருக்கும்படி மனன



ஞ்செய்தலின் முயற்சிகொள்வார்கள்- விபரீதப்பேய் - ஒன்றையொன்
றாகவறியும் பேய்த்தன்மையுள்ள நீராவாதனையோர் - நீங்காதவாதனை
யையுடையவர்கள்- தெளிதலினிற்பார்-நிருத்தியாசனத்தைக்கொண்டுச
மாதியிலிருப்பார்கள்-வெளியுருவாய்- பரமாகாசமாய்அறிவாய்-அபரோ
ட்சஞானமாய் நிறைவாயினர்- பரிபூரணமானவர்கள்- வேண்டுவதொன்
றுண்டோ-விரும்புவதொன்றுளதோ-எ-று.

(இ-ம்.) கேட்டன் முதலியமூன்றுவிவகாரங்களு மஞ்ஞானமுதலிய
மூன்றுமுள்ளமட்டும் வேண்டுமேயன்றி மேல்வேண்டப்படுவன வல்ல
வென்பதாம். (உகூ)

(அ-கை.) விவகாரநீங்கிச் சீவன்முத்தர்க் கெங்ஙன மகம்பாவமுண்டா
தல் கூடுமெனவினுதல்.

ஐயாசேளீர்தத்துவஞானியு மஞ்ஞானிகள்போலச்
செய்யாநின்றேன் கண்டேனுண்டேன்சென்றேனெனலாமோ
பொய்யாம்விபரிதங்களவர்க்குப்போயினதென்றீரோ
மெய்யாம்பிரமவிசாரமிதன்றேவெளியாயுரையீரே.

(இ-ள்.) ஐயாசேளீர் - எனதாசிரியரே சேட்டருளுவீர தத்துவஞானி
யும் மெய்யுணர்வுடைய சீவன் முத்தனும் அஞ்ஞானிகள்போல - அஞ்
ஞானிகளைப்போல- செய்யாநின்றேன் - இதைச்செய்கின்றேன் கண்
டேன்- இதைப்பார்த்தேன் - உண்டேன்-இதைப்புசித்தேன்-சென்றே
ன்-இங்ஙனம்சென்றேன்- எனலாமோ - என்றுசொல்லலாமோ - அவர்-
க்கு- அச்சீவன்முத்தர்களுக்கு - பொய்யாம்விபரிதங்கள்- அசத்தியமா
னபேதபாவனைகள்- போயினதென்றீரோ நீங்கினதென்றருளினீரோ மெ
ய்யாய்-தத்துவமான- பிரமவிசாரம்- பிரமவிசாரமானது- இதன்றே இஃ
தன்றே- வெளியாயுரையீர்- நன்றாகத் தெரியும்படிசொல்வீர்-எ-று. ()

(இ-ம்) சீவன்முத்த னஞ்ஞானிகளைப்போல விவகரிக்கினவர்களுக்கு
விபரீதமெங்ஙன நீங்கிற்றெனவினாவினதாம். (கூ0)

(அ-கை.) அவ்வினாவிற்குத்தாங்கூறல்.

ஐயந்தகனாவிற்கண்டபழங்கதையோதுவனொருதனையா
வாய்ந்தறிவுற்றவனப்படிசெப்புவனுபாசனுமாகான்
மாய்ந்ததனுடல்வேளாவும்விண்ணவன்மனிதனெனப்படுவான்
வீய்ந்தசிதாபாசன்போமளவும் விவகாரந்தொடரும்.

(இ-ள்.) ஐய்ந்த இந்திரியங்களொழிந்த கனாவிற்கண்ட பழங்கதைசொ
ற்பனத்திறகண்டபழங்கதையை- வாசனையால் - வாசனையினால் - ஓது
வன்-சாக்கிரத்திற்சொல்லுவன் (அதுபோல) ஆய்ந்தறிவுற்றவன்வேத

முடிவான மகாவாக்கியார்த்தத்தை யாராய்ந்து தன்னையறிந்த சீவன்முத்தன் அப்படிசெப்புவன் - அத்தன்மையாகச்சொல்லுவான் ஆபாசனுமாகான்- சிதாபாசனுகான்- மாய்ந்ததனுடல்வேமளவும்- மரித்ததேகந்தகனமாகும் பரியந்தம்- விண்ணவன் - தேவனுயினேன் - மனித னென்னப்படுவான்- மனிதனென்றுசொல்லப்படுவான் (அதுபோல) வியத்தசிதாபாசன்-சித்துருவமாக நசித்தசிதாபாசன் போமளவும் - விதேகமுத்தியையடையுமளவும்- விவகாரந்தொடந்துவரும்என்றவாறு.

(இ-ம்.) சொர்ப்பனத்திற்கண்டகற்பிதத்தைச் சாக்கிரத்திற் சொல்வதுபோல வஞ்ஞானதிசையிற்கற்பிதமாயுள்ள வுலகவிவகாரத்தைஞானதிசையிற் சொல்வதேயன்றி யுண்மையன்றெனினு மவை விதேகமுத்திபரியந்தந் தொடருமென்பதாம். (ங க)

(அ-கை.) சகத்விவகாரநீங்கிச் சமாதிசெய்யினச்செயலுமோர் விவகாரமாதலிலவனெங்ஙன நீர்விவகாரியாவனெனல்.

ஆ ணலையாகுருவேகாண்பதசத்தியமென்றுலு
நானுவிவகாரந்துயரலவோஞானசுகந்தருமோ
போனுலன்றேநன்றுநிட்டைபுரிந்திடல்வேண்டாவோ
தானுநிட்டைபுரிந்தாற்செய்கை தவிர்ந்தவனெப்படியோ

(இ-ள்.) ஆனுலையாகுருவே- அப்படியானு லென்பிதாவாகிய வாசிரியரே- காண்பது- திரியம்- அசத்தியமென்றுலும்- பொய்யாயினும்- நானுவிவகாரம்- அதைப்பற்றிய பலதொழில்கள்- துயரலவோ - துன்பத்தைத்தருபவைகளல்லவா- ஞானசுகந்தருமோ, சிதானந்தத்தைக்கொடுக்குமோ- போனுலன்றே- அத்தொழினீங்கினுனல்லவா - நன்றும்- நன்மையாம்- நிட்டை- அவைகணீங்கும்பொருட்டுச்சமாதிபுரிந்திடல்வேண்டாவோ- செய்யவேண்டாமோ- தானுநிட்டை புரிந்தால்-தன்பயமாகுஞ் சமாதிசெய்தால் எப்படி- எவ்விதம்- செய்கைதவிர்ந்தவன் தொழில்விட்டவன்என்றவாறு.

(இ-ம்.) வெளிப்படை. (ங உ)

(அ-கை.) அவ்வினுவிற்குத்தரம்.

தெ ரிதருமகனேயாரம் பத்தொடுநீருங்விவகார
முரியசமாதியும்விவகாரங்களுமுள்ளத்தொழிலன்றே
துரியபரம்பொருளானவர்வேருெருதொழில்செய்வதுமுண்டோ
வரியசமாதிகள்பழகுவனேலவனுருடனுமன்றே.

(இ-ள்.) தெரிதருமகனே உண்மையறிகின்ற புத்திரா உரிய சமாதியும் தனக்குரிய நிட்டையும் விவகாரங்களும் சகத் தொழில்களும் உள்ளத்தொழில் மனே விவகாரங்களாதலால் விவகாரம் அகத்



தொழில்கள்- ஆரம்பத்தொடுநீரும்- சிரவணுதிகளாற்றீரும் துரியபாம்பொருளான துரியமான பிரமவஸ்துவானவர்கள் வேருெருதொழில்மற்ருெருகிரியை செய்வதுமுண்டோ செய்வதுமுளதோ அரியசமாதிகள் அருமையான ஞானநிட்டைகளை பழகுவனேல் அப்பியாசிப்பானுகில்அவன் அவ்வப்பியாசி ஆரூடனுமன்று அநுபவியல்லன் -எ-று. சகத்விவகாரஞ் சமாதியினுஞ்சமாதி விவகாரஞ்சாக்ஷாத்காரத்தினு நீங்குமெனக்கொள்க. (இ ம்.) சித்துவிவகாரமான சமாதியு மப்பியாசிக்கேயன்றி யாரூடனுக்கின்றென்பதாம்: (ங ங)

(அ-கை)ஆரூடர்களிலுஞ் சிலா சமாதிமுதலியவற்றைச் செய்வதென்னென வினுதலுக்குத்தரம்.

உ த்தமகுருவேயாரூடருமாயொழிலற்றவருள்
சித்தமடங்குதியானுதிகள்சிலர் செய்குவதென்னென்று
லித்தலமருவும்பிராரத்வப்பிறிவெப்படியப்படியே
முத்தரும்வெகுவிதமாகுவரென்பது முன்னேசொன்னேனே.

(இ-ள்.) உத்தமகுருவே நன்மையானதேசிகரே ஆரூடருமாய் சுவாநுபவமுள்ளவர்களுமாய் ஒருதொழிலற்றவருள் ஒருகிரியையுமில்லாதவர்களுக்குள் சித்தமடங்கு மனமடங்குகின்ற தியானுதிகள் சமாதி முதலியவைகளை சிலர் சிலர்கள் செய்குவதென்னென்றுல் செய்வ தென்னென்று கேட்பாயாகில் இத்தலமருவும் இப்பூமியிற்பொருந்தும் பிராரத்வப்பிறிவு பிராரத்வ கன்மம்பகுப்பு எப்படி எவ்விதமோ அப்படியே அவ்விதமேயாம் முத்தரும் சீவன்முத்தரும் வெகுவிதமாகுவரென்பது நானுவிதமாயிருப்பார்களென்பதை முன்சொன்னேன் முன்னமே சொன்னேன்-எ-று.

(இ-ம்.) ஆரூடன்ருெழில் பிராரத்வகன்மமென வறிகவென்பதாம்.

(அ-கை.) (இ-து.)

ந ல்லவனே்சளுலகுபகாரஞானிகள்விவகார
மல்லதுவேருெருபெறுபேறும்மிலையதனுற்பிணியுமிலை
வல்லிசிருட்டிமுதற்பலதொழிலால்வருபுண்ணியபாவ
மெல்லவருக்குமனுக்கிரகஞ்செயுமீசனடைந்திலனே.

(இ ள்:) நல்லவனேகேள்- நன்மையான மாணக்கனே கேட்பாய்ஞானிகள்விவகாரம்- ஞானவான்கடொழில் - உலகுபகாரமல்லது-லோகோபகார நிமித்தியமே வேருெரு- மற்ருெரு, பெறுபேறும்மில்லை- அடையக்கடவதாய் பயனென்றுமில்லை- அதனுல்-அக்கிரியையினுல், பிணியுமிலை- துன்பமுமில்லை, (அஃதெங்ஙனமென்னின்) வல்ல சிருட்டிமுதல் வல்லமையான சிருட்டியாதி, பலதொழிலால்-நானுவிதகிருத்தியங்களி

ளுல் வருபுண்ணியபாவம்-வாாநின்றதருமாதருமம்- எல்லாருக்கும்-யா வருக்கும்- அனுக்கிரகஞ்செயு: அளிக்கின்ற- ஈசனடைந்திலன்- ஈசன டைகிலன்-எ-று.

(இ-ம்.) ஆருடன்செய்யுந்தொழிலீசனைப்போ லுலகோபகார நிமித் தமேயன்றி தன்னிமித்தமன்றென்பதாம். (௬௫)

(அ-கை) வஞ்சகமில்லென்ற செய்யுண்முத லிதுகாறுஞ் சித்திலுதி த்தமனஞ்சலனமின்றிச் சித்தாகவிளங்குவதென்பதை விளக்கி இனிச்சி த்துவியாபகத்தை விளக்கும்பொருட் டம்மனமுள்ள ஞானவானீசனுக் கொப்பாவெனக் குறிப்பாகூற வெங்ஙன மொப்பாவனென்ற வினுவுக் குத்தாம்.

ஈசனுமாயருவாயுருவாகியெழுந்தருளுங்குருவே
யீசனுஞானியுமொப்பென்றீரோயெப்படியொப்பென்ருல்
லீசனுஞானியும்மதைய்கந்தையிகந்ததினுலொப்பா
மீசனுமாம்பலசீவருமாமுலகெல்லாமிவனுமே.

(இ-ள்.) அருவாய்- நிஷ்களமாய்- ஈசனுமாய்- மும்மூர்த்தியுமாய்உரு வாய்- மானிடவடிவமாய்- யெழுந்தருளுங்குருவே- யெருந்தருளியவாசி ரியரோ- ஈசனும்- மாயாரகிதான மும்மூர்த்திகளும்-ஞானியும்-ஞானவா னும்- ஒப்பென்றீரோ- சமானமென்றீரோ - யெப்படியொப்பென்ருல்- எ வ்விதஞ் சமானமாவாரொன்று கேட்பாயாகில்- ஈசனும்- ஈஸ்வானும்-ஞா னியும்-ஞானவானும்- மமதை யகந்தை - மமதையுமகந்தையும்- இகந்ததி னுல்-நீங்கிநிற்றலால்- ஒப்பாம்- சமானமாவர்-இவன்-இந்தஞானி-ஈசனு மாம்- மும்மூர்த்தியுமாவன் - பலசீலமாம்- அந்தசீவர்களுமாவன்- உலகெ ல்லாம்- சகங்களனைத்தும்- ஆம்- ஆவான்-எ-று.

(இ-ம்.) அறிஞ னீசனுக்கொபபாவனென்பதற்கேதுகூறி மற்றுஞ் சீ வேஸ்வரசத்தாவும் விளங்குவானெனக்கூறினதாம். (௬௬)

(அ-கை.) அறிஞனெங்ஙனஞ்சீவர்களாகவிளங்குவானெனவினுதல்.

எல்லாச்சீவருமிவனுனென்றீவன்ருன்முத்தியடைந்
தெல்லாச்சீவருமுத்திபெருமலிருப்பானேனையா
வெல்லாச்சீவருவெவ்வேருனுலிவனெல்லாமலனே
யெல்லாப்பொருளுமுணாத்தருள்குருவேயிதைநீர்மொழியீரோ.

(இ-ள்.) எல்லாச்சிவரும்- சகலசீவர்களும்- இவனுமென்றீர்- இந்தஞா னியாவனென்றுசொன்னீர்- இவன்ருன்- இந்த ஞானி- முத்தியடைந்து வீடடைய- எல்லாச்சீவரும்- சகலசீவர்களும்- முத்திபெருமல்- விடடை யாமல்- இருப்பானேன்- இருப்பதென்ன- ஐயா-ஆசிரியரோ- எல்லாசீவ



ரும்- சகலசீவர்களும்- வெவ்வேருனுல்- தனித்தனியாயிருப்பாராயின் இவன்-இந்தஞானி- எல்லாமலனே- அனைத்துமாகானே- எல்லாப்பொ ருளும்- சாவார்த் தங்களையும்- உணாத்தருள்குருவே- அருளுகின்றதே சிகரோ- இதைநீமொழியீர்- இச்சங்கைக் குத்தரந்தேவரீ ரருள்செய்வீர் எ-று. முத்தியடைய வென்பதுஅடைந்தெனத் திரிந்துநின்றது. (௬௭)

(இ-ம்) ஞானவானுகிய- வொருவன்பெற்றபேற்றினை யுயிர்கள் பெரு மையாலிவனெல்லாமாவதென்பதெங்ஙனங்கூடுமென வினுவினதாம்.

அகமெனுமான்மாபூரணமேகமநேகவிதஞ்சிவ
னகமெனுமந்தக்காரணவுபாதிகளளவிலையாதலினுற்
சகமுழுதுங்குளிர்சந்திரனேகஞ்சலசந்திரர்பலவாஞ்
சகமதிலேரிகுளஞ்சிறுகுழிகால்சட்டிகுடம்பலவால்.

(இ-ள்.) அகமெனுமான்மா- நானென்னுமாத்மாவானது- பூரணமேக ம்-பரிபூரணமானவொன்ரும்- அகமெனும்- நானென்கிற- அந்தக்காரண வுபாதிகள்-மனோவுபாதிகள்- அளவில்லை- மட்டில்லை-ஆதலினுல்-ஆதலா ல்-சிவன்- சிதாபாசன்- அநேகம்விதம்- நாநாவிதங்களாம் - சகமுழுதும் உலகமனைத்தும்-குளிர் குளிர்ச்சிசெய்கின்ற- சந்திரனேகம்- மதியொன் று- சகமதில்- உலகத்தின்கண்- ஏரி-ஏரிகளும்- குளம்- தடாகங்களுஞ்-சி றுகுழி- சிறியபள்ளங்களும்- சால்- சால்களும்- சட்டி-சட்டிகளும்- குட ம்-குடங்களும்- பலவால- பலவாதலால்- சலசந்திரர்பல- சலப்பிரதிபிம்ப ரானசந்திரர்களுமநந்தமாம்-எ-று. (௬௮)

(அ-கை.) (இ॰து.)

சட்டிகுடங்களினென்றுநசித்திடவதனுஞ்சலந்திர
னெட்டுமுதற்சந்திரனெடுகூடுமொழிந்தவைகூடாவே
கட்டுமுபாதிநசித்திடுசீவன்காரணவான்மாவிற்
கிட்டுமையிக்கியமுபாதிகெடாதவர்கேவலமாகாரோ.

(இ-ள்:) சட்டிகுடங்களில்- சட்டிகடமுதலியவைகளின்- ஒன்றுநசித் திட- ஒன்றுகெட- அதனுட்சலசந்திரன்அதற்குட் டோன்றியபிரதிபிம் பசந்திரன்- ஒட்டும்- பொருந்திய- முதற்சந்திரனெடுகூடும் - பிம்பசந் திரனோடுசேரும்- ஒழிந்தவை- ஏனைய-கூடாவே- கூடாவாமவைபோல கட்டுமுபாதி- பந்தித்திருக்குமுபாதி- நசித்திடுசீவன்-மரித்தசீவனு னவன்காரணவான்மாவில் ஆதாரமானவாத்ம ஸ்வரூபத்தில்- கிட்டுமயி க்கியம் ஐக்கியமுண்டாம்- உபாதிகெடாதவர்- அவித்தை னீங்காதவர்க ள்- கேவலமாகார்- கைவல்லியத்தைபடையமாட்டார்கள்.

(இ-உ-க-ம்.) ஓர்கட்சலநசிக்கினதிற் பிரதிபிம்பித்தசந்திரன் பிம்பச்ந்திரனுவனன்றி யேனை பிரதிபிம்ப சந்திரர்களாகார்போல ஓரவித்தைநசிக்கினதிற்றேனறிய்சீவன் சிவமாவனேயன்றி யேனையசீவர்க ளாகாரென்பதாம். (௩௯)

(அ-கை.) முன்பறிஞானீசனுக் கொப்பென்றீ ரங்ஙனமாயினவர் மகிமையிவனுக்கேனின்றெனவினுதல்:

இ வனயன்மால்வேனுகியவீசரோடெப்படியொப்பாகுஞ்
சிவன்முதன்மூவருமகிலசிருட்டி த்திதிநாங்கள்செய்வா
ரவர்பிறர்மதிகளுமுக்காலங்களுமறிவார்விபுவாவார்
தவர்மிகுகுருவேயிவனுக்கவைபோற்சற்றுங்காணேனே.

(இ-ள்) இவன்-இந்தஞானி- அயன்மால்சிவனுகிய- பிரமவிஷ்ணுருத்திராதிப- ஈசரோடு- மும்மூர்த்திகளுடன்எப்படி யொப்பாகும்- எவ்விதஞ்சமானமாவன்- சிவன்முதன்மூவரும்-உருத்திரன்முதலியமும்மூர்த்திகளும்- அகிலம்சகத்தை- சிருட்டி- உண்டாக்குதலும்- திதி- இரட்சித்தலும் நாங்கள்-அழித்தலும் செய்வார் செய்வார்கள்-அவர்-அவ்வீஸ்வரர்- பிறர்மதிகளும்- பிறரறிவையும்- முக்காலங்களும் - திரிகாலங்களையும்- அறிவார்-தெளிவார விபுவாவார்- வியாபக மாவார்கள்-தவமிகுகுருவே- தவத்தின்மிகுந்தயாசிரியரோ- இவனுக்கு- இந்தஞானிக்கு- அவைபோல் அவற்றைப்போல- சற்றுகாணேன்- எவ்வளவும்பார்த்திலன் என்றவாறு.

(இ-ம்.) வெளிப்படை. (௪௰)

(அ-கை) அவ்வினுவிற்குத்தரம்.

தடத்துநீர்நிலாத்திரியெரியுபயமுந்தழுவுமூர்த்தினைக்காக்குங்
குடத்துநீர்விளக்கினிலொளியிரண்டுமோர் குடும்பமாத்திரங்காக்கு
மடுத்தமைந்தனேஞானியுமீசனுமறிவினுற்பிறிவில்லைக்
கெடுத்தமாயையின்குணங்களான்மேலென்றுங் கீழென்றும்பிரிவாமல்

(இ-ள்.) தடத்துநீர்- தடாகத்துசலமும் - நிலாத்திரியெரி-பகல்வர்த்தியுமாகிய- உபயமும்- இரண்டும்- தழுவுமூர்த்தினைக்காக்கும்- பொருந்திய ஆரையிரட்சிக்கும்- குடநீர்- கடத்துசலமும்- விளக்கினிலொளி- தீபப்பிரகாசமுமாகிய- இரண்டும் உபயமும் ஓர்குடும்ப மாத்திரங்காக்கும் ஒரு குடும்பத்தைமாத்திர மிரட்சிக்கும் அடுத்தமைந்தனே - சத்துக்களையடைந்தபுத்திரா- ஞானியும் ஞானவானும்- ஈசனும் - ஈஸ்வரனும் அறிவினுற்பிறிவில்லை ஞானத்திலுலேவேறுபாடில்லை- கெடுத்தபிரமகத்திசெய்தமாயையின்குணங்களால்- மாயையின் றன்மைகளால் மேலென்றும் ஏறுழென்றும்- தாழ்வென்றும் உயர்வென்றும்-பிரிவாம்-வேறாகும்-எ-று.



(இ-ம்.) ஏரிநீருலாயுங் கடநீரில்லத்தையும் காக்குமிடத்திற்சிறிதுபெரிதென்னும் தொழிற் பேதமேயன்றிக் காக்குந் தன்மை யொன்றுவதுபோல ஈசனுக்கும் ஞானிக்கும்மாயை யவித்தைகளாற் றாதம்மியமிருக்கினு மறிவின்றன்மையி லொப்பாவரென்பதாம். (௪௧)

(அ-கை.) (இ-து.)

நர ரின்மன்னனைக்சித்தரைப்போலவே நாரணன்முதலான
சுரர்கண்மாயைவல்லவரணிமாதிகளொக்கமாதவமிக்கோர்
தரணிமானிடர்க்கவைகளில்லாமையாற்றாழ்வுளாராலும்
பிரமபாவனையாலிவரவரொனும்பேதமொன்றிலைபாராய்.

(இ-ள்.) நரரில்- மானிடரில்மன்னனை- அரசனைப்போலவும்- சித்தரைப்போல- சித்தர்களைப்போலவும் - நாரணன்முதலான-திருமான்முதலிய-சுரர்கள்-தேவர்கள்-மாயைவல்லவர்- மாயையில் வல்லமையுடையவர்களாதலால்- அணிமாதிகளொக்க அணிமாமுதலிய வட்டசித்திகணிறைக்க மாதவமிக்கோர்- மகாதவத்தின் மிகுந்தவர்களாவர்- தரணிமானிடர்க்கு- பூமியிலுள்ள மனிதர்களுக்கு அவைக ளில்லாமையால்- அவைகளில்லாமையால் தாழ்வுளாராலும் தாழ்வை யுடையவர்களானாலும்- பிரமபாவனையால்- பரமதிருஷ்டியினுல்- இவர்-இவர்கள் மானிடரெனவும்-அவர்- அவர்கள்தேவர்களெனவும் பேதமொன்றிலைபாராய் - வேறுபாடொன்றிலெனக் காண்பாய-எ-று.

(இ-ம்) மானிடரிற் சித்தருக்குள்ள மகிமைகண் மற்றவர்களுக்கின்றாயினு மம்மானிடத்தன்மையிலொப்பாவதுபோலச் சித்துருவமான திரிமூர்த்திகளுஞ் சீவன்முத்தர்களுந் தேவத்தன்மை மானிடத்தன்மைகளால் வேற்றுமையுள்ளோராயினுஞ் சித்துத்தன்மையி லொப்பாவரென்பதாம்: (௪௨)

(அ-கை) அணிமாதிகளீசனதாயினவிஞானுக்கெங்ஙனமுண்டாயிற்றெனிலவனைநோக்கி யுபாசனைசெய்ததினுலாமெனக்கூறல்.

முத்திநல்கியசற்குருவேபலமுனிகளுக்கணிமாதி
சித்திபூமியிற்கண்டிருக்கவுமந்தச்செல்வமீசனதென்றீர்
புத்தியொத்திடஉரைத்தருளென்றிடிற்புகழுமீசனை வேண்டிப்
பத்திசெய்திடுந்தவத்தினுல்யோசத்தாற்பலித்ததென்றறிவாயே.

(இ-ள்.) முத்திநல்கிய வீடருளிச்செய்த- சற்குருவே- ஞானதேசிகரோ- பலமுனிவர்களுக்கு- அனந்தமிருடிகளுக்கு- அணிமாதிசித்தி-அணிமாமுதலிய வஷ்டசித்திகளுண்டா யிருப்பதை பூமியிற்கண் டிருக்கவும் - இவவுலகத்திற் பார்த்திருக்கவும் - அந்தச்செல்வம் - அச்செல்வமானது- ஈசனதென்றீர்- ஈஸ்வரனதென் றுசொன்னீர்-புத்தியொத்தி

ட-அறிவிலொவ்வும்படிக்கு- உரைத்தருள்- சொலலவேண்டும் என்றிடில்-என்றுகேட்பாயாகின் புகழுமீசனை வேண்டி-துதியாநின் றவீஸ்வரனை விரும்பி பத்திசெய்திடுந்தவத்தினல் பத்திசெய்திடுக்தவத்தினுலும் பலித்ததென் றறிவாய் கிடைத்ததென் றறிந்து கொள்வாய்-எ-று.

(இ-ம்) வெளிப்படை. (௬௫)

(அ-கை.) முன்புள்ள ஞானிகளைப்போல இவர்களுக் கணிமாதிகளே னில்லையெனவினுதல்.

சிவசொரூபமாந்தேசிகமூர்த்தியேசித்திமுத்திகளிரண்டுந்
தவமுடையோரடைகுவரொனிலவர்கள்போற்சகலருமடைவாரோ
அவர்கள்பூருவஞ்சித்தியுஞானமுமடைந்ததுங்கண்டோமே
யிவர்கண்ஞானிகளென்றிடிற்சித்திகளிவர்க்கிலாவகையேதோ

(இ-ள்:) சிவசொரூபமாம்-சிவாகாரமாகிய- தேசிகமூர்த்தியே- குருமூர்த்தியே- சித்திமுத்திகள்- அணிமாதிசித்திபு மோட்சமுமாகியஇரண்டும்- உபயத்தையும்- தவமுளோர்- தவத்தையுடையவர்கள் - அடைகுவரொனில் - அடைவார்களென்றல் அவர்கள்போல் அத்தவத்தனைப்போல-சகலருமடைவாரோ- அனைவருமடைவார்களா- அவர்கள்- அத்தவ முடையவர்கள்- பூருவம்-முன்புள்ள- சித்தியும்அணிமாதிசித்தியும்- ஞானமும்-முத்தியும்- அடைந்ததும்கண்டோம்- பெற்றதுமாகப் பிரமாணத்தாற் பார்த்தோம்-இவர்கண் ஞானிகளென்றிடில்-இவர்களைஞானவான்களென்றுசொன்னல்- சித்திகள்- அணிமாதிசித்திகள இவர்க்கிலாவகையேது-அவர்களுக்கில்லாதவித மியாதினல்-எ-று.

(இ-ம்) வெளிப்படை.

(அ-கை.) அவ்வினுவிற்குத்தரம்.

காமியத்தவங்காமியமொன்றையுங்கருதிடாத்தவமென்றும்
பூமியிற்றவமிருவகைசித்தியும்போதமுந்தருமைந்தா
ஆமிவற்றிலொன்றியுற்றிஞெலொன்றையேயடைகுவரிதுநீர்வை
யாமுரைத்தவவ்விரண்டையுமியற்றினன்றுளபெரியோரே.

(இ ள்.) காமியத்தவம்- காமியதவசெனவும்- காமியமொன்றையுங்கருதிடாத் தவமென்றும்- நிஷ்காமிய தபசெனவும்- பூமியில்-உலகத்தில்-தவமிருவகை- தவமிரண்டுவிதமாம்- சித்தியும் காமியதபஞ்சித்தியையும்- போதம்- நிஷ்காமியதப முத்தியையும்- தரும்- கொடுக்கும் - மைந்தா- மாணுக்கா- ஆமிவற்றில்- ஆகாநின்ற விவவிரண்டில்- ஒன்றியற்றினர்- ஒன்றைப்பிபாசஞ்செய்தவர்கள்- ஒன்றையேயடைகுவர்- அவ்வொன்றினையே யடைகுவார்கள் இதுநீர்வை- இதுநிச்சயமாம்- அன்றுளபெரியோ



ர்- அப்போதுள்ளமகான்கள்- யாமுரைத்த நாம்சொன்ன - அவ்விரண்டையுமியற்றினர்- அக்காமியத்தவ நிஷகாமியதவமென்னு மிரண்டிலுமுயற்சிசெய்தார்கள்-எ-று.

(இ-ம்.) முன்னுள்ளஞானவான்களிற் சிலரிரண்டுதவத்தையுமனுசந்தித்ததனுற்சித்திமுத்திகளிரண்டையும் பெற்றூர்களென்பதாம். (௬௬)

(அகை.) (இ-து.)

அனகமைந்தனேமுத்திஞானத்தையேயடைந்தனால்லாமற்
சனகன்மாபலிபகீரதன்முதலினேர்சித்திகள்படித்தாரா
வினிபசித்திவைவிரும்பினர்சிலர்சிலரிரண்டையுமுயன்ருர்கண்
முனிவர்சித்திகள்விநோதமாத்திரந்தருமுத்திபைத்தராவே.

(இ-ள்.) அனகமைந்தனே-களங்கமற்றவனே- சனகன் - சனகராசன்- மாபலி-மகாபலிச்சக்கிரவர்த்தி- பகீரதன் - பகீரதராசன் - முதலினோர்- ஆதியானவர்கள்- ஞானத்தை - ஞானத்தை யப்பியாசித்து - முத்தி- மோட்சத்தை- அடைந்தனரல்லாமல- பெற்றூர்களேயன்றி- சித்திகள் படித்தாரா- அணியாதிசித்தியை யப்பியாசஞ்செய்தார்களா- சிலர்- சில முனிவர்கள்- இனியசித்தியைவிரும்பினர் இனிமையானவணிமாதிசித்திபையாத்திரம் விருப்பினர்கள்- சிலா- சிலமுனிவர்கள் - இரண்டையுமுயன்ருர்கள்-சித்திமுத்திகளிரண்டையு மப்பியாசித்தார்கள் முனிவர் சித்திகள்- முனிவரப்பியாசித்த வணிமாணிசித்திகளானவை- விநோதமாத்திரந்தரும்- காலம்போக்கும்விளையாடலைமாத்திரங் கொடுக்கும்-முத்திபைத்தரா-மோட்சத்தைக் கொடுக்கமாட்டாது-எ-று.

(இ-ம்) யோகத்தினு லணியாதிகளைப்பெற்று மவைகளாற்பயன்படாமற்பின்னர் ஞானப்பேற்றினுன் முத்திபைப் பெற்றூர்களாதலாலச்சித்திகளை ஞானிகள் விரும்பவில்லை யென்பதாம். (௬௭)

(அ-கை:) சித்திகளிற்பயனின்றென்பது தெரிந்துஞ்சிலஞானிக ளேனதைவிரும்புகின்ருர்களென விஞதலுக்குத்தரம்.

யோகஞானமேமுத்திபைத்தருமெனிஞெழிந்தசித்திகள்வேண்டி
மோகமாயுடல்வருந்தினர்சிலசிலமுத்தர்களேனென்ருற்
போகமாய்வரும்பிராரத்வகன்மங்கள்புசித்தன்றேநசித்தேகு
மாகையாலந்தச்சித்திகள்பிராரத்வமாகுமென்றறிவாயே.

(இ-ள்.) யோகஞானமே- ஐக்கியமானவத்துவிதஞானமே - முத்திபைத்தருமெனின் - மோட்சத்தைக்கொடுக்குமாயின்-ஒழிந்தசித்திகள் அதுநீங்கியவணியாதிசித்திகளை வேண்டி -விருப்பி- மோகமாய்-ஆசையுற்று- சிலசிலமுத்தர்கள் - சிலசீவன்முத்தர்கள-உடல்வருந்தினர்-தேகம்வருத்தமுற்றூர்கள்- ஏனென்ருல்- அவ்வாறுவருந்தியதியாதினலென்னில்- போகமாய்வரும்- அனுபோகமாய்வருகின்ற - பிராரத்வகன்ம

ட-அறிவிலொவ்வும்படிக்கு- உரைத்தருள்- சொலலவேண்டும் என்றிடி ல்-என்றுகேட்பாயாகின் புகழுமீசனை வேண்டி-துதியாநின்றவீஸ்வரனை விரும்பி பத்திசெய்திடுந்தவத்திஞல் பத்திசெய்திடுந்தவத்திஞலும் ப லித்ததென்றறிவாய் இடைத்ததென்றறிந்து கொள்வாய்-எ-று.

(இ-ம்) வெளிப்படை. (சாகூ)

(அ-கை.) முன்புள்ள ஞானிகளைப்போல இவர்களுக் கணிமாதிகளே னில்லையெனவிஞதல்.

சிவசொரூபமாந்தேசிகமூர்த்தியேசித்திமுத்திகளிரண்டுந்
தவமுடையோரடைகுவரெனிலவர்கள்போற்சகலருமடைவாரோ
அவர்கள்பூருவஞ்சித்தியுஞானமுமடைந்ததுங்கண்டோமே
யிவர்கண்ஞானிகளென்றிடிற்சித்திகளிவர்க்கிலாவகையேதோ

(இ-ள்:) சிவசொரூபமாம்-சிவாகாரமாகிய- தேசிகமூர்த்தியே- குருமூர்த்தியே- சித்திமுத்திகள்- அணிமாதிசித்திபு மோட்சமுமாகியஇரண்டும்- உபயத்தையும்- தவமுளோர்- தவத்தையுடையவர்கள் - அடைகுவரெனில் - அடைவார்களென்ருல் அவர்கள்போல் அத்தவத்தைப்போல-சகலருமடைவாரோ- அனைவருமடைவார்களா- அவர்கள்- அத்தவ முடையவர்கள்- பூருவம்-முன்புள்ள- சித்தியும்அணிமாதிசித்தியும்- ஞானமும்-முத்தியும்- அடைந்ததும்கண்டோம்- பெற்றதுமாகப் பிரமாணத்தாற் பார்த்தோம்-இவர்கண் ஞானிகளென்றிடில்-இவர்களைஞானவான்களென்றுசொன்ஞல்- சித்திகள்- அணிமாதிசித்திகள இவர்க்கிலாவகையேது-அவர்களுக்கில்லாதவிதமியாதிஞல்-எ-று.

(இ-ம்) வெளிப்படை.

(அ-கை.) அவ்விஞவிற்குத்தாம்.

காமியத்தவங்காமியமொன்றையுங்கருதிடாத்தவமென்றும்
பூமியிற்றவமிருவகைசித்தியும்போதமுந்தருமைந்தா
ஆசமிவற்றிலொன்றியுற்றிஞலொன்றையேயடைகுவரிதுநீர்வை
யாமுரைத்தவவ்விரண்டையுமியற்றிஞன்றுளபெரியோரே.

(இ ள்.) காமியத்தவம்- காமியதவமெனவும்- காமியமொன்றையுங்கருதிடாத் தவமென்றும்- நிஷ்காமிய தபமெனவும்- பூமியில்-உலகத்தில்-தவமிருவகை- தவமிரண்டுவிதமாம்- சித்தியும் காமியதபஞ்சித்தியையும்- போதம்- நிஷ்காமியதப முத்தியையும்- தரும்- கொடுக்கும் - மைந்தா- மாணக்கா- ஆமிவற்றில்- ஆகாநின்ற விவவிரண்டில்- ஒன்றியற்றிஞர்- ஒன்றைப்பியாசஞ்செய்தவர்கள்- ஒன்றையேயடைகுவர்- அவ்வொன்றினையே யடைகுவார்கள் இதுநீர்வை- இதுநிச்சயமாம்- அன்றுளபெரியோ



ர்- அப்போதுள்ளமகான்கள்- யாமுரைத்த நாம்சொன்ன - அவ்விரண்டையுமியற்றிஞர்- அக்காமியத்தவ நிஷ்காமியதவமென்னு மிரண்டிலுமுயற்சிசெய்தார்கள்-எ-று.

(இ-ம்.) முன்னுள்ளஞானவான்களிற் சிலரிரண்டுதவத்தையுமனுசரித்ததனுற்சித்திமுத்திகளிரண்டையும் பெற்ருர்களென்பதாம். (சரு)

(அகை.) (இ-து.)

அனகமைந்தனேமுத்திஞானத்தையேயடைந்தனரல்லாமற்
சனகன்மாபலிபகீரதன்முதலிஞேர்சித்திகள்படித்தாரா
வினிபசித்திபைவிரும்பினர்சிலர்சிலரிரண்டையுமுயன்ருர்கண்
முனிவர்சித்திகள்விநோதமாத்திரந்தருமுத்திபைத்தராவே.

(இ-ள்.) அனகமைந்தனே-களங்கமற்றவனே- சனகன் - சனகாசன்-மாபலி-மகாபலிச்சக்கிரவர்த்தி- பகீரதன் - பகீரதராசன் - முதலிஞேர்-ஆதியானவர்கள்- ஞானத்தை - ஞானத்தை யப்பியாசித்து - முத்தி-மோட்சத்தை- அடைந்தனரல்லாமல்- பெற்ருர்களேயன்றி- சித்திகள் படித்தாரா- அணிமாதிசித்தியை யப்பியாசஞ்செய்தார்களா- சிலர்- சில முனிவர்கள்- இனியசித்தியைவிரும்பிஞர் இனிமையானவணிமாதிசித்திபைமாத்திரம் விரும்பிஞர்கள்- சிலர்- சிலமுனிவர்கள் - இரண்டையு முயன்ருர்கள்-சித்திமுத்திகளிரண்டையு மப்பியாசித்தார்கள் முனிவர் சித்திகள்- முனிவரப்பியாசித்த வணிமாணிசித்திகளானவை- விநோதமாத்திரந்தரும்- காலம்போக்கும்விளையாட்டையாத்திரங் கொடுக்கும்-மு த்திபைத்தரா-மோட்சத்தைக் கொடுக்கமாட்டாது-எ-று.

(இ-ம்) யோகத்திஞ லணியாதிகளைப்பெற்று மவைகளாற்பயன்படாமற்பின்னர் ஞானப்பேற்றிஞன் முத்திபைப் பெற்ருர்களாதலாலச்சித் (சசா)
திகளை ஞானிகள் விரும்பவில்லையென்பதாம்.

(அ-கை:) சித்திகளிற்பயனின்றென்பது தெரிந்துஞ்சிலஞானிகளே னதைவிரும்புகின்ருர்களென விஞதலுக்குத்தரம்.

யோகஞானமேமுத்தியைத்தருமெனினொழிந்தசித்திகள்வேண்டி
மோகமாயுடல்வருந்திஞர்சிலசிலமுத்தர்களேனென்ருற்
போகமாய்வருப்பிராரத்வகன்மங்கள்புசித்தன்றேநசித்தேகு
மாகையாலந்தச்சித்திகள்பிராரத்வமாகுமென்றறிவாயே.

(இ-ள்.) யோகஞானமே- ஐக்கியமானவத்துவிதஞானமே - முத்திபைத்தருமெனின் - மோட்சத்தைக்கொடுக்குமாயின்-ஒழிந்தசித்திகள் அதுநீங்கியவணியாதிசித்திகளை வேண்டி -விரும்பி- மோகமாய்-ஆசையுற்று- சிலசிலமுத்தர்கள் - சிலசீவன்முத்தர்கள்-உடல்வருந்திஞர்-தேகம்வருத்தமுற்ருர்கள்- ஏனென்ருல்- அவ்வாறுவருந்தியதியாதிஞலெனில்- போகமாய்வரும்- அநுபோகமாய்வருகின்ற - பிராரத்வகன்ம

ங்கள் - பிராரத்வகன்மங்களானவை- புசித்தன்றே - நசித்தேகும்-புசி த்தல்லவாகெட்டுப்போம் - ஆகையால் - ஆதலால்- அந்தச்சித்திகள்-அ வாகள்பெற்றவணிமாதிசித்திகள் - பிராரத்வமாகுமென்று-இச்சாபிரார த்வமாகுமென்று- அறிவாய்-அறிந்துகொள்வாய்-எ-று.

(இ-ம்.) சித்தியைவிரும்புவது பிராரத்வகன்மமென்பதாம். (சஎ)

(அ-கை.) ஐந்தெளிவித்தவாசிரியனையன்பின்வியந்துதுதித்தல்

இலக்கமாயிரஞ்சுருதியாலூகத்தாலென்மனமசையாமற்
பிலக்கவேண்டுமென்றருட்குருவே யசப்பிராந்திபோய்தெளிவானேன்
றுலக்கமானகண்ணாடிபையடிக்கடி துலக்கினுற்பழுதன்றே
யலக்கண்மாற்றியதேவரீரெனக்குரையமுதங்கடெவிட்டாவே.

(இ-ள்.) இலக்கமாயிரஞ்சுருதியால்-அளவற்ற வேதங்களினுலும்-ஊகத்தால்- யுத்தியினுலும்- என்மனம்-என்மனமானது - அசையாமற்பிலக்கவேண்டுமென்று- சலனமின்றிஸ்திரமாயிருக்க வேண்டுமென்று அருட்குருவே- அனுக்கிரகஞ்செய்யுந்தேசிகரோ-அகப்பிராந்திபோய்-மனதின்கணுள்ளமயக்கம்நீங்கி- தெளிவானேன்- தெளிவையடைந்தேன் துலக்கமானகண்ணாடியை- விளக்கமானகண்ணாடியை- அடிக்கடி துலக்கினுல்-திரும்பத்திரும்ப விளக்கினுல்- பழுதன்றே-குற்றமல்லவே- அலக்கண்மாற்றிய-பவத்துன்பநீக்கிய தேவரீர்- சுவாமிகள்எனக்குரை-அடியேனுக்கருளிய- அமுதங்கள்- உபதேசாமுதங்கள்தெவிட்டா-புசிக்கப் புசிக்கத்தெவிட்டாவாம்-எ-று.

(இ-ம்.) வெளிப்படை. (சஅ)

(அ-கை.) பிரமசிருஷ்டியான சிவேஸ்வர சகத்விவகாரங்க ளறிஞனதுபிராரத்வமென்றறிந்தசிட னதற்குவித்தாக வுகபத்தி சிருஷ்டியினலமைந்துகிடக்கின்ற சஞ்சிதத்தைக் கெடுக்கும்பொருட் டஃதுநசிக்குமென்ற விரண்டுவகையில் யாதுண்மையெனவினுதல்.

கைதவங்களைச்சாத்திரஞ்சொல்லுமோகருணையாலெனையாளு
மையனேகுருவேயெவராகிலுமனுபவித்தாலன்றிச்
செய்தகன்மங்கள்விடாதென்றவசனமுஞ்சென்மசஞ்சிதம்வேவத்
துய்யஞானத்தீச்சுடுமென்றவசனமுந்துணிவதெப்படிநானே.

(இ-ள்.) கைதவங்களை- அசத்தியங்களை-சாத்திரஞ்சொல்லுமோ சாஸ்திரங்கள்கூறுமோ - கருணையால் - கிருபையினுல் - எனையாளும்-அடியேனையாளாநின்ற- ஐயனே குருவே - என்னுண்டவனுகிய வாசாரியரோ - எவராகிலும - யாவராகிலும் - செய்தகன்மங்கள் - செய்தசெநமிசமாகிய - சஞ்சிதவினைகளை அனுபவித்தாலன்றி - புசித்தாலல்லது விடாதென்றவசனமும்- நீங்காதென்றவாக்கியமும் வேவ - அஃது நுருகும்படி - துய்ய ஞானத்தீ - பரிசுத்தமான ஞானக்கினியான து



சுடுமென்ற வசனமும்- எரிக்குமென்ற வாக்கியமு மாகிய விரண்டையும் (இ-ம்.)
நான்- அடியேன்; துணிவதெப்படி - தெளிவதெவ்விதம்-எ-று. (இ-ம்.)
சஞ்சிதகன்மமனுபவித்தாற்றீரும் ஞானத்தாற்றீருமென்ற வசனத்தில் (சகூ)
யாதுறுதியெனவினுவினதாம்.

(அ-கை.) அவ்வினுவிற்குத்தரம்.

சிவபேதங்களளவிலைமைந்தனேசெய்கையுமளவில்லை
யாவவாமவரவாதிகாரங்களறிந்துபக்குவநோக்கிப்
பூவலர்ந்துபின்பலன்கள்காட்டுவன்போற்பூருவஞ்சித்தாந்தங்
காலல்வேதங்களிரண்டையும்வசனிக்குங்காண்மூவகையாலே.

(இ-ள்.) மைந்தனே-மாணுக்கனே- சிவபேதங்கள்- சிவர்களுடையவேறுபாடுகள் அளவில- பட்டில்லை, செய்கையுமளவில்லை - அவர்செயலுமட்டில்லை, ஆவவாம்- அவரவர்களுக்கானவாகுமாதலால்-அவரவாதிகாரங்களறிந்து- அவரவர்களினதிகாரந்தெரிந்து- பக்குவநோக்கி-பருவம்பார்த்து, பூ- மலரானது, அலர்ந்து- விகசித்து - பின்-பின்புபலங்கள்காட்டுவனபோல் - பயனைக்கொடுப்பதுபோல, காவல்வேதங்கள்-நம்மைக்காக்கின்றசுருதிகள் - காண்டமூவகையால்-கர்மகாண்டம்பத்திகாண்ட ஞானகாண்டமென்னு மூன்றுபகுப்பினுல், பூருவம்- பூருவபட்சவாக்கியமும், சித்தாந்தம்- சித்தாந்தவாக்கியமுமாகிய, இரண்டையும்வசனித்தும்- இரண்டுவகையையுஞ் சொல்லும்-எ-று.

(இ-ம்.) சிடனதுபக்குவத்திற்கேற்கப் பூருவபட்சஞ் சித்தாந்தமென (ருய)
விரண்டாகவேதங்கூறு மென்பதாம்.

(அ-கை.) (இ-து.)

ஆனபாவிகளடைவனநரகங்களவசியமானுலுந்
தானமந்திரவிரதவோமங்களாற்றவிருமென்பதுபொய்யோ
வீனமாம்பலசன்மசஞ்சிதவினையெத்தனையானுலு
ஞானமாங்கனல்சுடுமென்றமறைமொழிநம்பினுல்வீடுண்டே.

(இ-ள்.) ஆனபாவிகள்-கொடிதானபாவிகள், அடைவன நரகங்கள் நரகங்களையடைவது, அவசியமானுலும்- உண்மையானுலும்' தானம் - தானங்களினுலும்மந்திரம்- மந்திரங்களினுலும்விரதநோன்புகளினுலும் ஓமங்களால்- யாகங்களினுலும், தவிருமென்பது ஒழியுமென்பது- பொய்யோ- அசத்தியமா, ஈனமாம்- இழிவாகிய, பலசன்மம் - அனந்தசனனத்தைக்கொடுக்கும், சஞ்சிதவினை - சஞ்சிதகன்மம், எத்தனையானுலும்-எவ்வளவு சேர்ந்திருக்கினும், ஞானமாங்கனல்- ஞானக்கினியானது, சுடுமென்ற-எரிக்குமென்ற- மறைமொழி- வேதவாக்கியத்தை, நம்பினுல்-நம்புவானுனல், வீடுண்டு-முத்தியுண்டாம்-எ-று.

ட௨

(அ-கை.) சஞ்சிதத்தைக்கெடுக்குஞானமிருக்கக் கன்மத்தைவிரும்புவதென்னெனவினுதல்.

என்மனந்திருக்கோயிலாத்தினங்குடி யிருந்தருள்குருமூர்த்தி
சென்மசஞ்சிதவினையைவேறுத்திடுந்தேவரீர்மெய்ஞ்ஞானந்
தன்மயந்தருமகிமையைவிபுதர்சகத்துளோரறியாமற்
கன்மமாங்குழியினில்விழுந்தழிகின்றகாரணமுரையீரோ.

(இ-ள்.) என்மனம்- அடியேனிதயாப்பாமே, திருக்கோயிலா-சிறந்த கோயிலாக, தினம்-எப்போதும், குடியிருந்தருள்-குடிகொண்டிராநின்ற, குருமூர்த்தி- தேசிககுருமூர்த்தியே சென்மசஞ்சிதவினையைபவிருட்சமான சஞ்சிதகன்பத்தை, வேறுத்திடும்- மூலத்தோடு கெடுக்கின்ற- தேவரீர்மெய்ஞ்ஞானம்- சுவாமிகள்போக்கு முன்மை ஞானமானது- தன்மயந்தரும்- தனது - ஸ்வரூபத்தைக்கொடுக்கும் - மகிமையை- பெருமையை- விபுதர்- வானவரும்- சகத்துளோர்- உலகத்தாரு அறியாமல்-தெரியாமல்- கன்மமாம்- கிரியையாகிய- குழியினில்-படுகுழியில் விழுந்தழிகின்ற- வீழ்ந்து கெடுகின்ற- காரணமுரையீர்- காரணத்தைச் சொல்வீர் என்றவாறு.

(இ-ம்.) வெளிப்படை.

(அ-கை.) (இ-து) அவ்வினுவிற்குத்தாம்.

அழிவிலாததற்பதந்தனைமைந்தனேயகமுகத்தவர்சேர்வார்
வழிநடப்பவர்பராமுகமாகினுன்மலர்ந்தகண்ணிருந்தாலுங்
குழியில்வீழ்வர்காணப்படிவெளிமுகங்கொண்டுகாமிகளானோர்
பழிதரும்பிறவிக்கடலுழலுவார்பரகதியடையாரே.

(இ-ள்.) அழிவிலாத- கெடாத- தற்பதந்தனை- பிரமபதத்தை-மைந்தனே-புத்திரா- அகமுகத்தவர்சேர்வார்- அந்தர்முகத்தையுடையவர்களடைவார்கள்- வழிநடப்பவர்- மார்க்கத்திற்செல்பவர்கள் - பராமுகமாகினுல்- பராமுகமாய்நடந்தால்- மலர்ந்தகண்ணிருந்தாலும்- விசித்தமான நேத்திரமிருக்கினும்- குழியில் வீழ்வர்காண்- பள்ளத்தில்விழுவார்கள் அப்படி-அவ்வண்ணம்- வெளிமுகங்கொண்டு- பகிர்முகத்தினுல் காமிகளானோர்- இச்சையையுடையவர்கள்- பழிதரும்- பழியைக்கொடுக்கின்ற பிறவிக்கடலுழலுவார்- பவசமுத்திரத்திற் சுழலுவார்கள்- பரகதி- முத்தியை-அடையார்-பெறமாட்டார்கள்-எ-று.

(இ-ம்) அகமுகமின்றிப்பகிர்முகமாகச் செல்லுதலே கன்மங்களிற்செல்லுதற்கேதுவென்பதாம். (ருஉ)

(அ-கை.) சிவச்செயலிவை சீவச்செயலிவையெனத் தெளியுணித்தஞ் சிவன்பகிர்முகமாதலீசன்செய்விக்குஞ் செயலேயன்றிச் சீவர்களொன செய்வார்களென்ற வினுவிற்குத்தாம்.



சிறந்தநன்மையுந்தீமையு மீசனூர்செய்விக்குஞ்செயலன்றே
பிறந்தசீவர்களென்செய்வாரவர்கள்மேற் பிழைசொலும்வகையேதோ
துறந்ததேசிகமூர்த்தியேயென்றிடிற்சுருதிநூற்பொருண்மார்க்க
மறந்தமூடர்கள்வசனிருக்கும்பிராந்திகாண்மைந்தனேயதுகேளாய்

(இ-ள்) சிறந்தநன்மையும்- சிறப்பானநன்கும்- தீமையும்- தீங்கும்-ஈசனூர் ஈசனுனவர்- செய்விக்குஞ்செயலன்றே- செய்விக்குஞ்செய்கையல்லவா- பிறந்தசீவர்கள்- சனித்தசீவர்கள் என்செய்வார் - என்னசெய்வார்கள்- அவர்கள்மேல்- அச்சீவர்கள்மேல்- பிழைசொல்லும் - குற்றஞ்சொல்கின்ற- வகையேதோ- வகையென்ன-துறந்த தேசிகமூர்த்தியேயென்றிடில்- சகலபற்றுக்களையும் விடுத்த வாசிரியரோவென்று கேட்பாயாகில் சுருதிநூற்பொருண்மார்க்கம் வேதசாஸ்திரார்த்தவழியை மறந்தமூடர்கள்- மறந்தமஞ்ஞானிகள் வசனிக்கும் பிராந்திகாண்-சொல்கின்றமயக்கமாம்- மைந்தனே புத்திரனே அதுகேளாய் அதைக்கேட்பாய் எ-று. ()

(அ-கை.) (இ-து.)

இகழ்ந்தவீசனூர்சிருட்டியுஞ்சீவனூர்சிருட்டியும்வெவ்வேறே
சகந்தனிற்பொதுவீசனூர்சிருட்டிகள் சராசரப்பொருளெல்லா
மகந்தையாமபிமானங்கள்கோலங்களாசைகளிவையெல்லா
நிகழ்ந்தசீவனூர்சிருட்டிகளாகுங்காணிமலனூர்செயலன்றே.

(இ-ள்.) திகழ்ந்தவீசனூர் சிருட்டியும்- விளங்கிய வீஸ்வரசிருட்டியும் சகந் சீவனூர்சிருட்டியும்- சிவசிருட்டியும் - வெவ்வேறு-வேறுவேறும் - சகந்தனில்-உலகத்தில்- பொது- பொதுவாகிய- சராசரப் பொருளெல்லாம் ஈசனூர்சிருட்டிகள்- ஈஸ்வரசிருட்டிக சராசரப்பிரபஞ்சங்களனைத்தும்- அபிமானங்கள்- அபிமானங்களுளாம் அகந்தையாம்- அகந்தையாகிய- அபிமானங்கள்- ஆசைகள் இராங்களுமாகியஇவையெம்- கோபங்கள்- துவேஷங்களும்-ஆசைகள் சீவனூர்சிருட்டிகளாகுல்லாம்- இவைகளனைத்தும்- நிகழ்ந்த-விளங்கிய- நின்மலமான வீஸ்வரங்காண்- சிவசிருட்டிகளாம் நிமலனூர்செயலன்று- சிருட்டிகளல்ல-எ-று.

(இ-ம்.) ஈஸ்வரசிருட்டி சீவசிருட்டிகளிவையெனப் பகுத்துக் கூறினதாம். (ருரு)

(அ-கை.) (இ-து.)

மூவராப்பரன்சிருட்டிகளுயிர்க்கெலாமுத்திசாதனமாகும்
சீவனூர்துசிருட்டிகடங்களைச்செனிப்பிக்கும்பிணியாகுந்
தாவாதிகண்சித்திடிலொருவற்குஞ்சகநஞ்சணசியாவாங்
கோபயாதிகண்சித்திடிற்பந்தமாங்கொடும்பிறவிகள்போமே.

(இ-ள்) மூவாராம் பான்சிருட்டிகள் - மும்மூர்த்திகளான விஸ்வாசிருட்டிகளானவை- உயிர்க்கெல்லாம்- சீவர்களனைவர்க்கும் முத்தி வீடடைதற்குச் சாதனமாகும்- சாதனமாம் - சிவனாதுசிருட்டிகள் சீவசிருட்டிகளானவை தங்களைச்செனிப்பிக்கும் பிணியாகும்- சீவர்களைப்பிறப்பிக்கின்ற சஞ்சிதரோகமாம்-தாவாரதிகணசித்திடில்- ஈஸ்வாசிருட்டியாகிய தருமுதலிய பஞ்சபூதபௌதிகவடிவங்கணசிக்கின் ஒருவர்க்குமொருவர்க்காவது சநநங்கணசியாவாம் - பவங்கணிங்காவாம்-கோபமாதிகணசித்திடில்- சீவசிருட்டியானது வேஷமுதலியவிகற்பமிறக்கின்-பந்தமாம்-பந்தாமன- கொடும்பிறவிகள்- கொடியசநநங்கள் - போம்நசிக்குமென்றவாறு.

(இ-ம்.)ஈஸ்வாசிருட்டியான பஞ்சபூதபௌதிகமுதலியதத்துவங்கண்முத்திக்குச்சாதனமுஞ் சிவசிருட்டியான காமக்குரோதாதிகள்பெத்திற்கேதுவுமாமென்பதற் குத்திகூறினதாம். (௫௬)

(அ-கை.) (இ-து.)

ஈசர்காரியம்பிரளயத்தொழியவுமெவர்பலமொழிந்தார்கள்
தேசகாலதேகாதிகளிருக்கவுஞ்சிவகாரியமோகம்
நாசமாகியவ்விவேகத்தினுயிரொடுஞானமுத்தர்களானூர்
பாசமோகங்கள்பசுக்களின்செயலன்றிப்பசுபதிசெயலன்றே.

(இ-ள்.) ஈசர்காரியம்- ஈஸ்வாசிருட்டியான பஞ்சபூத பௌதிகங்கள்பிரளயத்தொழியவும்- கற்பத்திற்கெடவும்-எவர்பல மொழிந்தார்கள்-யாவர்பிறவியையொழிந்தவர்கள்- தேசகாலதேவாதிகள்- தேயமுங்காலமுந் தேகமுமுதலிய வீஸ்வா சிருட்டிகள்- இருக்கவும்-இருக்கும்போதே சிவகாரியமோகம்- சிவ சிருட்டியான காமமுதலியவைகள்-நாசமாகி- நசித்து- அவ்விவேகத்தின்- அவ்விவேகத்தினுல் உயிரொடுஞான முத்தர்களானூர்- சிவன்முத்தர்களானூர்களாதலால் பாசமோகங்கள்-காமம்-வெகுளிமயக்கங்கள்- பசுக்களின்செயலன்றிசிவச்செயலேயன்றி-பசுபதிசெயலன்று- ஈஸ்வான்செயலல்ல-எ-று.

(இ-ம்.) ஈஸ்வாசிருட்டி யிருக்கச் சிவசிருட்டி நசிக்கி னப்போதே வீடடைதலாற் காமமாதிகள் சிவச்செயலேயன்றிச் சிவச்செயலன்றென்பதாம். (௫௭)

(அ-கை.) (இ-து.)

அச்சுவத்தமென்றொருமாமதிலிரண்டரும்பறவைகள்வாழும்
நச்சுமங்கொருபறவையம்மாக்கனிநன்றுநன்றெனத்தின்னு
மெச்சுமங்கொருபறவைதின்னுதெனவியங்கிப்பொருளாக
வைச்சுமாமறைசிவனையீசனைவகுத்தவாறறியாயே.



(இ-ள்.) அச்சுவத்தமென்றொருமாம்-அரசென்றுபேருள்ளவொருவிருட்சம்- அதில்- அத்தருவில்- இரண்டரும்பறவைகள் - இரண்டழியபட்சிகள் வாழும்- வாழ்ந்துகொண்டிருக்கும்- அங்கு- அவ்விடத்து-நச்சும்- விரும்புகின்ற- ஒருபறவை- ஒருபட்சியானது- அம்மாக்கனி-அத்தருவின்பலத்தை- நன்றுநன்றெனத்தின்னும்- நல்லது- நல்லதென்று புசிக்கும்- அங்கு- அதன்கண்- மெச்சும்- மெசசப்பட்ட ஒருபறவை-ஒருபட்சியானது- தின்னுதென - புசியாதென்று-வியங்கியப்பொருளாகவைச்சு- குறிப்புப்பொருளாகவைத்து- சிவனை- சிவனையும்- ஈசனை-ஈசனையும்- வகுத்தவாறு- பகுத்தவண்ணம்- அறிவாய்-தெரிவாய்-எ-று.

அச்சுவத்தமென்பது தலைகீழான மாயாவிருட்சமெனக்கொள்க.

(இ-ம்.) மாயையில்வாழ்கின்ற சிவேஸ்வரர்களின் தாரதம்மிய மீஃதெனப் பகுத்துக்கூறினதாம். (௫௮)

(அ-கை.) (இ-து.)

இந்தச்சிவனல்வருமறுபகையெலாமிவன்செயலில்லாமல்
லந்தத்தேவனல்வருமென்றமூடர்களதோகதியடைவார்கள்
ளிந்தச்சிவனல்வருமறுபகையெலாமிவன்செயலல்லாம
லந்தத்தேவனலன்றெனும்விவேகியேயமலவீடடைவாரே.

(இ-ள்.) இந்தச்சிவனல் இச்சிவனல்வரும்உண்டான- அறுபகையெலாம்- காமமுதலியபகைகளாறும்- இவன்செயலல்லாமல் இவன்சிருட்டியேயன்றி- அந்தத்தேவனல்- அவ்வீசனல்- வருமென்ற- உண்டாமென்ற மூடர்கள்- அறிவிலர்கள்- அதோகெதி யடைவார்கள் - நரகத்தையடைவார்கள்- இந்தச்சிவனல்-, இச்சிவனல்-வரும்-உண்டாகும்-அறுபகையெலாம்- சட்பகைகண்முதலியவைனத்தும்- இவன்செயலல்லாமல் இச்சிவசிருட்டியேயன்றி- அந்தத்தேவனல்- அன்றேனும - வந்ததென்றென்னும்- விவேகியே- விவேகிகளே- அமலவீடடைவார் நின்மலமான மோட்சத்தையடைவார்கள்-எ-று.

(இ-ம்.) காமமாதிகளை யீஸ்வாசிருட்டியெனக் கருதாமற்சிவசிருட்டியெனக் கொண்டவற்றை விசாரத்தாற்கெடுக்கின் முத்தியுண்டாமென்பதாம். (௫௯)

(அ-கை.) முன்பீஸ்வாசிருட்டி பொதுவென்றமையால்வரும் பொதுவாகவேண்டுமே யங்ஙனமாயிற்சிவர்களிடத்திற் பட்சபாதம்வருவானேனென்ற வினுவிற்குத்தாம்.

நலமெய்யையனே யெல்லவர்க்குந் தெய்வநாயகன் பொதுவானற்
சிலவைவாழ்வித்துஞ் சிலரொடுகோபித்துஞ் செய்வதேனென்றுமேற்-

குலவுமைந்தனைத்தந்தைபோற்சிட்டனைக்குளிர்ந்து துட்டனைக்காய்வன் கலைகணல்வழிவரச்செயுந்தண்டமுங் கருணையென்றறிவாயே.

(இ-ள். நலமெய்யையனே- உண்மையான நல்லவாசிரியனே- எல்லவர்க்கும்- அனைவர்க்கும்- தெய்வநாயகன்- ஈஸ்வரன்பொதுவானல்-பொதுமையானல்- சிலனைவாழ்வித்தும்-சிலனைவாழ்வுறவு- சிலரொடுகோபித்தும் சிலனைத்துன்புறவும்- செய்வதேனென்றுயேல்- செய்வதென்னவென்றுகேட்பாயாகின் - குலவுமைந்தனை- குலவாகின்றபுத்திரர்களை- தந்தைபோல்- பிதாவைப்போல- சிட்டனைக்குளிர்ந்து- சற்சனருக்கின்பஞ்செய்து- துட்டனைக்காய்வன்- துற்சனருக்குத் துன்பஞ்செய்வன்-கலைகள்-சாஸ்திரங்கள்சொல்லும்- நல்வழிவர- சன்மார்க்கத்தையடைய-செய்யுந்தண்டமும்- சிவர்களைச்செய்யுஞ்சிட்சையும் கருணையென்றறிவாய் கிருபையென்றுணர்வாய்-எ-று.

(இ-ம்) சிவர்கள்சுகப்படும்பொருட்டு வருத்தினலும் கருணையேயன்றிப்பட்சபாதமன்றென்பதாம். (௯௰)

(அ-சை.) அங்ஙனமாயினீசன்யாவரையுமே விரட்சிக்கவில்லையெனவருஞ்சங்கைக்குத்தரம்.

மனைவிலங்கருமைந்தனேகற்பகமாங்கனல்புனன்மூன்றுந்
தனையடைந்தவர்வறுமையுஞ்சிதமுந்தவிர்த்தாலு
மனையவீசனுமடைந்தவர்க்கருள்செய்வா ரகன்றவர்க்கருள்செய்யா
ரினையகுற்றங்களெவர்குற்றமாகுமென்றெண்ணிநீயறிவாயே.

(இள்.) மனைவிலங்கறும்- சம்சாரிகளாகிய- மைந்தனே-புத்திரா- கற்பகமாம்- கற்பகவிருட்சமும்- கனல்- அக்கினியும்- புனல்-சலமும்-மூன்று இவைமூன்றும்- தனையடைந்தவர்- தம்மைச்சேர்ந்தளது- வறுமையும்-தரித்திரத்தையும்- சிதமும்- குளிரையும்- தாகமும்- தாகத்தையும் தவிர்த்தாலு- நீக்கியிரட்சிக்கும்- அனைய-அத்தன்மையனவாகிய-ஈசனும்- ஈஸ்வரனும்- அடைந்தவர்க்கு - தம்மையடைந்தவர்களுக்கு - அருள்செய்வார்- கிருபைசெய்வார்- அகன்றவர்க்கு- அடையாதவர்களுக்கு- அருள்செய்யார்- கிருபைசெய்யார்- இனையகுற்றங்கள் - இத்தன்மையான குற்றங்கள்- எவர்குற்றமாகுமென்று யாவர்குற்றமாமென்று- எண்ணி ஆலோசித்து- நீயறிவாய்- நீதெரிந்துகொள்வாய்-எ-று.

(இ-ம்.) கற்பகவிருட்சமுதலியவற்றைச் சார்ந்தவர்க்குத் துன்பநீங்கி யின்பமுண்டாவதுபோல வீசனைச்சார்ந்தவர்களுக்குப் பவத்துன்பநீங்கி இவீட்டின்பமுண்டாவ துண்மையெனவறிந்தவனைச் சாரமுயற்சி செய்யாதவர் குற்றமேயென தீ வென்பதாம்.



(அ-சை.) ஞானமுண்டாகச்சிவன்முயற்சிக்குமறபுகூறல்.

ஒன்றுகேண்மகனேபுமான்முயற்சி யாலுணைத்துமானிடர்க்கீச
னன்றுசெய்யவேகாட்டியநூல்வழி நடந்துநல்லவர்பின்னே
சென்றுதுட்டவாதனை விட்டுவிவேகியாச்செனித்தமாயையைத்தள்ளி
நின்றுஞானத்தையடைந்தவர் பவங்கள்போநிச்சமிதுதானே.

(இ-ள்.) மகனே புத்திரா- ஒன்றுகேள்- ஒருவசனங்கேட்பாய்-புமான்முயற்சியால்- புருஷப்பிரயத்தினத்தினுல்- ஈசன்-ஈஸ்வரன்- மானிடர்க்கு- மனிதர்க்கு-நன்றுசெய்ய நன்மையைச்செய்ய, உரைத்து சொல்லி காட்டிய காண்பித்த நூல்வழிகடந்து சுருதி மார்க்கத்திற்போய் நல்லவர்பின்சென்று சத்துக்கள் வாக்கியப்படி யவர்பின்சென்று துட்டவாதனைவிட்டு அசுத்தவாசனையை நீக்கி விவேகியாய் சிற்சடங்களைப் பகுத்தறியும் விவேகத்தை யுடையவனுய் செனித்த மாயையைத் தள்ளி கற்பனையாகவுதித்த சடமான மாயையைநீக்கி, நின்று- விலட்சணமானகூடஸ்தனுயிருந்து - ஞானத்தை-பிரமசைதன்னியத்தை-அடைந்தவர்-பெற்றவர்களுடைய- பவங்கள்போம்- பிறவிகணீங்கும்-இதுதான்-இதுவே நிச்சயம்-சத்தியமாம்-எ-று.

(இ-ம்.) சிவன்றனது முயற்சியினுலீஸ்வரனுக்கிரகப்பெற்றுஅவர்வாக்கியமானவே தாந்தமுடிவைக் குருமுகமாக விசாரித்ததனுல்விவேகமுண்டாயஞ்ஞானநீங்கி ஞானமுதயமாகிற் பவநீங்குமென்பதாம்.

(அ-சை) எதினலிந்த ஞானமுதிக்குமென்ற வினவிற்குத்தரம்:

இந்தஞானந்தான்வருவதெப்படியெனிலிடைவிடாவிசாரத்தால்
வந்தடைந்திடும்விசாரந்தானேதெனின்மனுதியாஞ்சரீரத்தி
லிந்தநானெனவென்சித்தெதுசடமெது விரண்டுமொன்றுக்கூடும்
பந்தமேதுவீடேதெனவுசாவுதல்விசாரமென்றுணரையே.

(இ-ள்.) இந்தஞானந்தான்- இப்பிரமஞானமானது - வருவதெப்படியெனில்- உதிப்பதெவ்வண்ணமென்று கேட்பாயாகில்- இடைவிடா விசாரத்தால்- இடையறுதவாத்ம விசாரணையால்- வந்தடைந்திடும்- வரும் விசாரந்தான்- விசாரணையாவது- ஏதெனில்- யாதெனில்- மனுதியாஞ்சரீரத்தில்- மனமுதலியதேகத்தி லிருக்கின்ற- இந்தநானெனவென்-இந்தநானென்பதியாதுன்யாவன்- சித்தெது- சித்தென்பதியாது- சடமெது-சடமென்பதியாது இரண்டுமொன்றுக்கூடும்- சித்துசடமாகிய விரண்டுமொன்றாகக் கூடப்பெற்ற- பந்தமேது- பந்தமியாது- வீடேது அதனைவிடப்பெற்றமுத்தி யாதென- உசாவுதல்- விசாரித்தல்- விசாரமென்றறிவாய் - விசாரணையென்றறிந்துகொள்வாய்-எ-று.

(இ-ம்.) சிற்சட விலக்கணங்களைப் பகுத்தறியும் விசாரமேஞானமுதிப்பதற்கு மூலமென்பதாம். (௯௧)

(அ-கை.) கன்மமுக்கியமென்னுங் கொள்கை நீங்கும்பொருட்டு ஞானமுதிப்பதற்குச் சற்கருமமிருக்க விசாரமியாதுக்கென்ற வினாவிற்குத்தரம்.

போனசன்மங்கடமிலனுட்டித்தநற்புண்ணியபரிபாக
ஞானமாகுமேவிசாரமேனென்றிடினாமுரைத்திடக்கேளா
யானபுண்ணியமீசுரார்ப்பணஞ்செயினசுசிபோஞ்சுசியாகு
மானதப்பினைவிசாரித்துஞானத்தைமருவுமென்றறிவாயே.

(இ-ள்) போனசன்மங்கடமில்- முனசநநங்களில் - அனுட்டித்த-அப்பியாசஞ்செய்த- நற்புண்ணியபரிபாகம் - சற்கருமபாகத்தால்ஞானமாகுமே- ஞானமுதிக்குமே- விசாரமேனென்றிடில்-விசாரணையாதுக்கென்றாயில்- நாமுரைத்திடக்கேளாய- யாஞ்சொல்லுதுங்கேட்பாய்-ஆன புண்ணியம்- அத்தன்மையான சற்கருமத்தை- ஈசுரார்ப்பணஞ்செயின் ஈஸ்வரப்பிரீதிசெய்யில்- அசுசிபோம்- அசுத்தநீங்கும்- சுசியாகும்-சித்தசுத்திவரும்- மானதம் - மனது- பினை-பின்பு விசாரித்து-விற்சடவிசாரஞ்செய்து- ஞானத்தைமருவுமென்று- சைதன்னியத்தை - யடையுமென்று-அறிவாய்- தெரிவாய்-எ-று.

(இ-ம்.) நிஷ்காமமாகச்செய்யுஞ் சற்கருமஞ் சித்தசுத்தியையும் விசாரம் ஞானத்தையுங் கொடுக்குமாதலால்-விசாரமேவேண்டு மென்பதாம்.

(அ-கை.) பலபேற்றையுந் தாத்தக்க வலியுள்ளகன்மம் ஞானத்தைத் தாராதோ விசாரம்யாதுக்கெனவினுதல்.

பத்தியும்வயிராக்கியமும்பரலோகமுமணிமாதி
சித்தியுந்தவநிட்டையும்யோகமுந்தியானமுஞ்சாருப
முத்தியுந்தரும்விசித்திரகருமங்கண்மோகமாத்திரந்தள்ளும்
புத்தியுந்தாலருமையோவிசாரமேன்புண்ணியகுருமூர்த்தி.

(இ-ள்.) பத்தியும்- ஈஸ்வரபத்தியையும்-வயிராக்கியமும்- நிராசையையும்-பரலோகமும்- சுவர்க்காதி- லோகங்களையும்-அணிமாதி சித்தியும் அணிமாமுதலியவஷ்டசித்திகளையும் தவநிட்டையும் தவமுள்ள சமாதியையும்- யோகமும்- இயமாதியஷ்டாங்க யோகங்களையும் தியானமும் மூர்த்தியாகிய தியானங்களையும் - சாருபமுத்தியையுந்தரும்-கொடுக்கின்ற- விசித்திரகருமங்கள்பலசத்தியுள்ள கன்மங்களானவைமோகமாத்திரந்தள்ளும்-அஞ்ஞானத்தைக்கொடுக்கின்ற புத்தியுந்தால் - அறிவையுங்கொடுப்பது அருமையோ- அரியதோ - விசாரமேன் - விசாரணையாதுக்கு-புண்ணியகுருமூர்த்திதருமஸ்வரூபமானவாசிரியரோ என்றவாறு.

(இ-ம்.) வெளிப்படை.



(அ-கை.) அவ்வினாவிற் குத்தரங் கூறுவான் றொடங்கித் திட்டாந்தங்கூறல்.

வேடமாறியபேர்களையறியவேவேண்டினுன்மகனேகேள்
கூடமாமவர்சுபாவங்கள்சிலங்கள்குறிகளாய்ந்தறியாம
லோடியுங்குதித்துந்தலைகீழ்நின்றுமுயர்ந்தகம்பத்தேறி
யாடியும்பலசன்மங்கள்செய்யினுமவருண்மைதெரியாதே.

(இ-ள்.) வேடமாறியபேர்களை - மாறுவேடங்கொண்டவர்களை, அறியவேண்டினால்-அவர்யதார்த்தவடிவத்தை யறியவிரும்பினால், மகனே கேள்-மாணாக்கனே கேட்பாய், கூடமாம்-இரகசியமான, அவர்சுபாவங்கள்-அவர்களுடையகுணங்களையும், சிலங்கள்-நடைகளையும், குறிகள்-அடையாளங்களையும்; ஆய்ந்தறியாமல்-ஆராய்ந்தறியாமல், ஓடியும் -ஓடியும், குதித்தும்-குதித்தும், தலைகீழ்நின்றும்-தலைகீழாகநின்றும், உயர்ந்த கம்பத்தேறி-உன்னதமான ஸ்தம்பத்திலேறி, ஆடியும் - ஆடியும், பலசன்மங்கள் செய்யினும் - இவ்வாறானபலகன்மங்கள்செய்தாலும், அவருண்மை தெரியாது - அவர்களது யதார்த்தவடிவந்தெரியமாட்டாது-என்றவாறு. (௬௬)

(அ-கை.) தாஷ்டாந்தங் கூறல்.

இன்னவாறந்தப்பிரமத்தையறிவிக்குமிலக்கணத்தால்வே தஞ்
சொன்னஞானமும் விசாரத்தால்வருமின்றிச்சுருதிநூல்படித்தாலு
மன்னதானங்கடவங்கண்மந்திரங்களாசாரங்கள்யாகங்க
ளென்னசெய்யினுந்தன்னைத்தானறிகின்றறிவைகளால்வாராதே.

(இ-ள்.) இன்னவாறு-இத்தன்மையைப்போல, பிரமத்தையறிவிக்கும்-பிரமஸ்வரூபத்தைத்தெரிவிக்கும், இலக்கணத்தால்- லட்சணத்தால்,வேதஞ்சொன்ன-சுருதிசொல்லிய, ஞானமும்-பிரமஞானமும், விசாரத்தால்-விசாரணையினால்,வருமன்றி-வருமேயல்லாமல், சுருதிநூல்-வேதசாஸ்திரங்களை, படித்தாலும்-வாசித்தாலும், அன்னதானங்கள்-அன்னதானங்களும்-தவங்கள்-தவங்களும்-மந்திரங்கள்-மந்திரங்களும்-ஆசாரங்கள்-ஆசாரங்களும்-யாகங்கள்-வேள்விகளுமாகியவிவைகளில்- என்னசெய்யினும்-எக்கருமங்களைச் செய்தாலும்-தன்னைத்தானறிகின்றது- ஆத்மாவாகியதன்னைத்தெரிந்துகொள்வது-இவைகளால்- இக்கன்மங்களால்-வாராது-வரமாட்டாது.

(இ-உ-க-ம்) ஒருவனுண்மையைத் தெரிவிக்குஞ்சத்தி புணர்வுக்கேயன்றித் தொழிற்கின்மைபோல ஞானத்தை யறிவிக்குஞ் சத்திவிசாரத்திற்கேயன்றிக் கன்மத்துக்கின்றென்பதாம். (௬௭)

(அ-கை) ஞானமுதிப்பதற்கு நீங்கவேண்டிய வஞ்ஞானங்கருமத்தாலன்றி விசாரத்தாலெங்ஙன நீங்குமெனல்.

துளங்குதர்ப்பணமழுக்கறக்கைக்கொண்டுதுலக்கினாற்போமன்றி
விளங்குபுத்தியாலுலகிலார்துலக்கினார்விமலதேசிகமூர்த்தி
களங்கமாகுமஞ்ஞானமுமப்படிகருமத்தாற்கழுவாமல
உளங்குறித்தஞானத்தினாலெப்படியொழியுமீதருள்வீரே.

(இ-ள்.) துளங்குதர்ப்பணம்-விளங்காநின்ற செம்புக்கண்ணாடியினுள்ள-அழுக்கற-களங்கமற-கைக்கொண்டு-கரங்கொண்டு-துலக்கினாற்போமன்றி-விளக்கினாற்போமேயல்லாமல்-விளங்கும்புத்தியால்- விளங்காநின்றவறிவினால்-உலகில்-சகத்தின்கண்-ஆர்துலக்கினார்- எவர்விளக்கினார்கள்-விமலதேசிகமூர்த்தி-நின்மலமானகுருமூர்த்தியே-களங்கமாகும்-களங்கமாகிய அஞ்ஞானமும்-அஞ்ஞானத்தையும்-அப்படி- அவ்வண்ணம்-கருமத்தால்-கன்மத்தினால் - கழுவாமல்-சுத்திபண்ணாமல்- உளங்குறித்த-மனதிற்குறிக்கப்பட்ட - ஞானத்தினால்-அறிவினால் - எப்படியொழியும்-எங்ஙனநீங்கும்-ஈதருள்வீர்-இதைச்சொல்வீர்-எ-று. (௬௮)

(அ-கை.) ஞானமுதிப்பதற் கஞ்ஞானத்தைநீக்குதல் விசாரத்தாலன்றிக் கன்மத்தாற் கூடாவெனல்.

தர்ப்பணத்தினிற்களிம்புவாஸ்தவமலஞ்சகசமாதலின்மைந்தா
கற்பளிங்கினிற்கருநிறஞ்சகசமாக்கறுத்ததன்றாரோபங்
தற்பணத்தினிலழுக்கறவேண்டினாற்சாதனத்தொழில்வேண்டுங்
கற்பளிங்கிலாரோபமேகறுப்பெனக்கண்டிடமனமபோதும்.

(இ-ள்) தர்ப்பணத்தினில்-செம்புக்கண்ணாடியில்-களிம்பு- களிம்பாகிய-வாஸ்தவமலம்-உள்ளவழுக்கானது-சகசமாதலின் - சுபாவமாதலால்-மைந்தர்-மகனே-கற்பளிங்கினில-படிககல்லிற்றோற்றிய-கருநிறம்- கருமைநிறமானது சகசமாக்கறுத்ததன்று-சுபாவமாகக்கறுத்ததன்று - ஆரோபம்-கற்பிதமாம் - தர்ப்பணத்தினில் - செம்புக்கண்ணாடியில்-அழுக்கறவேண்டினால்-களங்கமறும்படி விரும்பினால் -சாதனத்தொழில்வேண்டும் - கருவிகளாற்செய்யுஞ் செயல்வேண்டும் - கற்பளிங்கினில்-படிககல்லிற்றோன்றிய - கறுப்பு-கருநிறம் - ஆரோபமேயென-கற்பிதமேயென்று - கண்டிட-பார்த்திட - மனம்போதும்-மனமேபோதும். ( )

(அ-கை.) அதற்குபாயங்கூறல்.

இங்குமப்படிசச்சிதானந்தத்திலிடர்சடம்பொய்மூன்றுந்
தங்குமாயையின்கற்பிதமன்றியேசகசவாஸ்தவமன்றே
பங்கமாகுமஞ்ஞானத்தைக்கருமங்கள்பகைசெயாதுறவாக்குந்
துங்கஞானமேகருமவஞ்ஞானத்தைச்சுடுகின்றநெருப்பாமே.



(இ-ள்.) இங்கும்-இத்தாஷ்டாந்தத்திலும்-அப்படி -அத்திஷ்டாந்தத்தைப்போல-சச்சிதானந்தத்தில்-அஸ்திபாதிப் பிரியத்தில்-இடர்சடம்போய்-அனுர்தசட துக்கமாகிய-மூன்றும் -மூன்றும் - தங்கும்-தங்காநின்ற - மாயையின்கற்பிதமன்றியே-மாயாகற்பிதமேயல்லாமல் - சகசவாஸ்தமன்று - சுபாவமாயுள்ளதன்று-பங்கமாகுமஞ்ஞானத்தை -பழுதான வஞ்ஞானத்தை-கருமங்கள்- கன்மங்களானவை-பகைசெய்து-பகைபண்ணாமல் - உறவாக்கும் - நட்பாகும் - துங்கஞானமே - மேலானஞானமே - கருமவஞ்ஞானத்தை -கன்மரூபமாகியவஞ்ஞானத்தை - சுடுகின்றநெருப்பாம் - எரிகின்றவக்கினியாம்-எ-று.

(இ-ங-க-ம்.) செம்பிற்களிம்புபோல வாத்மாவுக்கஞ்ஞானஞ் சகசமாகாமற் பளிங்கிற்பஞ்ச வன்னம்போலப் பிராந்தியாதலா லங்கனந்தோற்றுங் சன்மசம்பந்தமான வஞ்ஞானத்தைக்கெடுப்பது விசாரரூபமான ஞானமேயா மென்பதாம்.

(அ-கை.) முற்கூறியதைவற்புறுத்தல்.

மனைக்குள்வைத்தபண்டங்களைமறந்தவன்வருடநூறழுதாலு
நினைத்துணர்ந்தபின்கிட்டுமப்படியிந்நிருமலவான்மாவு
மனர்த்தமானதன்மறதியைக்கெடுக்குந்தன்னறிவினாற்காணாமற்
கனத்தகன்மக்கணூறுகஞ்செய்யினுங்காணுமோகாணாதே.

(இ-ள்.) மனைக்குள்-வீட்டிற்குள்-வைத்தபண்டங்களை- வைத்தவஸ்துக்களை மறந்தவன்-மறந்துவிட்டவன் - வருடநூறழுதாலும்- நூறாண்டாற்றினும் நினைத்து-முன்வைத்த விடத்தைஞாபகஞ்செய்து -உணர்ந்தபின்கிட்டும்-அறிந்தபின் கிடைக்கும் - அப்படி - அதைப்போல- இந்நிருமலவான்மாவும் - இந்தநிருமலமானவாத்மஞானமும் - அனர்த்தமான -பிரயோசனமில்லாத - தன்மறதியைக்கெடுக்கும் - தனதறியாமையைப்போக்கும் - தன்னறிவினாற்காணாமல்- தனதறிவினாற்றரிசிக்கப்படாமல்-கனத்தகன்மங்கள் - கனமானகன்மங்களை - நூறுகஞ்செய்யினும் அநேகயுகஞ்செய்தாலும் - காணுமோ- காணப்படுமோ காணாது- காணப்படாது-எ-று. (௭௧)

(இ-ம்.) ஞாபகத்தால் மறதிநீங்கின முன்வைத்தபொருள் வெளிப்படுமல்லது தொழிலால் வெளிப்படாததுபோல விசாரஞானத்தா லஞ்ஞானநீங்கின முன்னுள்ளபிரமப்பொருள் வெளிப்படுமல்லது கன்மத்தால் வெளிப்படாதென்பதாம்.

(அ-கை.) பிரமசுகத்தைவிசாரஞானங்கொடுக்குமென்ற வேதமச்சுகத்தைக் கன்மமுங்கொடுக்குமென்பதியாதெனவினாதல்.

நன்மையாங்குருவேசுகந்தருவதுஞானமேயெனும்வேத
தன்மபாவமிச்சிரங்களாற்றேவர்கட்குருவிலங்குகண்மாந்தர்

சென்மமாகுவசாதியாசாரமேசெய்தவஞ்சுகமென்று
கன்மகாண்டத்தில்விதிப்பதேன்விதித்துளகாரணமுரையீரோ

(இ-ள்.) நன்மையாங்குருவே-நன்மையாகியவாசிரியரே - சுகந்தருவது-பிரமானந்தத்தைக்கொடுப்பது - ஞானமேயெனும்-அறிவேயென்கின்ற-வேதம்-சுருதியானது-தன்மம்-புண்ணியகன்மங்களால் தேவர்கள்-தேவர்களும்-பாவம் - பாவகன்மங்களால்-தருவிலங்குகள் - விருட்சமுதன் மிருகமீறுகிய வைவகைத் தோற்றமும் - மிச்சிரங்களால் - மிஸ்ரகன்மங்களால் - மாந்தர்-மனிதர்-மனிதர்களுமாகிய - சென்மமாகுவசெனனமாவனவென்றும் - சாதியாசாரமே - வன்ஞச்சிரமதருமப்படி - செய்தவஞ்சுகமென்றும் - செய்கிறதவமேசுகமெனவும் -கன்மகாண்டத்தில்-கிரியாகாண்டத்தில் - விதிப்பதேன்-விதித்ததென்ன - விதித்துள அங்ஙனம் விதியாநின்ற - காரணமுறையீர்- காரணத்தைச்சொல்வீர்-எ-று.

(இ-ம்.) வெளிப்படை. (எ௨)

(அ-கை.) அங்ஙனம்விதித்த வேதத்தி னபிப்பிராயம் வேறெனக்கூறல்.

தினமுமண்ணுகர்பிள்ளை நோய்க்கிரங்கியே தீம்பண்டமெதிர்காட்டிக்
கனமருந்துக ளொளித்துவைத் தழைக்கின்ற கருணையாந்தாய்போல
மனையறங்கள்செய்மகங்கள்செய்நன்றென் றுமலர்ந்தவாசகஞ்சொல்லு
நினைவுவேறுகாண் சுவர்க்ககாமிகளந்நிர்ணயந்தெரியாரே.

(இ-ள்) தினமுமண்ணுகர்-நாடோறுமண்ணைப்புசிக்கின்ற-பிள்ளைநோய்க்கு-குழந்தையின்வியாதிக்கு-இரங்கி - இரக்கமுற்று-கனமருந்துகளொளித்துவைத்து-கனமான வௌஷதங்களை மறைத்துவைத்து-தீம்பண்டமெதிகாட்டி - தித்திப்புள்ள வஸ்துக்களையெதிரேகாண்பித்து-அழைக்கின்ற-அக்குழந்தையைக்கூப்பிடுகின்ற-கருணையாய்த்தாய்போல -இருபையுள்ள மாதரைப்போல - மனையறங்கள்செய் - இல்லறதருமங்களைச்செய் - மகங்கள்செய்-யாகங்களைச்செய் - நன்றென்று - அஃதுன்மையென்று - மலர்ந்தவாசகம் - விகசிதமானவேதவாக்கியம்- சொல்லுநினைவுவேறுகாண் -சொல்லுகின்ற கருத்துவேறாகும். சுவர்க்ககாமிகள்-சுவர்க்கவிருப்பமுள்ளவர்கள் -அந்நிர்ணயந்தெரியார் - அக்கருத்தின்னிண்ணயத்தை யறியார்கள்-எ-று.

(ப-ம்.) மண்ணுகர்பிள்ளையென்பதனுல். விடயத்தை நுகருமறிவிலியென்பதும் - நோயென்பதனுற் பிறவித்துன்ப மென்பதும் இறங்கியென்பதனு லருளுற்றென்பதும் தீம்பண்டங்காட்டியென்பதனுல் சு



வர்க்காதி பதங்களைக் காட்டுமென்பதும்மருந்துகளொளித்து வைத்தென்றதனுல் - ஞானமுகத்தை யொளித்துவைத்தெனவும் - அழைக்கின்றதாயென்றதனுல் - அவ்வமுதத்தைக் கொடுக்கவேதன் விளக்குமென்பதுங் கொக்கிடந்தன.

(இ-ம்.) வேதம் இகவின்பத்தைநீக்குவான் பாவின்பத்தைக்கூறியஃதுநீக்கினபின் னிஃதையுநீக்கிப் பாமசுகமாகும் பொருட்டங்ஙங்கூறினதென்பதாம். (எ௩)

(அ-கை) வேதம்போக போக்கியங்களை யனுபவிக்கவிதியாதென்பதற் குவமைகூறல்.

போகமாருயிர்கண்டதையுண்பதும்புணர்வதுமியல்போகா
தோ
ஞாகமங்களுஞ்சுபாவத்தைவிதிக்குமோவத்தனைதெரியா
காகமேகருத்திடுநெருப்பேசுடுகசந்திடுவேம்பேநீ
வேகவாயுவேயசையெனவொருவரும் விதித்திடல்வேண்டாவே.

(இ-ள் ) போகமாருயிர்-போகத்தைப் புசிக்கின்ற சீவர்களுக்கு கண்டதை-பார்த்ததை-உண்பதும்-அருந்தலும்- புணர்வதும்பொருந்தலும்-இயல்பேகாண்-சுபாவமேயாம்-ஆகமங்களும்-வேதங்களும் - சுபாவத்தைவிதிக்குமோ - சுபாவத்தைநியக்குமோ - அத்தனைதெரியுதோ-அவ்வளவுதெரியாதா - காகமேகறுத்தடு - காக்கையேநீகருத்திடுவாய்-நெருப்பேசுடு-அக்கினியேநீசுடுவாய்-வேம்பேநிம்பமே நீகசந்திடு நீகைப்பாய் - வேகவாயுவே-அதிகவேகமுள்ளகாற்றே அசையென- நீசலிப்பாயென்று ஒருவரும்-ஒருவரும் விதித்திடல்வேண்டாவே - நியமிக்கவேண்டுவதில்லையே-எ-று.

விலக்குமெனப்பாடமன்று விதிக்குமென்பதே பாடமெனக் கொள்க.

(ப-ம்) அறிவின்மை யானுயிர்கட் கியல்பான அருந்தல் பொருந்தலென்னும் வாசனையை வேதம்விலக்குமேயன்றி விதிக்குமோ வென்பார் போகமாருயிர்கண்டதை யுண்பதும்புணர்வது மியல்பே காணுகமங்களுஞ் சுபாவத்தை விதிக்குமோ வெனக்கூறினர்.

(இ-ம்) வேதம் போகபோக்கியமே பயனுனகன்மத்தை விலக்கினதேயன்றிவிதித்தென்றென்பதாம்: (எச)

(அ-கை) கன்மகாண்டவாக்கியம் பூருவபட்சமென்பதற்குத்திகூறல்:

கள்ளுமூனுநீவிரும்பினுன் மகங்கள்செய்காமத்தின் மனதானுற்
கொள்ளும்பெண்டொடு கலவிசெய்யெனி லிவன்குறையெலாந்தொடாருனென்றே தள்ளும்வேதத்தின் சம்மதஞ்சகலமுந் தவிர்வதேகருத்தாகும், விள்ளுமிவ்விதியென்னெனிற்பூருவபட்சமாம்விதியன்றே.

(இ-ள்.) கள்ளுமூனும்-மதுவையுமாமிசத்தையும் - நீவிரும்பினல் - நீயுண்ணவிச்சித்தால்-மகங்கள்செய்-யாகங்களைச்செய்துபுசிப்பாய்-காமத்தின்மனதானல்- காமவேட்கையுண்டானல் - கொள்ளும்பெண்டோடு-விவாகஞ்செய்யுமனைவியோடும் - கல்விசெய்யெனில் - புணர்ச்சிசெய்வாயென்றால்-இவன்-இக்காமி - குறையெலாந்தொடானென்று - மற்றவைகளனைத்துந் தீண்டானென்றுதள்ளும் - நீக்கும்வேதத்தின்சம்மதம் - வேதத்தினுடைய சம்மதமானது - சகலமுந்தவிர்வதே -அனைத்துநீங்குவதே-கருத்தாகும்-அபிப்பிராயமாகும் விள்ளுமிவ்விதி - சொல்லாநின்ற விக்கன்மகாண்டவிதி-பூருவபட்சமாக நியமித்தவிதியாம்.

(அ-கை) இவ்விதிபூர்வபட்சமென்பதைவற்புறுத்தல்.

மதுவிரைச்சிகளுண்ணென்றசுருதிபின்மணந்துபாரொனல்பாராய்
மிதுனவிச்சையும்புத்திரோற்பத்தியால்விரும்பென்றவிதிபாரா
யிதையும்விட்டொழியதியிட்டிகவன்னிக்கிகழ்ச்சியற்றதும்பாரா
யதையறிந்துகன்மங்களாசைகளொழிந்தானந்தமடைவாயே.

(இ-ள்.) மதுவிரைச்சிகள்-மதுமாமிசங்களை, உண்ணென்றசுருதி-சுற்புசியென்றவேதமானது - பின்-பின்பு - மணந்துபாரொனில்பாராய்-ஆக்கிராணஞ்செய்தாற்போதுமென்பதைப்பார் - மிதுனவிச்சையும் - மனைவியோடுபுணர்ச்சியின்பமும் - புத்திரோற்பத்தியால்-மகப்பேறுண்டாம்பொருட்டு-விரும்பென்றவிதிபாராய் - இச்சிப்பாயென்றவிதியைப்பார் - இதையும்விட்டொழி-இவ்விதியையும் விட்டொழிந்த - யதி- சந்நியாசிக்கும்-நயிட்டிகவன்னிக்கு-நைஷ்டிகப்பிரமசாரிக்கும் - இகழ்ச்சியற்றதும்பாராய்-நிந்தையில்லாததும்பார் - அதையறிந்து-அக்கருத்தையுணர்ந்து - கன்மங்கள்-கன்மங்களின்மேல்வைத்த - ஆசைகளொழிந்து-இச்சைகள்நீங்கி - ஆனந்தமடைவாய் - ஞானத்தினற் பிரமானந்தத்தையடைவாய்-எ-று.

(ப-ம்.) இல்லறதன்மஞ் செய்யாமையாற் றுறவிக்கும் பிரமசாரிதனக்கும்இழிவினமையைப் பாரென்றார் - யதிநயிட்டிக வன்னிக்கிகழ்ச்சியற்றதும் பாராயெனக்கூறினர். (இ-உ-த-ப்) வேதங்கன்மகாண்டத்திற் கூறும்வன்னச் சிரமதன்மங்கள் அதனுலுண்டாகும்போக வின்பங்களனைத்தும பின்றுன்பங்களாக வருத்துதலைக் கண்டவற்றைவிடுத்தும் பரமசுகத்தைத்தேட வேண்டுமென்பததனபிப்பிராய மாதலாலிவற்றையொழித்தச் சுகத்தைத் தேடல்வேண்டுமென்பதாம். (எசு)

(அ-கை.) மூற்கூறிய வண்ணஞான மஞ்ஞானத்துக்குச் சத்துருவாயி னஃதிஃதோடுஞ்சேர்ந்தொரு தொழிலைச்செய்யலாமோ வெனவினுதல்:



உலகமானவஞ்ஞானமுங்கருமமுமுறவென்றவழிகூடும்
பலவுமானவஞ்ஞானமுஞானமும்பகையென்பதுளதானு
னிலவிலேமறுப்போலவஞ்ஞானமுநிமலஞானத்தோடே
குலவிநின்றிந்தச்சிருட்டிகள்செய்யவுங்கூடுமோகுருமூர்த்தி.

(இ-ள்.) உலகமானவஞ்ஞானமும் - சகத்துருவமான வறியாமையும் கருமமும் - கன்மமும்-உறவென்றவழிகூடும் - நட்பென்றமார்க்கமொக்கும் - பலவுமானவஞ்ஞானமும் - நானாவிதமான வஞ்ஞானமும் - ஞானமும் - ஏகமானஞானமும் - பகையென்பது - சத்துருவென்பது- உளதானல் - உள்ளதானல் - நிலவிலேமறுப்போல - சந்திரனிடத்திற் களங்கமிருப்பதுபோல -அஞ்ஞானமும் அஞ்ஞானமானது நிமலஞானத்தோடு - களங்கமற்றஞானத்தோடு குலவிநின்று - சேர்ந்திருந்து-குருமூர்த்தி - தேசிகரே - இந்தச்சிருட்டிகள்செய்யவுங்கூடுமோ - இந்தச்சிருட்டியாதிகளைச் செய்யவுங்கூடுமா-எ-று. (எஎ)

(இ-ம்) வெளிப்படை.

(அ-கை) அவ்வினவிற்குத்தாங்கூறல்.

சொரூபஞானமும்விருத்திஞானமுமென்று சோதிஞானமுமிரண்டாஞ்,சொரூபஞானமேவிருத்தியின் ஞானமாய்த்தோன்றும் வேறிலைமைந்தா, சொரூபஞானமஞ்ஞானசத்துருவென்று சுழுத்தியிற்கண்டாயே, சொரூபஞானத்தின்மருவுமஞ்ஞானத்தைச் சுடும்விருத்தியின்ஞானம்.

(இ-ள்.) சோதிஞானமும்-சுயப்பிரகாசமான சைதன்னியமே சொரூபஞானமும்-சொரூபஞானமெனவும் - விருத்திஞானமென்று விருத்திஞானமெனவும் - இரண்டாம்-இருவகையாம் - சொரூபஞானமே-சொரூபஞானமே - விருத்தியின்ஞானமாய் - விருத்திஞானமாய் -தோன்றும்-தோன்றுமேயன்றி - மைந்தா-மாணக்கா - வேறிலை-மற்றொன்றில்லையாம் - சொரூபஞானம் - ஸ்வரூபஞானமானது - அஞ்ஞானசத்துருவென்று - அஞ்ஞானத்துக்குப்பகையென்று - சுழுத்தியிற்கண்டாய்-சுழுத்தியவத்தையிற்பார்த்தாய் - சொரூபஞானத்தின்மருவும் ஸ்வரூபஞானத்திற்கூடியிருந்த - அஞ்ஞானத்தை-அறியாமையை விருத்தியின்ஞானம் சமாதியிலுதித்த விருத்திஞானமானது சுடும் எரிக்கும் என்றவாறு. (எஅ)

(ப-ம்) சுத்த சைதன்னியமென்பார் - சோதிஞானமெனவும் - பானுவிருத்திஞமென்பார் - சொரூபஞானமெனவும் - விசாரஞானமென்பார் விருத்திஞானமெனவும் - சுழுத்தியிலறிவின்மையின் வசமாகாமற்றுனறிவாக விருந்ததையெதிரிட்டுக் காண்கின்றதென்பார் சொரூபஞானமஞ்ஞான சத்துருவென்று சுழுத்தியிற்கண்டாயே யெனவும் சமாதியிலுதயமான

விவ்வழிவினைஞ்ஞானநசிக்குமென்பார் சொரூபஞானத்தின் மருவும ஞ்ஞானத்தைச்சுடும் விருத்தியின் ஞானமெனவுங்கூறினார்.

(இ-ம்) ஆத்மசங்கற்பமான வழிவிற்குண்டான வழியாமை யவ்வழிவி லுதயமான வனுபூதியினாற்கெடுமென்பதாம். (௭௧)

(அ-கை.) காரணத்தாற்கெடாத வஞ்ஞானங்காரியத்தா லெங்ஙனங் கெடுமென்ற வினாவிற்குத்தாம்.

துருத்திமாயையைச்சுழுத்தியிற் சுடாததுசொரூபஞானந்தானே
விருத்திஞானமாய்ச்சுட்டதெப்படியெனில்வெய்யிலா லுலகெங்கும்
பரித்தசூரியன்சூரியகாந்தத்திற்பற்றியக்கினியாகி
யெரித்தவாறுபோற்சமாதியில்விருத்தியாலெரிக்குமென் றறிவாயே

(இ-ள்.) துறத்திமாயையை சடமாகியவஞ்ஞானத்தை - சுழுத்தியி ல்-சுழுத்தியவத்தையில் சுடாதது - கெடுக்காததான சொரூபஞானந் தானே-சொரூபஞானமே - விருத்திஞானமாய் - விருத்திஞானரூப மாய் சுட்டதெப்படியெனில் எரித்ததெங்ஙனமெனின் - சூரியன் சூரிய னானவன் - உலகெங்கும் - சகத்திலெவ்விடத்தும் - பரித்த - வியாபித்த- வெய்யிலால் - ஊஷ்ணகிரணத்தினாலெரிக்காமல் - சூரியகாந்தத்திற்பற்றி- சூரியகாந்தக்கல்லிற்பற்றி -அக்கினியாகி - வன்னிஸ்ரூபமாய் -எரித்தவா றுபோல் - சகலவஸ்துக்களேயுந் தகித்த தன்மையைப்போல- சமாதி யின்நிட்டையின்கணுதிக்கும் - விருத்தியால்-பூரணவிருத்தி ஞானத் தினால்-எரிக்குமென்றறிவாய் - திரிசியரூபமான வஞ்ஞானத்தைக்கெடுக் குமென் றுணர்வாய்-எ-று.

(இ-ம்) சாரணமான கிரணத்தாற் கெடாதபொருள் காரியமானவக்கி னியாற்கெடுவதுபோல சொரூபஞானத்தாற் கெடாதவஞ்ஞானமதிலுத யமான பூரணவிருத்தி ஞானத்தாற்கெடுமென்பதாம். (௭௨)

(அ-கை) விருத்திஞான மந்தக்காரணகாரிய மாதலினதைக் கருமமெ னப்படாதோவெனவினாதல்.

அருளுடையனே திரிவிதகாரணத்தாலாகியதொழிலெல்லாங்
கருமமல்லவோவிருத்திஞானமுமந்தக்காரணகாரியமன்றோ
வரியகன்மமஞ்ஞானத்தைக்கெடுக்குமென்றோதினலாகாதோ
பெரியஞானமென்றதற்சொருபேரிட்டபெருமையையுரையீரோ

(இ-ள்.) அருளுடையனே-அநுக்கிரகஞ்செய்யாநின்ற வெனதாசிரிய ரே - திரிவிதகாரணத்தால் - மனம்வாக்குக்காயமென்கிற முக்காரணங்க ளால் - ஆகியதொழிலெல்லாம் - உண்டானகிரியைகளனைத்தும் - கருமம ல்லவோ - கன்மமல்லவோ - விருத்திஞானமும் - பூரணவிருத்திஞான மும் - அந்தக்காரணகாரியமன்றோ - அந்தக்கரணத்தின் காரியமன்



றோ-உரியகன்மம் - அறியாமைக்குரியகன்மமானது - அஞ்ஞானத்தை க் கெடுக்குமென்று - அஞ்ஞானத்தை நசிப்பிக்குமென்று - ஓதினலா காதோ-உரைக்கிலாகாதா - பெரியஞானமென்று - கனமானஞானமெ ன்று-அதற்கு-அக்கன்மத்திற்கு - ஒருபேரிட்ட - ஓர்நாமந்தரித்தபெரு மையையுரையீர் மகிமையைச்சொல்வீர்-எ-று.

(இ-ம்) வெளிப்படை.

(அ-கை) அவ்வினாவிற்குத்தாம்.

விருத்திஞானமந்தக்காரணத்தொடுவிருத்தியாகிலுமைந்தா
வொருத்திமக்களே தங்களிற்பகைக்கின்றதுலகெங்குங்கண்டோமே
கருத்தணுகியபுருடதந்திரங்களாங்கருமங்களவைபோல
வருத்தஞானமோபுருடதந்திரமன் றுவஸ்துதந்திரமாமே.

(இ-ள்.) விருத்திஞானம் -விருத்திஞானமானது - அந்தக்காரணத் தோடு-மனத்தினுடைய - விருத்தியாகிலும்-விருத்தியானாலும்- மைந் தா-மாணாக்கா-ஒருத்திமக்களே தங்களில் - ஒருமாதாவின்புத்திரர்கள் தங்களுக்குள்ளே - பகைக்கின்றது-கொலைசெய்கின்றது-உலகெங்குங்க ண்டோம்-சகமெங்கும்பார்த்தோம் - கருமங்கள் - கன்மங்களானவை- க ருத்தணுகிய-அகம்பாவமுள்ள - புருடதந்திரங்களாம் - புருடதந்திரங்க ளேயாம் - அவைபோல - அவற்றைப்போல-வருத்தஞானம்-அகமகிழ்ச் சியுள்ளஞானமானது - புருடதந்திரமன்று-புருடதந்திரமன்றுல் -வஸ் துதந்திரமாம்-வஸ்துவினது தந்திரமாம்-எ-று.

(இ-ம்) விருத்திஞானமுங் கன்மமுமந்தக் காரணகாரியமாயினும் புரு டதந்திரத்தான் மனதிலுதிக்குங் கன்மத்தை வஸ்துதந்திரத்தான்மன திலுதிக்கும் பூரணவிருத்தி ஞானங்கெடுக்குமாதலினவ்விருத்திஞான ங் கன்மமாகாவென்பதாம்.

(அ-கை.) போனகன்மங்களென்றசெய்யுண் முதலிதுகாறுங் கன்ம மானது ஞானமுதிப்பதற் கேதுவன்றென வுரைத்து விசாரஞானத்தானீக் கி மேலவ்விசாரஞானத்தையுநீக்குவான் றொடங்கி யஃதைதயோகஞான மும் விவேகஞானமுமென விருதிறனுக்க் கூறுகின்றார்.

வகுத்தகன்மங்கள்செய்யவுந்தவிரவுமற்றொன்றாக்கவுங்கூடு
மிகுத்தஞானமப்படியன்றுதியானமும்விவேகஞானமும்வேறே
செகத்திலொன்றையொன்றுவிவைன்பாவிக்குந்தியானங்கற்பிதயோக
மூகஸ்தமாய்க்கண்டஞானமேவாஸ்தவயோகமாய்மயங்காதே.

(இ-ள்) வகுத்தகன்மங்கள் - புருடர்களால்வகுக்கப்பட்ட கன்மங்க ளானவை - செய்யவும் - செய்தற்கும் - தவிரவும் - ஒழிதற்கும் - மற் றொன்றாக்கவும் - மற்றொருவிதமாகச்செய்தற்கும் - கூடும்-ஆம்-மிகுத் தஞானம்-பூரணஞானமானது - அப்படியன்று - அத்தன்மையுடையதி

ன்று - தியானமும்-தியானமும் - விவேகஞானமும் - விவேசஞானமும் - வேறு-வேருகும்-செகத்தில்-உலகத்தின்கண் - ஒன்றையொன்றுக-ஒருவஸ்துவை மற்றொருவஸ்துவாக - இவன்பாவிக்கும்-இப்புருடன் பாவிக்கின்ற -கற்பிதயோகம்-கற்பனுயோகமானது-தியானம் - தியானமாம்-முகஸ்தமாய்க்கண்டஞானமே - பிரத்தியட்சமாகத்தரிசித்தஞானமே வாஸ்தவம்-உண்மையானவிவேகஞானமாம் - மேகமாய்மயங்காது-மோகமாகாது-எ-று.

(இ-ம்) யோகஞானங்கற்பிதமான பரோட்சமும் விவேகஞானமுண்மையான வபரோட்சமுமாமென்பதாம்.

(அகை.) (இது.)

கண்டறிந்ததுஞானங்கேட்டதுதனைக்கருதுபாவனையோகங்
கண்டபேர்சொலக்கேட்டதுமறந்துபோங்கண்டதுமறவாதே
கண்டவஸ்துமெய்தியானவஸ்துக்கள்பொய்கருவியஞ்ஞானத்தைக்
கண்டவக்கணங்கொல்வதுஞானமேகருமமன்றறிவாயே.

(இ-ள்.) கண்டறிந்ததுஞானம்-அனுபவமாசப் பார்த்துணர்ந்தஞானமாம் - கேட்டதுதனை-கேட்டதை-கருதுபாவனை - தியானிக்கின்றபாவனையானது - யோகம்-யோகமாம் -கண்டபேர்சொல - பார்த்தவர்கள் சொல்ல-கேட்டது-கேட்டபொருள்-மறந்துபோம் - மறதியாம் -கண்டதுமறவாது-பார்த்ததுமறக்காது- கண்டவஸ்து-பார்த்தபொருளானது-மெய்-உண்மையாம் - தியானவஸ்துக்கள் -பாவிக்கின்றபொருள்களானவை-பொய்-மித்தையாம்-கருவி-கோபித்து - அஞ்ஞானத்தை- அறியாமையை - கண்டவக்சணம்-பார்த்தவந்தக்ஷணத்தில் - சொல்வதுஞானம் - கெடுப்பதுஞானமேயன்றி - கருமமன்று-கன்மமன்று - அறிவாய்-இதனையுணர்வாய்-எ-று.

(இ-ம்) தியானயோகங் கேட்டவண்ணம்பாவித்தலும் விவேகஞானம்பாவித்தவண்ணங்காண்டலு மாதலாலிஃதேயுண்மையென்பதாம்.

(அ-கை.) தியானயோகங்கற்பிதமெனி னஃதிலுதிக்கு முத்தியுங்கற்பிதமன்றோவென்னும் வினவிற்குத்தாம்.

சருவமுத்தியைத்தருகின்றதியானமுஞ்சத்தியமன்றென்ருல்
சருவமுத்தியுஞ்சத்தியமன்றென்றுசங்கியாதேநீகே
ளுருவஞ்கேட்டவன்றியாநிக்கும் பொழுதிலவ்வுருவம்வாஸ்தவமன்றே
யுருவமாகுமப்பொழுதுகண்ணுற்கண்டவுருவம்வாஸ்தவமாமே.

(இ-ள்.) சருவமுத்தியை-சருவப்பிரமமமென்னும் வீட்டை - தருகின்றதியானமும் - கொடுக்கின்றதியானத்தையும் - சத்தியமன்றென்ருல் -உண்மையன்றென்றுசொன்னல் - சருவமுத்தியும்- அத்தியானத்திலுவரும் பூரணனுபவமும - சத்தியமன்றென்று -உண்மையன்றென்று - சங்கியாதே-சங்கைசெய்யாதே-நீகேள்-நீகேட்பாய்-உருவம்பிரமஸ்வரூபத்தை - கேட்டவன்-கேளவியுற்றவன் -தியானிக்கும்பொழுதில்- சிந்திக்கும்பொழுதில் - அவ்வுருவம் - அத்தியானரூபமாகிய ஸ்வரூபம் - வாஸ்தவமன்று -உண்மையன்று - உருவமாகுமப்பொழுது -தானந்தஸ்வரூபமாகும்போது - கண்ணுற்கண்டவுருவம் ஞானதிருஷ்டியினுற்பார்த்த ஸ்வரூபமானது - வாஸ்தமாம்-உண்மையாம்-எ-று.

(இ-ம்) பாவனைகற்பிதமும் அஜினின்றதைக் கரைத்தெழாநின்றபாவிப்பவ னுண்மையுமாதலா லப்பாவனை மித்தையே யதனுலுதயமாகு முத்தி சத்தியமேயாமென்பதாம்.

(அ-கை.) பொய்க்குமெய்யை யுதிப்பிக்குஞ் சத்தியதென்ற வினவிற்குத்தாம்.

சடமதாகியதியானமெய்யாகியசர்வமுத்தியைநல்குந்
திடமதானதெப்படியெனிலவரவர்தியானமேபிறப்பாகு
முடலமாசையாற்றியானிக்கிற்றியானித்தவுடல்களாகுவர்மைந்தா
தொடர்பவங்கெடச்சொரூபமேதியானிச்கிற்சொரூபமாகுவர்மெய்யே.

(இ-ள்.) சடமதாகியதியானம்-மித்தையாகியதியானமானது - மெய்யாகிய-சத்தியமாகிய - சர்வமுத்தியை-பரிபூரணமானகைவல்யத்தை-நல்கும்-கொடுக்கின்ற-திடமானதெப்படியெனில்- வலிமையுடைததானதெங்ஙனமென்றுகேட்கில் - அவரவர்-அவரவர்களுடைய தியானமேபிறப்பாகும் தியானமேசனனமாம் -உடல்மாசையாற்றியானிக்க - தேகவிச்சையினுற்சிந்திக்க தியானித்த உடல்மாகுவர் - சிந்தித்தவடிவமாவார்கள்-மைந்தா-மாணுக்கா - தொடர்பவங்கெட-தொன்றுதொட்டுவருகின்ற பவங்கெடும்பொருட்டு - சொரூபமேதியானிக்க-ஆத்மஸ்வரூபத்தைச்சிந்திக்க - சொரூபமாகுவர் - அசசொரூபமேயாவார்கள்-மெய்யே-உண்மையாம்-எ-று.

(ப-ம்) தியானஞ்சிற்சடவுருவ மாகுமென்பார் தியானித்த உடல்களாகுவரெனவும் சொரூபமாகுவரெனவுங்கூறினுர்.

(இ-ம்) தியானத்திற்காரணவுருவன் சத்துங்காரியவுருவம்சத்துமாதலினதற்கச்சத்தை யறிவிக்கும் வல்லமையுண்டாயிற்றென்பதாம்.

(அ-கை.) தியானத்திற்சசத்திபிருக்க விசாரஞான மியாதுக்கென்றவினவிற்குத்தாம்.

பிரமரூபத்தைத்தியானித்தபேர்களும்பிரமமாகுவரொன்றுனுசரீரமாங்குரவனேவிசாரமேன்ஞானமேனென்னுதே
பரமபாவனைபரோக்ஷமாம்பின்பந்தப்பரோக்ஷமேயபரோக்ஷந்
திவிரசாமாஞானமேமுத்தியாந்தீர்வையீதறிவாயே.

(இ-ள்) பிரமரூபத்தை - பிரமஸ்வரூபத்தை-தியானித்தபேர்களும் - சிந்தித்தவர்களும் - பிரமமாகுவரென்றால் - அப்பிரமமேயாவார்களெ னறுசொன்னால்-நரசரீரமாங்குறவனே-மானிடவடிவங்கொண்ட - வென தாசிரியரே - விசாரமேன்-விசாரமியாதிறுக்கு - ஞானமேன் - ஞானமி யாதினுக்கு-என்னுதே-என்றுகேளாதே-பிரமபாவனை - பிரமத்தியான மானது -பரோட்சமாம-பரோட்சஞானமாம் - பின் - பின்பு-அந்தப்ப ரோட்சமே-அப்பரோட்சஞானமே-அபரோட்சம் - அபரோட்சஞான மாதலால் - திரவிசாரமாம்- திடமானவிசாரத்தினாலுதிப்பதாம்ஞானமே-அந்தவபரோட்சஞானமே-முத்தியாம்-ஈது-இதுவே - தீர்வையென்றறி வாய்-தீர்ப்பென்றுணருவாய-எ-று.

(இ-ம்.) தியானத்தின் காரியம்யோகமுங் காரணம்விசார ஞானமுமா தலா வவ்விசாரஞானமே வீடடைதற்கு வேண்டுமென்பதாம்.

(அ-கை.) முன்புத்தியானயோகத்தைநீக்கி மேல்விசார ஞானத்தை நீக்குவான் விருத்திஞானமிருக்கிற் சுபானுபவ மெங்ஙனம்கூடுமென்ற வினவிற்குத்தரம்.

வீடதாம்பரிபூரணசொரூபத்தில்விருத்திஞானமுங்கூடிச்
சேடமாகினலகண்டமாமனுபவசித்தியெப்படியென்றாற்
சாடிநீர்மண்ணைப்பிரித்ததேற்ருப்பொடிதானுமண்ணுடுமாயு
மூடிஞானமுமறிவிலாமையைக்கெடுத்தொக்கவேகெடுந்தானே.

(இ-ள்) வீடதாம்-முத்தியாகிய - பரிபூரணசொரூபத்தில் - பூரணமாகிய பிரம்மஸ்வரூபத்தில் - விருத்திஞானமுங்கூடி- விருத்திஞானமுஞ்சேர்ந்து-சேடமாகினல்-விசேடமானல் - அகண்டமாமனுபவசித்தி-அகண்டாகாரவனுபவஞ்சித்திப்பது - எப்படியென்றால -எங்ஙனமெனின்-சாடிநீர்மண்ணை - தாழியிலிருக்குஞ் -சலத்திலுள்ள சேற்றை - பிரித்ததேற்றப்பொடிதானும் - வேறுசெயததேற்றுங்கொட்டைத்தூளும்-மண்ணெடுமாயும்- அச்சேற்றோடுங்கெடும் - ஊடி-பகைத்து - ஞானமும்-விருத்திஞானமும் - அறிவிலாமையைக்கெடுத்து - அஞ்ஞானத்தைக்கெடுத்து - ஒக்கவேகெடும்- தானுங்கூடவேநசிக்கும்-எ-று.

(இ-ம்) விசாரஞானமறிவுதயமாம்பொருட்டறிவின்மையைக்கெடுத்த ஃதோடுங் கெடுவதேயன்றிச் சேடிக்கமாட்டாதென்பதாம்.

(அ-கை.) கைதவங்களென்ற செய்யுண்முதலிதுகாறு முகபத்சிருட்டியாலுண்டான சஞ்சிதம்பர ஞானத்தாற்கெடுமெனவு மதனாலுண்டா தஃதுமிதனேடுங் கெடுமெனவுங்கூறி இச்செய்யுளின் அவ்வனுபவமுள்ள சீவன்முத்தரிலக்கணங்கூறல்.



இந்தநிச்சயமுத்தருளனுபவமிருப்பதெப்படியென்றாற்
சிந்தையற்றபூமண்டலவிராசனுஞ்சிசுவும்போற்சுகமாவர்
பந்தமுத்திகண்மறந்துபோமுண்டென்றுபலர்சொலினகையாவ
ரந்தரத்தையுண்டுமிழ்ந்ததோர்கொசுகெனுமவர்களைநகையாரோ.

(இ-ள்) இந்தநிச்சியம்-இந்தநிச்சயமானது-முத்தருள்-சீவன்முத்தருக்குள்ளே, அனுபவம்-அனுபவமாக-இருப்பதெப்படியென்றால்-இருக்கின்றதெவ்வெண்ணமென்றால் - சிந்தையற்ற - பகைவருளரொன்றுஞ்சிந்தையின்றிய - பூமண்டலவிசாரனும் -பூவுலகமுழுதுமாளுகின்றசக்கரவர்த்தியையும் - சுசுவும்போல்-பாலகரையும்போல், சுகமாவர் -சுகஸ்வரூபராயிருப்பார்கள் - பந்தம் -பந்தமானது - மறந்துபோம் - கெட்டுப்போம் - முத்தி வீடானது - உண்டென்று -இப்போ துளதாமென்று - பலர் சொல்லில்-அனேகருரைக்கில் - நகையாவர்-சிரிப்பார்-ஓர்கொசுகு. ஒருமசகமானது -அந்தரத்தை - ஆகாயத்தை . உண்டுமிழ்ந்ததென்னும் .விழுங்கிக்கக்கிற்றென்னும் - அவர்களைநகையாரோ . அவர்களையார்தானகையார்கள்-எ-று.

(ட-ம்) சவானுபூதி யெப்போதுமொருதன்மையாக விளங்குகின்ற தனக்கு அறியாமையார் பந்தமுமதனிவிர்த்தியானவீடுமிப்போதுண்டானதின்றென்பார் - பந்தமுத்திகண்மறந்துபோமுண்டென்றுபலர்சொலின கையாவரெனக்கூறினர்.

(இ-ம்) அறிவறிவாமையின்றி முன்னுள்ளசத்தாமாத்திரமாகவிளங்கிச்சுகித்திருப்பவனேசிவன்முத்தனென்பதாம்.

(அ-கை.) மத்தியில்வாந்தரயாகத்தோற்றுங்கற்பனையின் மயங்காமைக்கோர்கதைகூறல்.

மலடிமைந்தனுந்தனுக்தாணுவிற்புருடனும்வான்மலர்முடிசூடி
யிலகுகந்தர்ப்பநகரிலேசுததிகையிரசிதம்விலைபேசிக்
கலகமாயினரிடையினிற்கயிற்றராக்கடித்திருவருமாண்டா
ரலகையாயினரெனும்விவகாரத்தையறிந்தவன்மயங்கானே.

(இ-ள்)மலடிமைந்தனும்-வந்தியாபுத்திரனும் - தாணுவிற்புருடனும்-குத்தியின்மகனும் - வான்மலர்-ஆகாயத்தாமரைப்பூவை -முடிசூடி-சிரசிற்றரித்து - இலகுகந்தர்ப்பநகரில் - விளங்காநின்றகந்தர்வநகரத்தில்-சுத்திகையிரசிதம்-கிளிஞ்சல்வெள்ளியை - விலைபேசி - கிரயம்பேசி -கலகமாயினர் - பிணக்கடைந்தார்கள் - இடையினில்-நடுவில் - கயிற்றராக்கடித்து-ரச்சுசர்ப்பந்தீண்டி - இருவரும் - முன்சொன்னவிரண்டுபேர்களும் - மாண்டார்-இறந்து - அலகையாயினர் - பேயாயினர்கள்-எனும் விவகாரத்தை-என்கிறசமாசாரத்தை - அறிந்தவன்மயங்கான்-தெரிந்தவன்மயங்கமாட்டான்-எ-று.

(இ-ம்) கற்பனையின் மூலந்தெரிந்தவ னதனிடத்தின் மயங்கானென்பதாம். (அகூ)

(அ-கை) இதுசாறுங் காரியோபாதியான வவிதனதயினு லுண்டான மயக்கத்தைநீக்கி மேற்காரணோ பாதியான மாயையினு லுண்டாகுமயக்கத்தைக் களைதற்பொருட்டஃதுமித்தையாதலினதால் வரும்பலப்பிராப்திகளு மித்தையென் றகற்றி நீ சுவானுபூதியாக விளங்குவாயெனக் கூறல்.

மாயையென்பதுபொய்யெனிலதுபெற்றகைகையெலாம்பொய்யாமே
தாயையன்றிமக்களுக்கொருபிறவியுஞ்சாதியும்வேறுண்டோ
சேயசொர்க்கமுநாகமுநன்மையுந்தீமையும்பாராமற்
றூயசத்துச்சித்தானந்தபூரணசொரூபமாயிருப்பாயே.

(இ-ள்) மாயையென்பது-மாயையென்றுசொல்லப்படுவது. பொய்யெனில் . மித்தையெனறல் . அதுபெற்றகைகையெலாம் . அதிலுண்டான பொருளனைத்தும் . பொய்யாம் . மித்தையேயாம் . தாயையன்றி-மாதாவைத்தவிர - மக்களுக்கு-புத்திரருக்கு . ஒருபிறவியும் . ஓர்பிறப்பும் . சாதியும்-குலமும் - வேறுண்டோ-வேறுளவோ (ஆதலால்)சேயசொர்க்கமும் - செவ்விதானசுவர்க்கமும் . நரகமும்-நாகமும் .நன்மையும் . நன்மையும் . தீமையும் - தீங்கையும் - பாராமல் பார்க்காமல் . தூய.பரிசுத்தமான . சத்துச்சித்தானந்த . சச்சிதாநந்தமாகிய . பூரணசொரூபமாயிருப்பாய்.பரிபூரணஸ்வரூபமாக விருப்பாய்-எ-று.

(இ-ம்) மாயைமித்தையாதலி னதன்காரியங்களனைத்து மித்தையேயாமென்பதாம்.

(அ-கை) மாயாகாரியமித்தையாயின் பிரமன்முதலிய வனைத்துமித்தையாமே அங்ஙனங்கூறிற் குற்றம்வாராவோவெனவினுதல்.

பங்கயாசனன்முதற்பலதேவரும்பாருளபெரியோருங்
கங்கையாதியாந்தீர்த்தமுந்தேசமுங்காலமுமறைநாலு
மங்கமாறுமந்திரங்களுந்தவங்களுமத்தியமெனச்சொன்னு
லெங்கணுயகனேயதனுற்குற்றங்களில்லையோமொழியீரோ:

(இ-ள்) பங்கயாசனன்முதல்.பிரமதேவனுதியான - பலதேவரும் . சமஸ்ததேவர்களும் . பாருளபெரியோரும் . பூமியின்கணுள்ளமகான்களும் . கங்கையாதியாம் , பாகீரதிமுதலிய . தீர்த்தமும் . தீர்த்தங்களும்.தேசமும் . நாடுகளும் . காலமும் . திரிகாலங்களும் . மறைநாலும் . வேதங்கணன்கும் . அங்கமாறும் . சாத்திரங்களாறும் . மந்திரங்களும் . பிரணவாதிமகாமந்திரங்களும் . தவங்களும் . தபசுகளும் . அசத்தியமெனச்சொன்னுல் . மித்தையென்றுரைக்கில் யெங்கணுயகனே . எம்முடைய



வாண்டவனே . அதனுல் . அங்ஙனஞ்சொல்லுவதனுல் . குற்றங்களில்லையோ . பிழைகளில்லையோ . மொழியீர் . சொல்வீர்-எ-று.

(இ.ம்)வெளிப்படை.

(அ.கை) அவ்வினுவிற்குத்தரம்.

சொர்ப்பனந்தனிற்கண்டதைப்பொய்யென்றுசொல்வதுபிழையானு
லற்பமாயையிற்றோன்றியசகங்களையசத்தெனல்பிழையாமே
சொர்ப்பனந்தனிற்கண்டதைப்பொய்யென்றுசொல்லலாமெனின்மைந்தா
வற்பமாயையிற்றோன்றியசகமெலா மசத்தியமெனலாமே.

(இ-ள்) சொர்பபனந்தனில் . கனவினில் . கண்டதை . பார்த்ததை. சொல் பொய்யென்று . மித்தையென்று . சொல்வது . பிழையானுல் . சொல்லுவதுகுற்றமாயின . அற்பமாயையில். சிறுமையான மாயையினிடத்தில். தோன்றிய . உண்டான . சகமெலாம் . உலகங்களனைத்தும்: அசத்தெனில் . மித்தையென்றுல் . பிழையாம் . குற்றமாம். சொர்ப்பனத்தில் . கனவில் . கண்டதை . பார்த்ததை.பொய்யென்று . மித்தையென்று சொல்லலாமெனில் . உரைக்கலாமெனின் . மைந்தா . புத்திரா. அற்பமாயையில் . சிறுமையானமாயையினிடத்தில் . தோன்றியசகங்களை . உண்டானவுலகமனைத்தையும் . அசத்தியமெனலாம் . மித்தையென்றுரைக்கலாம்.

(இ-ம்) சொர்ப்பனம்போல மாயாகாரியமான சகமெல்லாமுமித்தையாதலி னவைகளினியல்பைக் கூறுதலாற்குற்றமில்லையென்பதாம்.

(அ.கை) சத்தசத்தினுண்மையிஃதெனக்கூறல்.

பொய்யைமெய்யென்றமூடர் புண்ணியரென்றுபுராணங்கூப்பிடுமானு
ஞன். மெய்யைமெய்யென்றஞானிக்குக்குற்றங்கள் விதித்தசாத்திரமு
ண்டோ:பொய்யதேதெனிலுருபங்களாம்பூதமாகியமாயை. மெய்யதே
தெனிற்சச்சிதானந்தமாய்வியாபிக்குமான்மாவே.

(இ.ள்) பொய்யைமெய்யென்ற . மித்தையைச்சத்தியமென்ற . மூடர். அறிவிலாமை . புண்ணியரென்று . தருமவான்களென்று : புராணங்கூப்பிடுமாஞல் அஷ்டாதசபுராணங்களு முறையிடுமாயின் . மெய்யைமெய்யென்ற . உண்மையைபுண்மையென்ற . ஞானிக்கு : ஞானவான்களுக்கு . குற்றங்கள்விதித்த . குற்றங்களைநியமித்த . சாத்திரமுண்டோ . நூல்களுமுளவோ . பொய்யதேதெனில் . மித்தையாவதேதெனில். நாமரூபங்களாம் . நாமரூபவடிவங்களான . பூதமாகியமாயை . பஞ்சபூதபௌதிகங்களாகிய மாயையேயாம் . மெய்யதேதெனில் தத்துவமியாதெனில் . சச்சிதானந்தமாய் . சச்சிதானந்தஸ்வரூபமாக . வியாபிக்கும் . வியாபித்திருக்கும்: ஆன்மாவே . ஆத்மஸ்வரூபமேயாம்-எ-று.

(இ-ம்) ஆத்மா னத்மாவினிலக்கணங்கூறினதாம்.

(அ-கை) மாயையின்றன்மை யிஃதெனத்தோன்ற வறுவகையாக வினுதல்.

மாயையென்பதேதுடையாரெப்படிவந்ததுவருவானேன்
மாயையென்பதுபிரமத்தின்வேறெனின்வஸ்துவுமிரண்டாமே
மாயையென்பதும்பிரமமுமொன்றெனின்வஸ்துவும்பொய்யாமே
மாயையென்றமேகங்களுக்கொருசண்டமாருதகுருமூர்த்தி

(இ ள்) மாயையென்றமேகங்களுக்கு மாயையென்றமுகில்களுக்கு ஒருசண்டமாருதகுருமூர்த்தி ஒப்பற்றபெருங்காற்றாகிய தேசிகமூர்த்தியே மாயையென்பதேது மாயையென்றுசொல்லுவதியாது உடையார் அதனையுடையவரியாவர் எப்படிவந்தது எவ்விதமுதயமாயிற்று வருவானேன் உண்டானகாரணமென்ன மாயையென்பதுமாயையென்றுசொல்லுவது பிரமத்தின்வேறெனில் பிரமத்துக்குவேறானதென்றுரைக்கின் வஸ்துவுமிரண்டாமே வஸ்துவுந்துவிதமாமே மாயையென்பது மாயையென்றுரைக்கப்படுவதும் பிரமமும் பிரமமென்றுரைக்கப்படுவதும் ஒன்றெனில் ஏகமென்றுன் வஸ்துவும்பொய்யாமே மாயாவஸ்துவைப்போலப் பிரமவஸ்துவு மசத்தியமாமே இதனையருள்வீர எ-று.

(இ-ம்) மாயையினுருவமும் அஃதுடையவர்களையும் அதனுற்பத்தியும் அஃதுதித்தற்குக்காரணமும் அஃதுபிரமத்திற்குப் பின்னமாயின்வஸ்துதுவிதமாமேயெனவும் அபின்னமாயின்வஸ்துவு மித்தையாமேயெனவும் அதனுண்மையைத் தெரியவினுவினதாம்

(அ-கை) அவைகளின்முதனான்குவினுவுக்குத்தாங்கூறல்

அதனையின்னதென்றுரைத்திடப்படாமையால்வாச்சியவடிவாகு
மிதுதனக்குளதுடலியானுலகுமெய்யெனுமவருடையோர்கள்
கதையிலாதபொய்வந்ததிப்படியென்றுகண்டபேரில்லைமைந்தா
விதனமாயையேன்வந்ததென்றாற்புத்திவிசாரமற்றதனுலே

(இ ள்) அதனை அம்மாயையை இன்னதென்று இத்தன்மையுள்ளதென்று உரைத்திடப்படாமையால் சொல்லக்கூடாமையால் அவாச்சியவடிவாகும் அவாச்சியவுருவமாம் இதுதனக்குளது இஃதெனக்குள்ளது உடலியான் இத்தேகநான் உலகுமெய் இச்சகஞ்சத்தியம் எனுமவருடையோர்கள் என்கின்றவர்களே யதனையுடையவர்கள் கதையிலாதபொய் காரணமில்லாதமித்தையானமாயை வந்ததிப்படியென்று உதித்ததிவ்விதமென்று கண்டபேரில்லை பார்த்தவர்களில்லை மைந்தா மகனே விதன் மாயை துன்பமயமான மாயையானது ஏன்வந்ததென்றால் என்னேன்றிற்றெனில் புத்திவிசாரமற்றதனால் ஆத்மஞானவிசாரஞ்செய்யாததினால் வந்தது-எ-று.



(ப-ம்.) உருவ்மருவ முருவாருவமென மாயையைப்பகுத்துச்சொல்லக்கூடாதென்பார் அவ்வாச்சியவடிவெனவுந் தேகாதிப்பிரபஞ்சத்தையுண்மையென்று கொள்பவரோ அம்மாயை யுடையவரொன்பார் உடலியானுலகுமெய்யெனு மவருடையோர்களெனவும் மித்தையாகத் தோன்றன் மாத்திரமேயன்றி யுற்பத்தி யில்லையென்பார் பொய்வந்ததிப்படியென்று கண்டபேரில்லையெனவும் அங்ஙனந்தோன்றுதல் யாதினாலெனவிசாரிக்கும் விசாரமின்மையே அதனுற்பத்திக்குக் காரணமென்பார் மாயையேன் வந்ததென்றாற் புத்திவிசார மற்றதனுலே யெனவுங்கூறினார்.

(இ-ம்) மாயையினுருவமும் அதனையுடையவர்களையும் அதனுற்பத்தியும் அஃதுதித்தற்குக்காரணமுமிவையெனக் கூறினதாம். (௧௫)

(அ-கை.) ஐந்தாம்வினுவிற்குத்தரம்.

அருவமாகுமாயாவிவித்தைகள்விளையாடுமுன்றெரியாவே
யுருவமாம்பலகந்தாப்பசேனையாயுதித்தபின்வெளியாகும்
பிரமசத்திகளனந்தமாமதைக்கண்டுபிடித்திடல்கூடாதே
பாவுபூதங்கள்கண்டனுமானத்தாற்பலருக்கும்வெளியாமே.

(இ-ள்.) மாயாவி-இந்திரசாலஞ்செய்பவன்; விளையாடுமுன்-விளையாடுதற்குமுன்பு, அருவமாகும்- தோன்றாமையாயுள்ள, வித்தைகள்-வித்தையாசத்திகள், தெரியாவே-தோன்றுவாம் உருவமாம்-வடிவங்களாகின்ற, பலகந்தர்ப்பசேனையாய்-அநந்தகந்தாவசேனைகளாக,உதித்தபின் உண்டானபின்பு, வெளியாரும்)- அச்சத்திகள் விளக்கமாகும் (அவைபோல) பிரமசத்திகள் - பிரமத்தினது சத்திகள் அனந்தமாம்-அனேகமாம், அதை - அச்சத்தியை, கண்டுபிடித்திடல், கூடாது-பார்த்தல்கூடாததாம், பாவுபூதங்கள்கண்டு - விரியுமபஞ்ச பூதங்களைப்பார்த்து, அனுமானத்தால் -அனுமிதிப்பிரமாணத்தால். பலருக்கும்வெளியாம்-யாவர்க்கும் (மதுண்டென்னுவிளங்கும்)-எ-று.

(இ-ம்.) மித்தையானசகந்தோன்றுதலின் அங்ஙனந் தோற்றுவிக்குமித்தையான மாயாசத்தியென்றுளதென வுணரவேண்டுமென்பதாம்.

(அகை.) (இது.)

காரியங்களுஞ்சத்தியாதாரமுங்காணுமற்றதுமாயம்
பாரினின்றமாயாவியுஞ்சேனையும்பார்ப்பவர்கண்காணும்
வீரியத்திகழ்வித்தையாவினசத்திவெளிப்படாததுபோலப்
பேரியற்பிரமத்துக்குமுலகுக்கும்பிறிதுசத்திகளுண்டே

(இ-ள்.) சத்தி - சத்தியினது, ஆதாரமும் - ஆதாரமான பிரமமும் காரியங்களும், ஈசுவரசகத்தாகியகாரியங்களும், காணும் - தோன்

றும். அது-அம்மாயசத்தியானது, மாயம்-மாயமாயிருக்கும். பாரினின்ற பூமியின்கணிருந்த மாயாவியும் - மாயாவித்தைசெய்பவனும். சேனையும்-அவனாற் காட்டப்பட்ட படைகளும். பார்ப்பவர்கண்காணும் - காண்பவர்கண்ணிற்குத்தோன்றும் வீரியந்திகழ் - கெம்பீரமாய் விளங்குகின்ற வித்தையாயினசத்தி - வித்தையாகிய சத்தியானது வெளிப்படாது-தோன்றாது அதுபோல - அதைப்போல பேரியற்பிரமத்துக்கும் - மகத்துவமுள்ள பிரமஸ்வரூபத்துக்கும் உலகுக்கும் - சகத்துக்கும் பிறிது சத்திகளுண்டு னத்தியிற்சிலசத்திகளுளவாம்-எ-று.

(இ-ம்.) பிரமத்திற்கும் பிரபஞ்சத்திற்கு மத்தியின வாந்தரமாகத் தோன்றுகின்றமாயை தனியே யோர்முதலாகிப் பிரமத்திற்குவேறுபட்டிராததனால் வஸ்துவிரண்டாக மாட்டாதென்பதாம். (௧௭)

(அ-சை.) ஆறும்வினாவிற்குத்தாம்.

சத்திசத்தனைத்தவிர வேறன்றுகாண்சத்தனாமாயாவி
வித்தைகாட்டியவிந்திரசாலம்போய்வித்துவானும்போலப்
புத்திமைந்தனேசத்தியானாகிய பூரணவான்மாவின்
வஸ்துநிர்ணயஞ்சொன்னதிஷ்டாந்தத்தின்வழிகண்டுதெளிவாயே.

(இ-ள்.) சத்தி-சத்தியானது சத்தனைத்தவிர - சத்தனைவிட வேறன்றுகாண் வேறன்றாம் சத்தனாம் -சத்தனாகிய மாயாவி- வித்தைசெய்வான் வித்தைகாட்டிய-வித்தையைக்காண்பித்த இந்திரஜாலம்போய் -இந்திரசாலநீங்கி வித்துவானும்போல - வித்துவானுமாறுபோல புத்திமைந்தனே-அறிவுள்ளமகனே சத்தியானாகிய சத்தனாகிய பூரணவான்மாவின்-பரிபூரண வாத்மாவின் வஸ்துநிர்ணயம் ஸ்வரூபநிச்சயத்தை சொன்ன திஷ்டாந்தத்தின்-சொல்லிய திஷ்டாந்தத்தினுடைய கண்டு - மார்க்கத்தைப்பார்த்து தெளிவாய்-தெளிந்துகொள்வாய்-எ-று.

(இ-ம்) சத்தனைத்தவிரச் சத்தியென்றோர் வஸ்துவேறின்மையானும் அச்சத்தியில்லாவிடத்துஞ் சத்தனிருக்கையானும் அச்சத்தனுஞ் சத்தியமெங்ஙனமொன்றும் அங்ஙனமொன்றாகாமையானச் சத்தியைப்போல விச்சத்தன் சத்தாகானென்பதாம். (௧௮)

(அ-சை.) பிரதிவிம்பமான மாயாசத்தியைநீக்கி விம்பமான சிற்சத்தியை வெளிப்படுத்துவான் அசத்தானமாயாசத்தியுளதென்பதெங்ஙனமென்ற வினாவிற்குத்தாம்.

இல்லையாகியசத்தியையுண்டென்பதெப்படியெனக்கேட்கிற்
புல்லையாதியாமசேதனப்பொருளெல்லாம் பூத்துக்காய்ப்பனபாராய்
நல்லையாமகனேயதிலதிற்சிற்சத்திநடந்திடாதிருந்தக்காற்
றொல்லையாய்வருஞ்சாராசரவுயிர்க்கெலாஞ்சுபாவங்கள்வேறுமே.



(இ-ள்.) இல்லையாகியசத்தியை- மித்தையாகியமாயாசத்தியை உண்டென்பது - உளனென்பது எப்படியெனக்கேட்கில் - எங்ஙனமென்று கேட்பாயாகில் புல்லையாதியாம் - புன்முதலியன வாகிய அசேதனம் பொருளெல்லாம் - சடவஸ்துக்களனைத்தும் பூத்துக்காய்ப்பன புஷபித்துக் காயப்பனவற்றை பாராய்-பார்த்திடாய் நல்லையாமகனே - நண்மையானபுத்திரனே அதிலதிற்சிற்சத்தி - அவ்வற்றிற் சிற்சத்தியானது நடந்திடா திருந்தக்கால் - செல்லாதிருக்கு மாயின் தொல்லையாய் வரும்-தொன்று தொட்டுவருகின்ற சராசர உயிர்க்கெல்லாம் - தாபரசங்கமாகிய உயிர்களனைத்திற்கும்-சுபாவங்கள் வேறும் குணங்கள் மாறுமெ-று,

(அ-கை.)(இ-து)

கருப்பைமுட்டையுட்பறவைகள்பலநிறங்கலந்தசித்திரம்பாரா
யருப்பமாஞ்சத்திநியமமில்லாவிடிலரசிலாநகர்போலாம்
நெருப்புநீர்களாங்கசப்புமேமதுரமாநீசனுமறையோதும்
பொருப்புமேகமாங்கடலெலாமண்களாம்புவனமிப்படிபோமே.

(இ-ள்.) கருப்பை-கருப்பையினிருக்கும் முட்டையுள் - அண்டத்தினுள்ளிருக்குங் கருவில் பறவைகள் பட்சிகள் பலநிறங் கலந்த அநேகவன்னமான, சித்திரம்பாராய் - சித்திரத்தைப்பார் அருப்பமாஞ் சத்தி-அருமையான சிற்சத்தியின் நியமமில்லாவிடில் நியமமில்லாமற்போனால் அரசிலாநகர்போலாம் - அரசனில்லாத பட்டணத்தைப் போலாகும் நெருப்பு - அக்கினியானது நீர்களாம் - சலமாகும் கசப்பும் - கைப்பும் மதுரமாம் - தித்திப்பாகும் நீசனும் - சண்டாளனும் மறையோதும் வேதாத்தியயனஞ்செய்வான் பொருப்பு - மலைகளும் மேகமாம் - முகில்களாம் கடலெலாம் - சமுத்திரங்களனைத்தும் மண்களாம்-புழுதிகளாம் புவனம்- சகத்தானது-இப்படிபோம்-இவ்வண்ணமாகும்-எ-று.

(இ-உ-க-ம்.) சூரியகிரணமே பகிர்முகத்தின் மித்தையானசலமாகவும் அந்தர் முகத்தினுண்மையான கானல கவுந்தோற்றுவன்போல பிரமப்பிரகாசமேபகிர்முகத்தின் மித்தையான மாயாசத்தி யாகவும் அந்தர்முகத்தினுண்மையான சிற்சத்தியாகவுந் தோன்றிய விச்சத்தியேயனைத்திற்கு முள்ளீடாயிருந்து நடாத்துதலி னிக்கின் றன்மையை யகன்மேல்வைத்துக் கூறினதேயன்றியதன்கின்றென்பதாம். (௱)

(அ-கை.) இச்சத்திகணீங்கலுஞ்சத்தனைத்துவிதமின்றித்தரிசித்தலு
ட்முத்தியையடைதலு மெங்ஙனமென்று மூன்றுவகையான்வினாதல்.
ஆர்க்குங்காணவுமறியவும்படாதென்றுமவாச்சியவடிவென்றுஞ்
சேர்க்குநாமரூபப்பயிர்வித்தென்றுஞ்செப்பியசிற்சத்தி

## ரய அசந்தேகந்தெளிதற்படலம்.

மானமைந்தனே தீர்க்கசொற்பனசகம்வர்ததும்பாராமற்
போனதுநினையாமலுன்போதமாய்ப்பூர்ணமாயிரும்பாயே

(இ-ள்.) காரணம்-காரணமானது-ஞானவறிவுகாண் - ஞானத்தைய றியுமறிவாம் காரிய-காரியமானது - நாமரூபப்பேர்கள் - நாமரூபமானதி வேஷ்வரசகங்களால் - ஆனதெப்படியழிந்ததெப்படியென இவையுற்பத் தி நாசமெவ்வண்ணமென்று. ஆய்குதல் விசாரித்தல் பலனன்றுபயன ன்றும்-மானமைந்தனே-பெருமையுள்ளபுத்திரா- தீர்க்கசொற்பனசகம்_ நீண்டகனவாகியவுலகங்கள் - வந்ததும்பாராமல் - உதித்தத்தையும்விசா ரியாமல்-போனதுநினையாமல் - நசித்ததையும்விசாரியாமல் உன்போதமா ய்-உனதுஞானமாயும்-பூர்ணமாயிருப்பாய் - பரிபூரணஸ்வரூபமாயுமிரு ப்பாய்-எ-று.

(இ-ள்.) காரணமான சின்மாத்திரமாகத்தான்விளங்கின் காரியமான யாவுமஃதாகவே விளங்குமென்பதாம்.

(அ-கை.) சிந்திக்குமுறையுமதிலுக்குமத்துவிதானந்தமுங்கூறல்

அசத்திலெம்மட்டெம்மட்டும்பராமுகமாகினையம்மட்டு
நிசத்திலுள்விழிப்பார்வையாயிப்படிநிரந்தாப்பழக்கத்தால்
வசத்திலுன்மனநின்றுசின்மாத்திரவடிவமாகிடின்மைந்தா
கசத்ததேகத்திலிருக்கினுமானந்தக்கடல்வடிவாவாயே.

(இ-ள்.) அசத்தில் - திரிசியமானமித்தையில் - எம்மட்டும் - எவ்வளவு காலமிருந்தனையோ - அம்மட்டும்-அவ்வளவு காலமும் - பராமுகமாகி னாய் - பகிர்முகமானாய் - அம்மட்டும் - அவ்வளவாக---நிசத்தில் திருக் கானசத்தில்---உள்விழிப் பார்வையாய் - அந்தர்முகதிருஷ்டியாய்-இப் படி-இவ்விதம் - நிரந்தாப்பழக்கத்தால் - இடைவிடாதவப்பியாசத்தி னால்-உன்மனம் - உன்மனமானது - வசத்தினின்று - உனதுவசமாக வி ருந்து-சின்மாத்திரவடிவமாகிடின் - சைதன்னிய ஸ்வரூபமானால். மை ந்தா-மகனே - கசத்ததேகத்தில்- வெறுக்கப்பட்ட சரீரத்தில். இருக்கி னும்-நீயிருந்தாலும்-ஆனந்தக்கடல்வடிவாவாய்-பிரமானந்த சாகரஸ்வரூ பமாவாய்---எ-று.

(இ-ள்.) இங்ஙனஞ்சிந்தித்துச் சித்துருவமாவானாயி னவ்வுருவமான வானந்தஸ்வரூபமேதானாகவிளங்குவனென்பதாம். (ரகூ)

(அ-கை.) மாயையவித்தைமுதலிய சடபாவநீங்கிச் சிற்சத்தியாகிய [illegible] கணாந்தத்தான் பின்பவ்வாத்மா சச்சிதானந்தஸ்வ ரூபமென்ற [illegible] வாசிரியனைநோக்கி யங்ஙனமாயினசத்தையுஞ்சி த்தையும் பேசலொண்ணாத பேதைதன்னிடத்திற் காணப்பட்டவில்லை யெனவி னாதல்.

உண்டானவிருத்திசடிரிவிதமாம் ஆம்-ஆகின்ற அவைகள்-அம்மூன்றும் மூடமும்- மூடவிருத்தியெனவும் கோரமும் - கோரவிருத்தியெனவும்- சாந்தமும்-சாந்தவிருத்தியெனவும் அபிதானமாகும் - பெயரைப்பெறுவனவாம் மகனே-மைந்தா ஏழுறவிருக்கிற - இன்புறவிருக்கின்ற சத்திதானந்தங்கள்-சத்திதானந்தமானவைகள் என்றென்றும்-எப்போதும் ஒன்றுலுகில் - ஏகமானாலும் நாமுரைக்கும் யாஞ்சொல்லும் விருத்திப்பிரிவினுல்-விருத்திபேதத்தினுல் சொரூபஞானுதி - சித்துமுதலிய சத்தானந்தஸ்வரூபங்கள் பிறிதாகும்-பேதங்களாம். (௱௯)

(அ-கை) (இ-து.)

சடமானமூடத்தருக்கல்லுமண்களிற்சத்தொன்றுமேதோன்றுமால்
விடமானகாமாதிகோரத்திலானந்தம்விளையாதுமற்றவைகளாந்
திடமானவெழிவாதிசாந்தத்திலேசச்சிதானந்தமூன்றும்வெளியா
மடமானமூடங்கள்கோரங்கள்விடுசாந்தமனமாகிலானந்தமே.

(இ-ள்) சடமான - சடமாகிய மூடத் தருக்கல்லுமண்களில்-மரஞ்சிலை மண்களின் மூடவிருத்தியில் சத்தொன்றுமேதோன்றும் - சத்துமாத்திரந்தோன்றும் விடமான - விடரூபமான காமாதிகோரத்தில் - காமமுதலியகோரவிருத்தியில் ஆனந்தம்விளையாது- ஆனந்தமுதியாது மற்றவைகளாம்-சத்துஞ்சித்துந்தோன்றும் திடமான- உறுதியான ஒழிவொழிசாந்தத்தில்-ஒழிவுமுதலிய சாந்தவிருத்தியில் சச்சிதானந்தமூன்றும் வெளியாம் - சச்சிதானந்தமூன்றும் வெளிப்படும் மடமான - அறிவின்மையாகிய மூடங்கள்-மூடவிருத்திகளையும் கோரங்கள்-கோரவிருத்திகளையும் விடு-விடாநின்ற மனம்-மனமானது சாந்தமாகில்-சாந்தவிருத்தியைப்பெறில் ஆனந்தம்-ஆனந்தம்வெளியாம்-எ-று.

(இ-சு-க-ம்) ஆத்மசுபாவமான சச்சிதானந்தம் விருத்திபேதங்களினமறைப்பட்டதும் வெளிப்பட்டதும் போலத் தோன்றினதேயன்றியவைகளதனிடத்தில்லாத தன்றென்பதாம். (௱௰)

(அ-கை.) அச்சச்சிதானந்த விலக்கணமியாதென்ற வினுவிற்குத்தாம்.

இகமானகுருநாதனேசச்சிதானந்தமெனுமிலக்கணமறிகிலே
னகலாதசத்தாவதேதுசித்தாவதேதானந்தமேதென்றின்
மிகுகாலமூன்றுங்கெடாதிருப்பதுசத்துவேறுபாடறிதல்சித்தா
மகிழ்காமநுகர்போதுசுகமாகுமனுபூதிவாழ்வென்பதானந்தமே.

(இ-ள்.) இகமான - இம்மானிடவடிவமாக வெழுந்தருளி குருநாதனே - குருசுவாமியே - சச்சிதானந்தமெனும் - சச்சிதானந்த மென்கின்ற இலக்கண மறிகிலேன் - இலக்கணத்தைத் தெரிந்திலன் அகலாத-நீங்காத. சத்தாவதேது - சத்தென்பதியாது. சித்தாவதேது-சித்தென்பதியாது. ஆனந்தமேது - ஆனந்தமென்பதியாது. என்றிடில் - என்று கேட்பையாயின். மிகு - மிகுந்த. காலமூன்றும் - திரிகாலங்களினும்: கெடாதிருப்பது-நசியாதிருப்பது. சத்து - சத்தாகும். வேறுபாடறிதல் சிற்சடபேதங்களையறிதல். சித்தாம் - சித்தாகும். மகிழ்காமம்- மகிழாநின்ற காமத்தை நுகர்போது-அநுபவிக்கும்போது. சுகம் - இன்பத்தைப்போல. ஆகும் - ஆகாநின்ற: அநுபூதிவாழ்வென்பது-சுவாநுபூதிசுகமென்று சொல்லப்படுவது. ஆனந்தம்-ஆனந்தமாம்-எ-று.

(இ-ம்.) சச்சிதானந்தவிலக்கண மிவையெனக்கூறினதாம். (௱௰௧)

(அ-கை.) ஆத்மா சச்சிதானந்தமென்பவற்கனுபவம் வினுதல்.

நாசச்சரீரத்திருக்குஞ்சரீரிதனை நால்வேதமாவாச்கிய
நீசச்சிதானந்தமென்றிடினுமாசிரியர்நீபிரமமாகுமெனினு
மாசற்றசச்சிதானந்தநானென்ன விவன்மன்னுமனுபவமெங்ஙனே
கோசபுறங்களையிடித்துத்தகர்த்தமதகுஞ்சரக்குருநாதனே.

(இ-ள்.) நாசச்சரீரத்து - நசிக்கின்றதேகத்தில். இருக்குஞ்சரீரிதனை இருக்கின்றதேசியை. நால்வேதமாவாக்கியம - நான்குசுருதியின் முடிவிலுள்ள மகா வாக்கியங்களும். நீசச்சிதானந்த மென்றிடினும் - நீயே சச்சிதானந்த ஸ்வரூப மென்றுசொல்லினும். ஆசிரியர் - தேசிக ரூபதேசமும். நீபிரமமாகுமெனினும - நீயேபிரமமென்றுசொல்லினும். மாசற் ற - நின்மலமான. சசிதானநதம் - சச்சிதானந்தமே. நானென்ன - நானென்று. இவன் - இம்மாணக்கன். மன்னுமனுபவம் - பொருந்து மனுபவமானது. எங்ஙன் - எவ்விதம். கோசப்புறங்களை - பஞ்சகோசமாகிய மூன்றுதேகங்களையும். இடித்துத்தகாத்த-உடைத்துத் தூகலாக்கிய மதம்-மதத்தையுடைய. குஞ்சரக்குருநாதனே - யானையாகிய குருசாமியே-எ-று.

(இ-ம்) வெளிப்படை.

(அ-கை.) ஆத்மாசத்தென்பதற்கனுபவங்கூறல்.

சென்மாந்தரஞ்செய்த வினைகளுடற்றருமெனில் செல்காலமிவனுண்
டலோ. நன்மாறுபவனர்கசொர்க்கமெனில் வருகின்றகாலத்து மிவனு
ண்டலே. வுன்மாதயாதனுவுடல் கடவுளுடன் மனுடவுடன் மாறிமாறி
யழியுந். தன்மாயவுடல் கெடினுமிவனிருப்பதுகொண்டு சத்தென்பதொ
க்குமகனே.

(இ-ள்.) சென்மாந்தரஞ்செய்த - முன்செனனங்களிற் செய்த. வினைகள் - கன்மங்களானவை. உடற்றருமெனில் - தேகத்தைக் கொடுக்குமென்றால். செல்காலம் - சென்றகாலத்திலிம். இவனுண்டலோ - இப்புரு

டனிருந்தாலல்லவா. கன்மனுபவம் - இப்போது செய்தகன்ம மனுபவித்திற்குத்தக்க. நரகசொர்க்கபெனில் - இனிநரகசொர்க்கங்களையடைவனென்றால். ஒருகின்றகாலத்தும் - யெதிர்காலத்தினும். இவனுண்டலோ-இவனிருப்பானல்லவா. உன்மாதயாதனுவுடல்-உன்மத்தமாகிய யாதனுசரீரமும். கடவுளுடல் - தேவசரீரமும். மனுவுடல் - மானிடசரீரமுமாக. மாறிமாறியழியும் - மாறிமாறிநசிக்கும். தன்மாயவுடல செடினும் தனதுமித்தையாகிய தேகநசிக்கினும். இவனிருப்பதுகொண்டு-இத்தேகிகெடாமலிருப்பதினால். மகனே-மைந்தா. சத்தென்பதொக்கும் - இவனே சத்தென்னுமனுபவமொக்கும்-எ-று.

(இ-ம்.) தேகமுதலியவை கணசிக்கினுந் தானசியாமல் மூன்றுகாலங்களினுமிருந்தலினுத்மாவே சத்தென்பதாம். (௫௰௩)

(அ-கை.) ஆத்மாசித்தென்பதற்கு மானந்தமென்பதற்கு மனுபவங்கூறல்.

இருளாகமூடுஞ்சுழுத்தியிலிராத்திரியிலிரவிசுடாற்றபொழுது
மருளாமலிருளையும் பொருளையுந் தெரிகின்றவகைகொண்டு சித்தாகுமே
பெருவாழ்வுமிக்கதானே தன்னிடத்தினிற்போராதபிரியமதனு
லருகாதபிரியஞ்சுகத்தில்வருமாதலாலானந்தமாமைந்தனே.

(இ-ள்.) இருளாகமூடுஞ்சுழுத்தியில்-அந்தகாரமாகமூடிக்கொள்ளுஞ்சுழுத்திய வத்தையிலும். இராத்திரியில் - இரவிலும். இரவிசுடாற்றபொழுதும் - சூரியப்பிரகாசமில்லாதபோதும். மருளாமல - மயங்காமல். இருளையும் - இருட்டையும். பொருளையும் - வஸ்துக்களையும். தெரிகின்றவகைகொண்டு - காண்கின்றவகையினால். சித்தாகும் - இவனே சித்தாகும் பெருவாழ்வுமிக்க-பேரானந்தமிகுந்த. தானே தன்னிடத்தினில் - தானேதன்னிடத்தில். போராதபிரியமதனால் - நீங்காதபிரியமுடைமைப்பதனால். அருகாதபிரியம் - குறையாதபிரியமானது. சுகத்தில் வருமாதலால்-தனதுசுகத்தில்வருவதனுடைமையாதலால். மைந்தனே -மகனே. ஆனந்தமாம்-இவனேயானந்தமாவான்-எ-று.

(இ-ம்.) ஆத்மாவறிவுடையானமையின் வியறிவாயிருந்தறிதலிற்சித்தும்விடயங்களனைத்தினுமுள்ள பிரிய நீங்கினுந் தனது பிரிய நீங்காமையினானந்தமு மாமென்பதாம். (௫௰௪)

(அ-கை.) சுகசாதனங்களிற் பிரியமிருப்பதுபோல்-வாத்மாவிலும் பிரியமிருத்தலினஃதானந்தத்திற்குச் சாதனமாகாதோ வெனிலங்ஙனமாகாவென்பதற் கனுபவங்கூறல்.

அன்னபனுதிசுகசாதனமதாகையாலதற்கும் வெகுபிரியமாகு. மின்ன
வாறுன்மாவுமானந்தசாதனமெனக்கருதல்பொருளல்லவே. சொன்னவான்
மாவையொருசுக சாதனங்களொடு சொல்லுவாயாகின்மகனே. யுன்னதா
னந்தம் வேறேயனுபவிப்பதா ரீதுபயவான்மாவுமுளவோ,



(இ-ள்.) அன்னபனுதி - உண்பன ருருகுவன முதலியவைகள். சுகசாதனமதாகையால் - சுகத்துக்குசாதனமாகையால். ஆர்க்கும் - யாவர்க்கும். வெகுபிரியமாகும் - மிகுந்தபிரியமாம். இன்னவாறு - இவ்வண்ணம். ஆன்மாவும்-ஆத்மாவும். ஆனந்தசாதனமென்று-ஆனந்தத்துக்குச்சாதனமென்று. கருதல்பொருளல்லவே-நினைப்பதருத்தமல்லவே. சொன்னவான்மாவை-சொல்லிய வாதமஸ்வருபத்தை ஒருசுகசாதனங்களோடு-ஓர்சுகசாதனங்களோடுங்கூட. சொல்லுவாயாகின்-சொல்லுவையாகில். மகனே-மைந்தா. உன்னதானந்தம்-வுன்னதானந்தமானது. வேறே-உன்னைவிட வேறே. அனுபவிப்பதாம் - அனுபவிப்பதாகிய. உபயவான்மாவுமுளவோ-இரண்டாதமாவுமுண்டோ-எ-று.

(இ-ம்.) சாதனமிறந்துசாத்தியமான விடத்திற்சேடித்த நிரதிசயானந்தம்வேறு மஃதனுபவிக்கும் மாத்மாவேறு மின்றாதலி னவ்வாதமானேவ னந்தமாவதன் றியதற்குச் சாதனமாகாதென்பதாம்.

(அ-கை.) ஆத்மாவானந்தஸ்வருபமாயி னெதிரிட்டனு பவிக்குமானந்த மஃதாகாதோ வென வரினஃதுவிடய னந்தமாதலி னாகா வென்பதற்கனுபவங்கூறல்.

விடயசுகமதில்வருதல் பிரியமாத்திரமாகும் வெகுபிரிய மான்மாவி
லாம். விடயசுகம் தில் வருபிரிய மாறிவருமான்மாவில் வெகுபிரியமாறுதுகா
ண் - விடயசுகத்தினிலுமாங் கொள்ளுமாமான்மாவை விடுவ தெவர் கொள்
ளதெவர்பார். விடயசுகபோகங்கள் விடுமவனையவனால் விடப்படாதொ
ருநாளுமே.

(இ-ள்.) விடயசுகமதில்-விஷயானந்தத்தில். வருதல்பிரியம் - இன்பமுண்டாதல். மாத்திரமாகும்-அற்பவளவாம். ஆன்மாவின்-ஆத்மாவினிடத்தில். வெகுபிரியமாம்-மிகுந்தபிரியமாகும். விடயசுகம் - விடயானந்தத்தில். வருபிரியம்-உதிக்கின்றபிரியமானது. மாறிவரும்-மாறிமாறியுண்டாகும். ஆன்மாவில் - ஆத்மாவிடத்துள்ள வெகுபிரியம் - மிகுந்தபிரியமானது. மாறுதுகாண்-விட்டுநீங்காது. விடயசுகம்-விடயானந்தமானது. விடலுமாம் - விட்டுவிடவுமாம். கொள்ளுமாம் - கொள்ளவுமாம் ஆன்மாவை-ஆத்மானந்தத்தை. விடுவதெவர்-விடுகின்றவர்யார். கொள்வதெவர்-கொள்ளுகின்றவர்யார். பார்-நன்றாகப்பார். விடயசுகபோகங்கள்-விடயானந்தானுபவங்களை. விடுமவனை-நீக்கினமவ்வாத்மாவை. ஒருநாளும்-எக்காலமும். அவனால்விடப்படாது - அவ்வாத்மாவினால் விடக்கூடாது-எ-று.

(இ-ம்.) விடயவின்பங்களனைத்து மாத்மப்பிரியலேச மாதலினஃது நசித்துமிது நசியாதிருத்தலிவை வானந்தவாதமார்த்தகாமா வென்பதாம்.

(அ-கை.) ஆத்மாவானந்தவடிவமாகின னதனிடத்தில் வெறுப்பிருக்கின்றதேயெனி லங்ஙனமின்றென்பதற் சனுபவங்கூறல்.

வேகின்றகோபங்களா லென்னைநான்கொன்று விடுகிறே னென்
றுசிலபேர்: சாகின்றபடியினுற் றன்னையேதான்கொன்று சாவனெனல்
சங்கையலவே. தேகந்தனைக் கொல்லு மவனல்விடப்பட்டதேசாவனல்
லன்மகனே. யாகந்தனிற் கோபமலதுதனை யொருநாளுமான்மா வெறு
ப்பதிலையே.

(இ-ள்.) வேகின்றகோபங்களால்-வேகாநின்றகோபங்களால். என்னை தன்னை. நான்கொன்றுவிடுகிறேனென்று - நான்கொல்லுகின்றேனென்று. சிலபேர்-சிலர். சாகின்றபடியினல்-இறக்கின்றமையினல். தன்னையேதான்கொன்று - தன்னைத்தானே கொலைசெய்துகொண்டு. சாவனெனல் - மரிப்பானென்பது. சங்கையல - அங்ஙனஞ்சங்கிப்பது சங்கையன்றும். தேகந்தனைக்கொல்லும்-உடலைக்கொல்கின்ற. அவனல் அப்புருடனல். விடப்பட்டதேகம்-நீக்கப்பட்டதேகமானது, அவனல்லன்-அவ்வாதமாவலனும் மகனே-மைந்தா. ஆகந்தனில் - தேகத்தில். கோபமாவது-கோபம்வந்ததேயல்லாமல் தனை-ஆத்மாவை- ஒருநாளும்-எப்போதும். ஆத்மவெறுப்பதில்லை-ஆத்மாவானவன்வெறுப்பதில்லை-எ-று.

(இ-ம்) ஆத்மாதற்பிரியத்திற்குறைவுவாமற்தேகத்தைநீக்கினதேயன்றித்தன்னிடத்தில் வெறுப்புண்டான தல்லவென்பதாம். (௱௰௭)

(அ-கை.) தனவானந்தமுதலியவானந்தங்களாத்ம வெனவருமெனில் அங்ஙனமைகாவெனக்கூறி யாத்மானந்தமே முக்கியமெனக்கூறல்.

தாகப்படும்பொருளிலும்மகன் பிரியமாந்தநயனிலு முடல்பிரியமா
மாகத்திலும்பிரிய மிந்திரியமாங்காண மதனிலும்பிரியமுயிரா- மேசப்பி
ராணனிலும் வெகுபிரியமான்மாவி லிந்தவான்மாமுக்கிய- மூகத்தினுற்
கௌண மித்தைகர்த்தாமூன்றுமொன் றினென்றதிடமகனே.

(இ-ள்.) தாகப்படும்பொருளிலும்பிரியமாகச்சம்பாதிக்குந் தனங்களிலும். மகன் பிரியமாம்-புத்திரன்பிரியமாகும் தநயனிலும்-அப்புத்திரனிலும். உடல்பிரியமாம்-தேகம்பிரியமாகும். ஆகத்திலும்-அத்தேகத்திலும். இந்திரியம்-பொறிகளானவை. பிரியமாம்-பிரியமாகும். அதனிலும்-அவ்விந்திரியங்களிலும். காணம்பிரியம்-அந்தக்காணம்பிரியமாம். அதனிலும்-அவ்வந்தக்காணங்களிலும் உயிர்சீவனனது. பிரியமாம்-பிரியமாகும். ஏகப்பிராணனிலும்-ஒன்றானவச்சீவனிலும். ஆன்மாவில்-கூடஸ்தனிடத்தில். வெகுபிரியம் - மிகுந்தபிரியமாதலால். இந்தவான்மாமுக்கியம்-இவ்வாத்மாவேமுக்கியமாம். மகனே-மைந்தா. ஊகத்தினல்-உத்தியினல், கௌணம்-கௌணாத்மா. மித்தை-மித்தையாத்மா. கர்த்தா-காத்தாத்



மாவாகிய மூன்றும்-மூன்றும். ஒன்றினென்றதிகம்-ஒன்றினென்றதிகமாம்-எ-று.

(இ-ள்) தனமுதலியவாறினும் வைககின்றபிரியங் கௌணமெனவுமாத்மப்பிரியமே முக்கியமெனவுங் கூறினதாம். (௱௰௮)

(அ-கை) ஆத்மனந்தமே முக்கியமாயின் புத்திரன்முதலிவைகளாத்மாவெனவு மவைகண்முக்கிய மெனவுங்கூறிய தென்னென வினதற்குத் தாங்கூறல்.

கெடலானபொழுதிவன்காணிக்குமகனைகௌணவான்மாமுக்கியம்
விடலாதவுடலம்பரிக்குநாளுடலானமித்தையான்மாமுக்கியந்
திடமானநன்மையதிவேண்டினற்கர்த்தனஞ்சீவவாமாமுக்கியஞ்
சடமாயுமுத்தியினில்ஞானவான்மாவானதானேமகாமுக்கியம்.

(இ-ள்.) கெடலானபொழுது-மாணகாலத்தில். இவன்காணிக்கு-இவனுநீனத்துக்குவேண்டிய. மகனை-புத்திரனை கௌணவான்ம-கௌணவான்மா-கௌணத்மாவே. முக்கியம்-அத்தருணத்துக்கு முக்கியமாம், விடலாதவுடலம்பரிக்குநாள்-நீங்காததேசத்தை தாங்குகின்றநாளில் உடலான-அத்தேக மனமித்தையான்மா-மித்தையாத்மாவானது. முக்கியம்-அத்தருணத்துக்கு முக்கியமாம். திடமானநன்மைகதி-பலமாகிய நல்லகதியை வேண்டினல் விரும்புங்காலத்தில். கர்த்தனுஞ் சீவவான்மா-நானென்னுஞ்சீவாத்மாவானது. முக்கியம்-அத்தருணத்துக்கு முக்கியமாம். சடமயுமுத்தியினில்-திரிசியங்கணீங்கிய மோட்சத்தில். ஞானவான் மாவான்தானே-ஞானத்வஸ்வரூபமாகியதானே. மகாமுக்கியம்-மிகவு முக்கியமாம்-எ-று.

(இ-ம்) புத்திரன் முதலிய மூன்றையு முக்கியமாத்மாவென்றது ஒவ்வோர் சமயத்தாதலாற் பூருவபட்சமும் ஆத்மாவை முக்கியமென்றதென்றுமாதலாற் சித்தாந்தமுமாமென்பதாம் (௱௰௯)

(அ-கை) விருப்புமுதலிய மூன்றுநீங்கிய வானந்தமே யாத்மஸ்வரூபமாமெனல்

புலியுமனுகூலமெனி லிட்டமாம்பகைசெயிற் புதல்வனெனிலும்
வெறுப்பா- முலகிலிருவகையுமல் லாதபுல்லாதிவிலுதா சீனமாதலான்
மலினமறுசின்மயன் பல்வகையுமிப்படி மகிழ்ச்சியில் விருப்பமிகழா
னலகிலானந்தவடி வாகுமென்சொரூபத்தை யாராய்ந்துபார்மைந்தனே

(இ - ள்) புலியும் - வியாக்கிரமும் - அநுகூலமெனில் - அநுகூலஞ் செய்யுமாயின் - இட்டமாம் - சிநேகமாகும் - புதல்வனெனினும் - புதல்வனெனினும் - பகைசெயில் - பகைக்கின் - வெறுப்பாம - துவேஷமாம் - உலகில் - பூமியின்கண் - இருவகையுமல்லாத - இவ்விரண்டுமல்லாத - புல்லாதியில் - திணமுதலியவைகளில் - உதாசீ

னமாம் - உபேகைஷபாம்-ஆதலால் - ஆதலினால்-மலினமறு - களங்கமற்ற - சின்மயன் - ஞானஸ்வரூபனானவன் - பல்வகையும் - நாநாவிதத்திலும் - இப்படி - இவ்வண்ணம் - மகிழ்ச்சியில்-ஆத்மாநந்தத்தில் - விருப்பமிகழான்-பிரியத்தைநீங்கான் - அளவில் - அளவற்ற-ஆனந்தவடிவாகும்-பிரமனந்தஸ்வரூபமாகிய-உன்சொரூபத்தை - உன்தாத்மஸ்வரூபத்தை-மகனே-மைந்தா-ஆராய்ந்துபார்-ஆராய்ந்தறிவாய்-எ-று

(இ-ம்) விருப்பவெறுப்புவுதாசீனமாகிய மூன்றுமாத்மாசுகத்திற்கு மாறுபடுதலினாலும்-மிவைகளின்மியவச்சுக மாறுபடாதிருத்தலினாலு மிவ்வானந்தமே யாத்மஸ்வரூபமென்பதாம்-இஃது மேற்கூறும்அஷ்டவிதானந்தத்தொன்றான் ஆகமானந்தமெனக்கொள்க. (௧௨௰)

(அ-கை) ஆத்ம நிரதிசயானந்தமென்ப தனுபவமாம்பொருட் டதிசயனந்தமென விதமாகக் கூறுவான்றொடங்கி யானந்த மெத்தனைவகையென்ற வினாவிற் குத்தரங்கூறல்

மனஞ்சிறந்தகுருநாதனே யானந்தவகைகளெத்தனை யென்னிலோ ஞானத்திகழ்ந்த பிரமானந்தம் வாசனானந்தம் விடயானந்தமென் றானந்த மூன்றுவிதமெட்டுவகை யென்பர்சிலரவவைந்து மிதிலடக்கம் யானந்த வகைசொலக்கேண் மைந்தனேயெட்டு மிஃதின்ன தின்னதெனவே.

(இ-ள்) மனஞ்சிறந்த - பெருமைமிகுந்த - குருநாதனே - தேசிகோத்தமான - ஆனந்தவகைகள் - ஆனந்தப்பிறிவுகள் - எத்தனையென்னில் - எவ்வளவென்று கேட்பாயாகில் - ஞானமகிழ்ந்த - சித்துவிளங்கிய-பிரமானந்தம்- பிரமானந்தமெனவும் - வாசனானந்தம்-வாசனானந்தமெனவும்- விடயானந்தமென்று - விஷயானந்தமெனவும் - ஆனந்தம்-ஆனந்தமானது-மூன்றுவிதம் - மூன்றுவிதமாம் - சிலர்-சிலபெரியோர்கள்-யெட்டுவித மென்பார் - அஷ்டவிதமென்றுஞ் சொல்லுவார்கள் - அவவைந்து மிதிலடக்கலம் - அவ்வைந்து மிம்மூன்றிலடக்கமாம் - யெட்டும்-அதிஷ்ட விதானந்தமும்- இஃதின்ன தின்னதென - இஃதின்ன தின்னதென்றும் - யானந்தவகைசொல - நானப்பகுப்பைச் சொல்ல-மைந்தனே-மகனே-கேள்-நீ கேள்-எ-று

(இ-ம்) பிரமனந்தத்தில் ஆத்மானந்தமும் முக்கியனந்தமும் நிசானந்தமும் அத்துவிதனந்தமும் ஞானனந்தமுமான வைந்துமடங்கி யிருக்கின்றதென்பார் அவ்வைந்து மிதிலடக்கமென வொருமையாகக் கூறினார்.

இ-ப. ஆனந்தத்தின்றொகை முக்கியபட்ச மூன்றெனக்கூறினதாம்

(அ-கை) அவ்வஷ்டவிதானந்தத்தின் வகைகூறல்



போகத்தில்வருசுகம்விடயசுகநித்திரைப்போதுளதுபிரமசுகமா
மோகத்தனந்தலிச்சுகம்வாசனைச்சுகமுழுப்பிரியமான்மசுகமாம்
யோகத்திலுளது முக்கியசுகமுதாசீனமுற்றசுகநிச்சுகமதாம
மேகத்தைநோக்கலத்துவிதசுகம்வாக்கியமெழுந்தசுகஞானசுகமே.

(இ-ள்.) போகத்தில்வருசுகம் - போகங்களில்வருகின்ற வனந்தம். விடயசுகம் - விடயானந்தமாம. நித்திரைபோதுளது - சுழுத்திகாலத்துள்ளவாநந்தம்.பிரமசுகமாம்-பிரமானந்தமாம்:மோகத்தநந்தலிற்சுகம் மயக்கமாகியநித்திரைதெளிந்து வருஞ்சமயத்துள்ளவானந்தம். வாசனைச்சுகம்-வாசனானந்தமாம். முழுப்பிரியம்-முழுதுஞ்சுகமாயிருத்தல்-ஆன்மசுகம்)ஆத்மானந்தமாம்-யோகத்திலுளது-சமாதியிலுள்ளசுகம்-முக்கியசுகம்-முக்கியானந்தமாம்-உதாசீனமுற்றசுகம்- உதாசீனத்திலுள்ளவானந்தம-நிச்சுகமதாம்-நிசானந்தமாம்-ஏகத்தைநோக்கல்பூரணதிருஷ்டியிலுள்ளசுகம-அத்துவிதசுகம-அத்துவிதநந்தமாம்-வாக்கியமெழுந்த சுகம் - மகாவாக்கியார்த்தத்திலுதயமாநவாநந்தம்-ஞானசுகம் - வித்தியாநந்தமாம-எ-று.

(ப-ம்) ஞேபத்திலுதிக்குமின்பமென்பார் போகத்தில் வருசுகமெனவும் நனவிறசுழுத்தியிலுள்ளது பிரமசுகமென்பாற நித்திரைப்போதுளதுபிரமசுகமெனவுங்கூறினார்.

(இ-ம்) சுருக்கமான வருத்தத்துடனவ்வாநந்தங்களி னமங்களைக்கூறினதாம். (௱௨௨)

(இ-கை) அவற்றில்விடயானந்தவிலக்கணங்கூறல்.

இவ்வாறுரைசெய்தசுகபேதங்களினியல்பாமவைசொல்மகனேகே
ளொவவானனவினிலுழல்வானிடர்கெடுறங்குஞ் சயனத்து றுநேரம்
செவ்வாமனமகமுகமாமதிலொளிர்சித்தின்சுகநிழல்சேருங்கா
ணவ்வாறினிமகிழ்வாமனுபவமதுதான்விடயசுகாநந்தம்.

(அ-ள்) இவ்வாறு - இந்தப்பிரகாரம் - உரைசெய்த - சொல்லிய - சுகபேதங்களின் - ஆனந்தபேதங்களின் - இயல்பாமவைசொல-இயல்பாஇயல்பாநதன்மைகளைச்சொல்ல-மகனேகேள்-மைந்தாகேட்பாய்-ஒவ்வாஇன்பம்பொருந்தாத-நனவினில்-சாக்கிரத்தில்- உழல்வான் - சுழல்பவனுடைய-இடர்கெட-துன்பம்நீங்குமபொருட்டு-உறங்குஞ்சயனத்திலுறுநேரம்-படுக்கையினித்திரைசெய்யுஞ்சமயத்தில்-செவ்வாமனம் - செவ்விதாமனமானது-அகமுகமாம்-அகமுகப்படும-அதில்-அம்மனத்தில்- ஒளிர் பிரகாசிக்கின்ற-சித்தின்சுகநிழல்-சித்தானந்தசாயையானது -சேருங்காண்-சேரும்-அவ்வாறு-அவ்வண்ணம்-இவனுளம-இவன்மனமானது-மகிழ்வாமனுபவம்-மகிழ்ச்சியாகமனுபவமான-அதுதான்-அதுவேவிடைய சுகானந்தவிடையநந்தமாம்-எ-று.

(ப-ம்) அறிவறியாமையிற்சுழலும் பவத்துன்ப நீங்கும்பொருட்டுச் சமாதியினகமுகமாய் மனஞ்சித்தைத்தருசிக்கிற் சிற்சுகமுண்டாகுமென்பார் நனவினுழல் வானிட கெட வுருக்குஞ் சயனத்திலுறு நோஞ் செல்வாமனமகமுகமாமதிலொளிர் சித்தின் சுக நிழல்சேருங்காணென வும் அங்ஙனமகிழ்தல் ஞேயானந்தமென்பார் அவ்வாறிவனுளமகிழ்வா மனுபவமதுதான் விடயசுகானந்த மெனவுங்கூறினர்.

(இ-ம்) சமாதியிலகமுகமாகச் சென்றறியுமிடத்துண்டானது பிரமசுகமாயினுமஃதை யெதிரிட்டறிந்துமனமகிழ்தலி னச்சுகம்விடையானந்தமாயிற்றென்பதாம். (௱௨௩)

(அ-கை) பிரமானந்த விலக்கணங்கூறல்

ஈனந்தருசுகவிடயந்திரிபுடியிடாமெனமனமசையாமற்
சேனந்தன துகுலாயந்தனில்விழுசெயல்போனித்திரைசெறிசிவன்
றனந்தமில்பரனுடனென்றுவனொருதனியல்லதுபிறவினையாம
லானந்தமயமாவான்சுகமிகுமதுதானுயர்பிரமானந்தம்

(இ-ள்) ஈனந்தரு-குறைவைக்கொடுக்கின்ற - சுகவிடயம்-விஷயசுகமானது-திரிபுடியிடாமென-திரிபுடியானதுன்பமாமென்று மனமசையாமல்-மனஞ்சலியாமல்-சேனம்-பருந்தானது-தனதுகுலாயந்தனில்-தனதுகூண்டில்-விழுசெயல்போல்-அடங்குந்தொழிலைப்போல-நித்திரைசெறிசிவன்-நித்திரைசெய்கின்றசீவனானவன்-அந்தமில்-முடிவிலாத -பானுடனென்றுவன்-பிரமத்தோடுங்கூடுவன்-ஒருதனியல்லது-ஒப்பத்தன்னையல்லாமல்-பிறிவினையாமல்-வேறுகருகாமல் ஆனந்தமயமாவான் - ஆனந்தாகாரமாவான்-சுகமிகுமதுதான்-சுகமிகுந்தவவானந்தமே-உயர்பிரமானந்தம்-மேலானபிரமானந்தமாம்-எ-று.

(ப-ம்) பிரமத்தையெதிரிட்டறியன் அறிபவன் அறிவு அறிபொருளென மூன்றுமதனுற் றுன்பமாமென்பார் ஈனந்தருசுகவிடயந் திரிபுடியிடாமெனவும் மனதையடைக்கிச் சொரூபசமாதிசெய்கின்ற வாத்மா பிரமத்திற் கலக்குமென்பார் மனமசையாம நித்திரை செறி சிவன்றனந்தமில்பானுடனென்றுவனெனவும் அங்ஙனம்பிரமத்திற்கூடிய வாத்மாவப்பிரமானந்தமாக வானந்திப் பானென்பார ஒருதனியல்லது பிறவினையாமலானந்தம் மயனுவெனெனவும் இஃதே போனந்தமென்பார் சுகமிகுமதுதானுவா பிரமானந்த மெனவுங் கூறினர் நித்திரையென்ப தறிதுயிலெனக்கொள்க. (௱௨௪)

(அ-கை) (இ-து)

தூங்குஞ்சுகமது பிரமச்சுகமெனல் சுருதிப்பொருள் விழிதுயில்வோர்க டாங்குமலரணை நன்றாகச்சிலர் சம்பாதிப்பது தானசுக



நீங்குக் நன்மையுமாண் பெண் முறைமையுந் தெரியாதமளி செய்பொழுதேபோ, லாங்குள் வெளிகளு மறியாவனுபவ மதனாலதுபிரமானந்தம்.

(இ-ள்) சுருதிப்பொருள் - வேதமுடிவானமகாவாக்கியார்த்தத்தில் தூங்குஞ்சுகமது - அறிதுயிலுதயமான வானந்தமானது - பிரமச்சுகமெனல் - பிரமானந்தமென்று கொள்ளல், விழிதுயில்வோர்கள்-நித்திரை செய்பவர்கள் தாங்கு மலரணை - தாங்காநின்ற புஷ்பசயனத்தை, நன்றாக - நல்லதாக - சிலர் - சிலபேர்கள் - சம்பாதிப்பது-சேகரிப்பது, தானசுகம் - ஸ்தானசுகமாம்-நீங்கும்-நீமையும் - நன்மையும்-நன்கும்-ஆண்பெண்முறைமையும் - ஆண்பெண்ணென்கிற முறைமையையும்-தெரியாது-அறியாமல்-அமளிசெய்பொழுதேபோல் - நித்திரைசேய்கின்றகாலத்தைப்போல-ஆங்கு-அவ்விடத்து-உள்வெளிகளுமறியா - அகம்புறங்களுமறியாத-அனுபவமதனால் - சுவானுபவமாதலால்-அதுபிரமானந்தம்-அவ்வறிதுயிர் பிரமானந்தமாம்-எ-று.

(ப-ம) வேதமுடிவானமகாவாக்கியார்த்தஉபதேசத்தில்ரமிக்கும்யோக நித்திரையே பிரமானந்தமென்பார் தூங்குஞ்சுகமதுபிரமச்சுகமெனல் சுருதிப்பொருளெனவும் அங்ஙனஞ்சமாதி யடைதற்குச் சாதனமான ஞானபூமி முதலியவைகளைப் பெற்றோ காந்தமா யிருந்ததே யிடமென்பார் துயில்வோாக டாங்குமலரணை நன்றாகச்சிலர் சம்பாதிப்பது தானசுகமெனவும் - அகம்புறமின்றிப் பரிபூரணமாக விளங்கும்போதுள்ள சுகமே பிரமானந்த மென்பார் உள்வெளிகளுமறியா வனுபவ மதுவே யுயர் பிரமானந்த மெனவுங்கூறினர்.

(இ-உ-க-ம்) சுழுத்தியைப்போலச் சமாதியிலகமுமமா யாத்மா பிரமத்திற் சோ்ந்ததன்மயமாய்ச் சுகத்தையனுபவித்தலி னஃதுபிரமானந்த மாயிற்றென்பதாம். (௱௨௫)

(அ-கை) சித்திற்சுகம்விளங்கு மனுபவந்தெரிவான் அறிவின்றியவானந்த வறிவிலெங்ஙனந் தோற்றுமென்றிடையின் வினுதல்

உதவும்புவியினி லொருவன்னனுபவ மொருவன் மனதினுதியாதே-மதியுங்கெடுகிறதுயில் கொண்டானந்த மயனன்றோ சுகமுறுகின்று - னிதுவிஞ் ஞானமயனுஞ் சிந்தையினினைவாய் வந்திடுமெனலகண்டேன்-சுதை விண்ணோர் புகள்குருவே நீரிது சொல்லீர் சகலமும்வல்லீரோ.

(இ-ள்) உதவும்புவியினில்-முத்திக்குச் சகாயஞ்செய்யு மிப்பூமியில், ஒருவனுபவம்- ஒருவனுக்குதிக்கு மனுபவமானது - ஒருவன் மனதினில்- வேறொருவன்மனதினில் உதியாதே-உண்டாகாதே-மதியுங் கெடுகின்ற-அறிதலுமிறக்கின்ற - துயில்கொண்டுயோக - நித்திரையைக்கொண்டு-ஆனந்தமயனன்றோ - ஆனந்தகார னல்லனோ சுக முறுகின்றுன்

பரமசுகத்தையடைகிறான் - இது - இச்சுகமானது விஞ்ஞான மயனும்-விஞ்ஞானவடிவமாகிய-சிந்தையில்-மனதில் - நினைவாய்வெந்தி டுமேனல்-நினைவாகவருமென்பது - கண்டேன் - அயிந்தேன் - இஃதெங்ஙனங்கூடும்) சுவைவிண்ணோர்புசும் - அமிர்தபானஞ்செய்யுந் தேவர்கட்டுதிக்கானின்ற-சகலமும்வல்லமீர்-சமஸ்தவல்லமையுமுள்ள, குருவே- தேசிகரோ-மீர்-கூவிர்-எ-று.

(௱௨௬)

(இ-ப்) வெளிப்படை.

(அ-கை.) அவ்வினாவிற்குத்தரம்.

நெய்யும்வெண்ணையுமிருபேர்களுமாம் நினைவிற் பிறிவொன்றினிலில்லை - செய்யுந்தானவினிலிறுகும்மனதொடுசேருஞ் சின்மய விஞ்ஞானன் னைபுகுந்துயர்மான கழுவும் பொழுதுணர் ஞானசு சுக முறுமானந்தன் பெய்யுந்துளிகளு நீருங்குளமொடுபாருமபோலிவர்பிறிவன்றே.

(இ-ள்) நெய்யும் வெண்ணெயும்-நெய்யென்பதுவும், வெண்ணெ யென்பதுமாகிய, இருபேர்களும்-இரண்டுநாமங்களும்-அறி - நினைவிற்பிறிவு-நாமரூபமாகவருகின்ற மனதிற்பேதமேயன்றி - அறிவினிலில்லை - அவற்றின் சுவைபைக்கொள்ளுகின்ற வறிவினிடத்தில்லை - செய்யுந்தானவினில் கிரியையைச் செய்கின்ற சாக்கிரத்தில்-இறுகும்மனதொடு - ஸ்திரமான மனதோடும்-சேரும்-சேருகின்ற - சின்மயவிஞ்ஞானன் - சின்மாத்திரமான விஞ்ஞானமயனும்- நையுந்துயாமனம் - வருந்துகின்ற துன்பமுள்ளமனது-கழுவும்பொழுது-நீங்குங்காலத்தில், உணர்ஞானச்சுகம்-அறிகின்ற ஞானானந்தத்தை-அறுமானந்தன்-அனுபவியாநின்ற வானந்தமயனுமாகிய- இவர்இவர்கள்-பெய்யுந்துளிகளுநீரும் - பொழியாநின்ற விந்துவுஞ்சலமும்-குளமொடுபாரும்போல-குளமுங்கரையும்போல - பிறிவன்று-வேறல்லர்-எ-று.

(இ-ம்) அறிவிறந்துதிக்கு மானந்தாகதெளிவாக விளங்குதலினனும ஆனந்தத்தினின்றுதிக்கு மறிவுசுகமாயிருத்தலினனும் இச்சிற் சுகமனுபவத்திலொன்றுதலினறிவில் வருமென்பதாம் இஃதைக் குருமுகமாகச் செய்யுஞ் சகசநிட்டையிற்காண்க.

(௱௨௭)

(அ-கை) அங்ஙனமாயின்பிரமானந்தமயமாகநின்றுவிடாமல் வெளியில்வருவானேனென்ற வினாவிற்குத்தரமும் வாசனானந்தவிலக்கணமுங் கூறல்.

ஒன்றாகியபிரமானந்தன்சுகமொழிவானேனென் வெளிவருவானேனென்றான்முன்செய்த கருமம்வெளியினி லிழுக்குஞ்சுழுத்தி விட்டெழுந்தோனு- நன்றாயினசுகமகலான் வெளியினு நடவான்மறதியும் பெறமாட்டா- னன்றுமெனவிருந்துறங்குஞ்சிலகன்மமது வேவாசனை யானந்தம்.

(இ-ள்) ஒன்றாகிய பிரமானந்தன் - ஏகமாகிய பிரமானந்தன் - சுகமொழிவானேனென்-தனதானந்தத்தை நீங்குவானேனென்- வெளிவருவானேனென்றால்- வெளிப்படுவானேனென்றுகேட்கில் - முன்செய்த கருமம் முன்னைநாட்செய்த கிரியையானது - வெளியினிலிழுக்கும் - வெளியினிற்கொண்டுவரும்-சுழுத்திவிட்டு-சுழுத்தியினின்று- எழுந்தோனும்-வெளிப்பட்டவனும்-நன்றாயினசுகசாசன்-நன்மையான சுகத்தை நீங்கான்-வெளியினுநடவான்-கிரியைத்திலும்வாரான்- மறதியும்பெறமாட்டான்-மறதியையுமடையான் - அன்றுமெனவிருந்து - அல்லவென்வுமாமென வுநின்று-உறங்கும்-நித்திரைசெய்கின்ற - சிலகன்மம் - சிலகன்மமாகிய அதுவே-அதுதான்-வாதனையானந்தம்-வாசனானந்தமாம்-எ-று.

(இ-ம்) ஆனந்தமயத்தினின்றும் விஞ்ஞானமயத்தில் வருதல் சகசநிட்டையையும் பிராரத்தவகன்மானுபவத்தையுங்குறித்தெனவும் துயிலைப்போலச் சமாதியினின்றுநீங்குஞ்சமயத்திற்பிறமானந்தசமஸ்காரத்தோடும் வருதலினச்சுகம் வாசனானந்தமாயிற்றெனவுங்கூறினதாம். (௱௨௮)

(அ-கை) நிசானந்தவிலக்கணங்கூறல்

அந்தக் சணமுடலக மென்றிடர்களி லலைந்தே சுகந்தனை மறந்தே போ-முந்தைச்செயும் வினைசுகதுக்கந்தருமோனந்தருநடுவேடிவேகா-ணெந்தப்புருடனுமொரு சிந்தையுமறவிருந்தே னெனலனுபவமாகு - மிந்தப்படிதனுதாசினச்சுகமிதுவே நிசமெனுமானந்தம்.

(இ-ள்) அந்தக்சணம் - நினைந்தவப்போதே - உடலகமென்றுதேசத்தை நானென்று இடர்களிலலைந்து - துன்பங்களிற்சுழன்று - சுகந்தனை ஆனந்தத்தைமறந்தேபோம் - மறந்துவிடும் - முந்தைச்செயுமவினை-முன்செய்யுங்கன்மமானது - சுகதுக்கந்தரும் - இன்பதுன்பங்களைக்கொடுக்கும்-மோனந்தரும் - மகாமௌனங்கொடுப்பது நடுவேடிவேகாண - மத்தியத்தஸ்வரூபமேயாம் - எந்தப்புருடனும் - எத்தன்மையானபுருஷனும் ஒருசிந்தையுமற - ஒருநினைப்புமின்றி - இருந்தேனெனல் - இருந்தேனென்பது - அனுபவமாகும் - அனுபவமாம் - இந்தப்படி - இப்படியான தனுதாசினச்சுகம் - தனதாசினத்திலுண்டான வானந்தமாம் - இதுவே இதுதான்-நிசமெனமானந்தம்-நிசானந்தமாம்-எ-று.

(இ-ப்) சமாதியில் விருப்புவெறுப்பின்றிச் சமாசமான வுண்மையாயிருத்தலினச்சுக நிசானந்தமாயிற்றென்பதாம் - இஃதை முக்கியானந்தமெனக்கூறுவாருமுளர். (௱௨௯)

(அ-கை) முக்கியானந்தவிலக்கணங்கூறல்.

நிசமானது முக்கியமோகுடத்துள்ளநீரன்றேவெளியிரந்தான்
வசமாமகங்காமறைந்தானிசமதுபடிந்தான்முக்கியவகையாகுந்
திசையார்திரிசயமறியாதேதுயில்செறியாதேபுலரிபோலே
யசையாதேமதிநிலைமையாகிய நிலையதுதான்முக்கியவானந்தம்.

(இ-ள்) நிசமானதும் - நிசானந்தமானதும் - மூக்கியபோசமூக்கியான ந்தமோவெனில் - குடத்துளாகீரன்றே - கலத்துக்குள்ளிருக்குஞ்ஜலமல்லவா) வெளியீரந்தான் - புறம்பிலிருக்கின்றவீரம் (அதுபோலவசயாமகங்காமறைந்தால் - வசமானசங்காா மறைப்பட்டு - நிசமதுபடிந்தால் - நிசமானதுகூடினல் - மூக்கியவகையாகும் - மூக்கியமாம்-இசையார் திரிசயமறியாது-திக்குசளினிறைந்திருக்கின்ற விடயத்தையறியாமலும்-துயில்செறியாது-நித்திரையையடையாமலும்-உடறறிபோல் - தேகமானது ஸ்தம்பத்தைப்போல - அசையாது - அசையாமலும்-மதி-அறிவானது-சமமாகிய நிலை - சமமாகநிற்றல் - அதுதான் - அதுவே-மூக்கிமவானந்தம் - மூக்கியானந்தமாம்-எ-று.

(இ-ம்) சமாதியின்றிவறியாமையின்றி யறிவேமுதலாச் சுகித்திருத்தலினச்சுகமூக்கியானந்தமாயிற் றென்பதாம்-இஃதை நிசானந்தமெனக்கூறுவாருமுளரங்ஙனங் கூறுதிங்கனங்கூறியதென்னெனின் நடுநிலையினிற்கின் மூக்கியமானஸ்வரூபம் வெளிப்படுதலினெனக்கொள்க-சமாதியிற்றன்னிடத்திற்றானேசுகித்தலின்ச்சுகமாத்மானந்தமாயிற்றெனவும்சாமாதியிலானந்தமானநதியென்னுமிரண்டற்றசுகமாகவிளங்குதலினச்சுகமத்துவிதானந்த மாயிற்றெனவும் சமாதியினது நீயென்பதின்றிய னந்தபோதமாய்ச் சுகித்தலினச்சுகம் வித்தியானந்தமாயிற் றெனவுங்கொள்க. நிரதிசயானந்தாம்சமான விவ்வெட்ட விதவானந்தங்களுமதிசயமாச் சமாதியின்கண் ணவமாய் விளங்குதலி லிவையதிசயானந்தமெனக்கூறப்படுவனவாம். (௱௬௰)

(அ-சை) ஆனந்தமாகான்மியங்கூறல்.

மனுடன்மனுடகந்தருவன்றே வகந்தருவன்பிதிர்த்தேவன்
றனுடன்கருமசுரன்சுராணிந்திரனுசான்பிரசாபதியானேனை
சனவிராட்டனிரணியகருப்பன் கருதும்பிப்பதினெருபேர்கள்
பினவானந்தங்கணுனையாம் பிரளயவெள்ளக்கடல்பிரமானந்தம்.

(இ-ள்) மனுடன்-சார்வபூமனும் - மனுடகந்தருவன் - புண்ணியபரிபாகத்தாற் - கற்பாந்தத்தின்மனுடன் கந்தருவனுனமனுடகந்தருவனும்-தேவகந்தருவன் பூர்வகர்மவிண்ணியத்தால் - அவன்மனுடககதருவபதத்தின்று தேவகந்தருவனுனதேவகந்தருவனும் - பிதிர்-சிருட்டிகாலத்திலுண்டான-அக்கினிஸ்வந்தாமுதலிய பிதிரும் பிறவித்தேவன்றனுடன்-சற்பாதியிற் றேவனுயப்பிறந்த வாசானதேவனும் - கருமசுரன் அசுவமேதாயனைம்பலத்தாற் றேவனுனகன்மதேவனும் - சுரன்-யமன் முதலியதேவரும் இந்திரன்-இந்திரனும் ஆசான்-பிரகஸ்பதியும் - பிரசாபதியானேன் பிரமனும்-கனவிராட்டான் - விபாபகமான விராட்டும்-இரணிய கருப்பன்-இரணியகருப்பனுமென - கருதுமிப்பதினெரு பேரின் முறையாகவென்னு.



தின்ற விப்பதினெருபேர்களினது-பின்வானந்தங்கள் - ஒன்றுக்கொன்று நூறுபங்குயர்வுள்ள பேதானந்தங்களானவை-பிரமானந்தம் - பிரமானந்தமான - பிரளயவெள்ளக்கடல் - கற்பாந்தசாகரத்தின் - நுரையாமபேன்களாய்-எ-று

ஆனந்தப்பன்னிரண்டெனக்கூறப் பட்டிருக்கப்பதினென்றாகக் கூறியதென்னெனின் தைத்திரியவுபனிடத்தில் விராட்டிரணிய கற்பமிரண்டையுமொன்றாகக் கூறினமையாலெனக் கொள்க

(இ-ம்) மனுடானந்தமுதலிரணியகருப்பா நந்தவரையிலுள்ள வானந்தங்கள் ஞானவானந்தத்தின் தேகங்களாமெனக்கூறினதாம்.

(அ-சை) முற்கூறியவானந்தமேயதீதமாமெனல்.

எவனுகிலுமிந்தத்துரியாதீதத்திலேழாம் பூமியிலிருந்தானே
லவனாதன்சுகன்சிவனமாலயன்முதலிவோரனுபவசுகபோதம்
விவகாரதிர்ச்சியமிதுவேயனுபவமெனமுன்சொல்லியவிவகாரி
யுமானமூமறிமகனேயவனடியுதிரும்பொடிகளென்முடிபேலே.

(இ-ள்) எவனுகிலும்-பாவனுனலும்-இந்த-இந்த - துரியாதீதத்திலே - ழாம் பூமியில் - துரியாதீதமென்னுமேழாம் பூமியில்-இருந்தானெல் - இருந்தானுகில்- அவன் - அப்புருடன - சிவனமாலயன்- ஆனரியமென்னுமுப்மூர்த்திகளுக்கும் நாதன் சுகன்முதல் நாரதாசுகமுதலிய - அறிவோர்-அர்ஞருக்குமுள்ள - அனுபவசுகபோதம் - சுகானுபவமாகிய வானந்தமிரண்டையாவன்-விவகாரதிர்சியம்.விவகாரங்களிற்றரிசிபதிஷடியில்லாத இதுவேயனுபவமென - இதுவே சுவானுபவமென்று - முன்சொல்லிய-முன்னே சொல்லியிருக்கின்ற விவகாரி - விவகாரியின்- வப மானமூமறி-திருஷடாந்தமறந்தெரிவாய்-மகனே-வைரதா. வ... - அவனுபவியினுடைய பாகத்தில்-உதிரும்பொடிகள்-உதிராநின்ற தூள்களானவை-என்முடிமேல்-எனதுசிரசின்மேலிருக்கின்றன-எ-று.

(இ-ம்) துரியாதீதத்தையடைந்தவனது மகிமையைக்கூறினதாம்.

(அ-சை) சச்சிதானந்தவிலக்கணங்கூறி யின்னுஞ்சந்தேக மூளதேற்கேட்பாயெனல்.

இந்தவாறைந்துசுகஞ் சொல்லினேம் வித்தை சுகமினிமேற் சொல்
வோ-முந்தைமாயையுஞ் சச்சிதானந்தப்பொருளுமேமொழியும் போதில
வுதமாமத்துவித சுசமான்மசுகமிரண்டுமெய்கே சொன்னேம்-தொந்தமா
ற்றியமகனேயின்னமுனக்கையமுண்டேற்சொல்லுவாயே.

(இ-ள்) இவவாறு - இவ்விதம் - ஐந்துசுகஞ் சொல்லினேம் - ஐந்துவிதவானந்தத்தையுரைத்தோம் - வித்தைச்சுக - ஞானானந்தத்தை - இனிமேற் சொல்வோம் - இனிமேலுரைப்போம் - முந்தை-முன்-மாயை

யும்-மாபாரூபத்தையும்-சச்சிதானந்தப்பொருளும் - சச்சிதானந்தார்த்தத்தையும்-மொழியும்போதில்-சொல்லுமிடத்தில் - அந்தமாம்-வேத முடிவான-அத்துவிதசாம்-அத்துவிதானந்தமும் - ஆன்மை சுசம்-ஆத்மானந்தமுமாகிய-இரண்டும்- இரண்டாநந்தத்தையும - அங்கேசொன்னேம்-அவவிடத்திலுரைத்தோம்-சொங்மாற்றிய - துவந்துவங்களைக்கெடுத்த-மகனே-மைந்தா-இன்னம் - இன்னமும் - எனக்கையமுண்டேல்-உனக்குசந்தேகமுண்டானல்-சொல்லாய்-கேட்பாய்-எ-று.

(இ-ம்) வெளிப்படை. (௱௧௩.)

(அ-கை) ஆத்மாசச்சிதானந்தஸ்வரூபமெனத்தெரிந்துமதனுண்மையானஸ்வானுபூதிவெளிப்படுகிமிக்சஞ்சுருதியுத்திடனுபவங்களுக்கொத்திருக்குமவற்றினொருமையைத் தெரியவினுதல்.

குகன்றனையுமெனையுமுலகினையுமீன்றளித்தருளுங்குருவேகேளீர-புகன்றச்சிதானந்தபபதங்கடனித்தனியாயேபொருள் வேறுஞ- லுகண்டமனமுறைப்பதெங்ஙன்பரியாயபதங்களைப்போலுறவுங்காணே - னகண்டமாயொருசுவையாய்த்தேனீக கூட்டியமதுவாவறிவிப்பீரோ.

(இ-ள்) குகன்றனையும்-குமாரனையும்-எனையும்-என்னையும்-உலகினையும் - சகங்களையும் - ஈன்று - சிருட்டித்து-அளித்தருளிம்-ரட்சித்தருளுகின்ற-குருவே-இறைவனே - கேளீர் - கேட்பீராக - புகன்ற - முன்சொல்லிய - சச்சிதானந்தபதங்கள் - சச்சிதானநதமென்னும்பதங்களாணவை-தனித்தனியாய் - வெவவேறாய் - பொருள்வேறுனல - அருத்தமும்-வேறுபாடுயானுல்-உகண்டமனம் - விடயங்களிற் பாபாகின்றமனமானது-உரைப்பதெங்ஙன்-ஸ்திரமாய்நிற்கின்றதெப்படி-பரியாயபதங்களைப்போல்-பரியாய்நாமங்களைப் போல் - உறவுங்காணேன்சம்பந்தமுந்தெரிகிறதிலதலால், அகண்டமாய் கண்டிதமில்லாததாய். ஒருசுவையாய் ஏகாசமாய். தேனீக்கூட்டியமதுவா தேனீக்களாற் கூட்டப்பெற்றதேனுக, அறிவிப்பீர் தெரிவிப்பீர், எ று.

(இ ம்) வெளிப்படை.

(அ கை) சச்சிதானந்தவொருமையைச் சுருதிப்பிரமாணத்தாற்கூறுவான்றொடங்கியவற்றின் காரணமுமொருமையுங்கூறுகின்றார்.

குளிரிளசல்வெண்மையென்றபதங்களினீர்மூன்றுகூறியிற்றே. வொளிதவிஞ்செம்மையென்றபதங்களாலக்கினியுமொருமூன்றுமோ. வெளிமுதலாஞ்சகச்சத்து மூடமிட ரெனப்பிரித்து விலக்கிவேதம் வெளிதரியமுரண்மொழிந்த சத்தாதியெனும்பிரமமேகநதானே.

(இ ள்) குளிர் குளிர்ச்சியும். இளகல் நெகிழ்ச்சியும். வெண்மையென்ற வெளுப்பெனச்சொல்லிய. பதங்களினும் சொற்களினல்,



நீர் சலமானது. மூன்றுகூறியிற்றே மூன்றுயிரிவானதோ. ஒளி பிரகாசமும். தனைம் சூடும். செம்மையென்ற சிவப்புமெனச்சொல்லிய. பதங்களால் சொற்களினுல், அக்கினியும் நெருப்பும. ஒருமூன்றுமோ மூன்றுயிரிவாகுமே (அவைபோல) வெளிமுதலாஞ்சகம் ஆகாயமுதலானவுலகத்தை. அசத்து அனுாதமெனவும். மூடம் சடமெனவும். இடரென துக்கமெனவும். பிரித்துவிலக்கி வேறுபடுத்திநீக்கி.வேதம் சுருதியானது. எளிதறிய பக்குவிகளெளிதிலுணா. முரண்மொழிந்த அவற்றிற்கெதிராகச்சொன்ன. சத்தாதியெனும் சச்சிதானந்தமெனும். பிரமம் பிரமமானது. ஏகந்தான் ஒன்றேயாம். எ று.

(இ ம்) சகத்தையனுாத சடதுக்கமெனக்கண்டதனை நீங்குதற்காகக்குறித்தநாமஞ் சச்சிதாநந்தமெனவு மதனருத்தமொன்றுன பிரமமெனவுங்கூறினதாம். (௱௧௫.)

(அ கை) சச்சிதானந்தமொருமையென்ப துறுதிப்படுகிமித்தம்வேதமொருமையாகச் சொல்லிய பரியாயநாமங்களில் விதிநாமங்கூறல்.

நித்தியம்பூரணமேகம்பரமார்த்தம் பரப்பிரமநிதானஞ்சாந்தஞ் சத்தியங்கேவலந்துரியஞ்சமந்திருக்குக்கூடஸ்தன் சாட்சிபோதஞ்.சுத்தமிலக்கியஞ்சாநதனஞ்சீவன் றத்துவம்விண்சோதியான்மா. முத்தம்விபுருக்குமென் றிவ்வண்ணம் விதிகுணங்கணமொழியும் வேதம்.

(இ ள்) நித்தியம்-நித்தியமெனவும் பூரணம் பூரணமெனவும் ஏகம் ஏகமெனவும் பரமாரத்தம் பரமார்த்தமெனவும் பரப்பிரமம் பரப்பிரமமெனவும் நிதாநம் நிதாநமெனவும் சாந்தம் சாந்தமெனவும் சத்தியம சத்தியமெனவும் கேவலம் கேவலமெனவும் துரியம் துரியமெனவும் சமம் சமமெனவும் திருக்கு திருக்குமெனவும் கூடஸ்தன் கூடஸ்தனெனவும் சாட்சி சாட்சியெனவும போதம் போதமெனவும் சுத்தம் சுத்தமெனவும் இலக்கியம் - லட்சியமெனவும் சநாதனம் - சநாதனமெனவும் சீவன் - சீவனெனவும் தத்துவம் - தத்துவமெனவும் விண்-விண்ணெனவும் - சோதி)சோதியெனவும ஆன்மா-ஆத்மா வெனவும் முத்தம்-முத்தமெனவும் விபு - விபுவெனவும ருக்கும மென்று - ரூக்குமமெனவும் இவவண்ணம் - இப்பிரகாரம் விதி - விதியால் குணங்கள் குணப்பரியாயநாமங்களை வேதம்-சுருதிகள் மொழியும்-சொல்லும்-எ.று

(இ-ம்) நிதானம்-ஆதிகாரணம்-சநாதனம்-அநாதி. (௱௧௬)

(அ-கை) விலக்குநாமங்கூறல்

அசலநிரஞ்சநமமிர்தப்பிரமேயம்வீமலம்வசனுதீத
மசடமநாமமப்சங்சமதுலநிரந்தாமசனுநிருபாகண்ட
மமனாநதமினுசோக்குணநிஷகளநிர்வயமனுதி
அசரீரமவிகாரமத்துவிதமெனவிலக்குமநேகமுண்டே.

(இ-ள்) அசலம் - சலனமின்மையும். நிரஞ்சனம் - அஞ்ஞானமின்மையும். அமிர்தம் - அமிர்தமின்மையும். அப்பிரமேயம் - பிரமேயமின்மையும். விமலம் - மலினமின்மையும். வசனாதீதம் - வாக்குக்கெட்டாமையும். அசடம் - சடமின்மையும். அநாமயம் - ஆமயமின்மையும் அசங்கம் - சங்கமின்மையும். அதுலம் - துலமின்மையும். நிரந்தரம் - அந்தரமின்மையும் அநணு - அணுவின்மையும். நிரூபம் - ரூபமின்மையும் - அகண்டம் - கண்டமின்மையும். அசம் - பிறப்பின்மையும். அநந்தம் - அந்தமின்மையும். அவிநாசி - நாசமின்மையும். நிர்க்குணம் - குணமின்மையும். நிஷ்களம் - சகளமின்மையும். நிரவயவம் - அவயவமின்மையும். அநாதி - ஆதியின்மையும் - அசரீரம் - சரீரமின்மையும். அவிகாரம் - விகாரமின்மையும். அத்துவிதம் - துவிதமின்மையும். என - என்றுசொல்லப்பட்ட விலக்கும் - விலக்குநாமங்களும். அநேகமுண்டு - அநேகமுள்ளனவாம் - எ - று.

(இ-ம்) அப்பிரமேயம் அறியப்படாதது அநாமயம் - நோயில்லாதது - அதுலம் - சனமில்லாதது நிரந்தரம் - இடையில்லாதது நிரவயவம் - அவயவமில்லாதது - அசம்பிறப்பில்லாதது. (௱௩௭)

(அ-கை) இவ்விதிவிலக்கு நாமங்களின்ஒருமைகூறல்

இன்னவகைவிதிவிலக்குக்குணங்கணன்றாய்ச்சேர்ந்தொருமித்தெல்லாங்கூடிச். சொன்னபொருளொன்றன்றி யிரண்டில்லை பொருபொருளைச் சொல்லுஞ்சொற்கள். பின்னபதமாமதனாற் சத்தாதிகுணப்பொருளாம்பிரமமேகமன்னபொருளொருமை யறிந்த கண்ட பரிபூரணமாயாவாய் நீயே.

(இ-ள்) இன்னவகை - இத்தன்மையாக விதி - விதியும விலக்கு - விலக்குமாகிய குணம் - குணங்கள் நன்றாகச்சேர்ந்தொருமித்து - நன்றாகச்சேர்ந்தொன்றுபட்டு எல்லாங்கூடி - அனைத்துங்கூடி சொன்பொருள் - சொல்லியவருத்தம் ஒன்றன்றி - ஏகமேயன்றி இரண்டில்லை - துவிதமில்லை ஒருபொருளை - ஏகவஸ்துவை சொல்லுஞ்சொற்கள் - உரைக்கும்வசனங்கள் பின்னபதமாம் - வெவ்வேறுசொற்களாம் அதனால் - ஆதலினாலே சத்தாதிகுணம் - சச்சிதானந்தமென்னும் - குணப்பதங்கட்கு பிரமமேகம் - பிரமமொன்றேபொருளாம் அன்ன - அத்தன்மையதான பொருளொருமையறிந்து - அருத்தத்தினொருமையைத்தெரிந்து அகண்ட பரிபூரணமாய் - அகண்டமான பூரணஸ்வரூபமாக ஆவாய்நீ - நீயாகுவாய - எ - று.

(இ-ந-ச-ம்) இவ்விதிவிலக்குநாமங்கள் பலவாயினும் மதனாலுணர்த்தப்படும்பொருளொன்றாதல் போலச் சச்சிதானந்தமென்னும் பதங்களனேகமாயினும் பலதுணர்த்தப்படும்பொருளொன்றான வத்துவித வஸ்துவேயாம். (௱௩௮)

(அ-கை) குணாதீதமான வஸ்துவிற்குக் குணங்கூறலாமோ வென்பதற்குத்தாங்கூறல்.



நிர்க்குணவஸ்துவின்குணங்களுரைப்பது தாய்மலடியெனனிகரொன்றதே - நிர்க்குணனேவஸ்துநிலையுரையாமலறியவல்ல சதுரருண்டோ. நற்குணவேதங்களிந்தச் சீவன்முத்திபெறப்பிரமஞானந்தோன்றச் - சொற்குணங்கள் பிரமத்தின்குணங்களல்லபிரமமேஞ்சொரூபந்தானே.

(இ-ள்) நிர்க்குண வஸ்துவின் - குணாதீதமான பிரமவஸ்துவிற்கு குணங்களுரைப்பது - இத்தன்மையான நாமங்களைச்சொல்வது தாய்மலடியெனல் - மாதாவந்தியென்பதற்கு நிகரொன்றதே - சமானமென்று சொல்லாதே சற்குணனே - சற்குணமுள்ளவனே வஸ்துநிலையுரையாமல் - வஸ்துநிச்சயத்தையாசிரியர்சொல்லாமல் அறியவல்ல - தானே தெரிந்துகொள்ளும் வல்லமையுள்ள சதுரருண்டோ - சதுரான சீடருமுளரோ (ஆதலால்) நற்குணவேதங்கள் - நல்லசுபாவத்தையுடைய சுருதிகளானவை இந்தச்சீவன்முத்திபெற - இச்சீவன் முத்தியையடையும் பொருட்டு பிரமஞானந்தோன்ற - பிரமஞ்ஞானந்தோற்றும்படி சொற்குணங்கள் - உரைத்தசத்தாதிகுணங்கள் பிரமத்தின் குணங்களல்ல - பிரமத்தின் குணங்களல்லவாம் பிரமமாஞ்சொரூபம - அதனருத்தமபிரமஸ்வரூபமேயாம - எ - று.

(இ-ம்) அறிதலிறந்த விடத்தனுபவமாயுள்ள நிர்க்குணவஸ்து - அறிவிற்கவதானமாகும்பொருட்டுரைக்கும் பரியாயநாமங்களினருத்தப்படி சிந்திக்குனிக்குணரூபமிறந்தக் குணாதீதஸ்வரூபம் வெளிப்படுமன்றிமற்றொன்றால் வெளிப்படாதாதலாலங்ஙனங்கூறுஞ்சுருதிப்பிரமாணத்தையுணர்த்தியதாம். (௱௩௯)

(அ-கை) சச்சிதானந்தப்பொருளொன்றென்றதைச் சுருதியிறகாட்டினதுபோலவுத்தியிலுங்காட்டல்வேண்டுமெனவினாதல்.

மோகவிருள்கெடக்கோடியருணனெனவருகுருவே மொழியக்கேளீர் - ஏக பரிபூரணமாமென்சொரூப மெனவுளத்தி லிருக்குமெண்ணமாகமங்கள் சொன்னபடியென்னையகண்டமாத்தமாவறிந்தேனையா - வுகமுமொத்திடவுரைத்தாற்பசுமரத்திலாணிபோலுரைக்குமெஞ்சே.

(இ-ள்) மோகவிருள்கெட - மோகாந்தகாரங்க கோடியருணனென் - கோடிசூரியருதயமானதுபோல வருகுருவே - எழுந்தருளியவாசாரியரே மொழியக்கேளீர் - அடியேன் சொல்வதைக் கேட்பீர் ஏகபரிபூரணமாம் - ஒன்றானபூரணஸ்வரூபமாகிய என்சொரூபம் - எனதுபிரமஸ்வரூபம் என உளத்தில் - என்னிருதயத்தால் இருக்குமெண்ணம் - அழுந்துமாறு ஆகமங்கள்சொன்னபடி - சுருதிகள்சொல்லியபடி என்னை - எனது வஸ்துஸ்வரூபத்தை அகண்டமாத்தமா - அகண்டப்பொருளாக அறிந்தேன் - தெரிசித்தேன ஐயா - என்நாயகரே உகமும - உத்தியும் ஒத்திடவுரைத்தால் - பொருந்தும்படியருளினால் நெஞ்சு - மனமானது பசுமரத்திலாணிபோல் - பச்சைமரத்திலறையுமாணியைப்போல உறைக்குமஸ்திரப்படும் - எ - று.

(௩௪௰)

(இ-ம்) வெளிப்படை.

(அ-கை) அவ்வினாவிற்குத்தரங்கூறல்.

சத்தேசித்தாகுமயலெனிலச்சத்தாமசைத்தானாற்சாக்ஷியெங்கே
சித்தேசத்தாகுமயலெனிற்சடமாஞ்சடங்களுக்குத்திதியுமில்லை
யொத்தேதோனறியசத்துஞ்சித்துநல்லசுகமாகுமேகத்துக்கோர்
வித்தேயன்னியமாகிற்சடமசித்தாஞ்சுகானுபவம்விளங்கிடாதே.

(இ-ள்) சத்தேசித்தாகும்-சத்தாக விளங்குதலேசித்தாகும் அயலெனில்-சத்துக்குவேறென்றால் அசத்தாம்-அல்லாததாம் அசத்தானால்-இல்லாதாயின் சாட்சியெங்கே - மத்தியமாயிருந்தறியுஞ் சாட்சியெங்ஙனமாம் சித்தேசத்தாகும்-சித்தாயிருத்தலேசத்தாகும அயலெனில் - சித்துக்குவேறென்றால் சடமாம்-அறியாமையாம் சடங்களுக்கு - அத்திசயங்களுக்கு திதியுமில்லை- விளங்குந்தன்மையுமில்லையாம் (ஆதலால்) ஒத்தேதோன்றிய-பொருந்தத்தோன்றிய சத்தும்-திரிகாலங்களிலுநசியாதிருக்கின்றசத்தும் சித்தும் - மூக்காலங்களிலுந்தெளிவாக விளங்கியசித்துமே நல்லசுகமாகும் - நிரதிசயானந்தமாகும் ஏகத்துக்கோர்வித்தே - உத்திக்கோர்விதையாகும் அன்னியமாகில் - வேறானால் சடமசத்தாம்- சித்துஞ்சத்துஞ் சடமு மசத்துமாம் சுகானுபவம் விளங்கிடாது அங்ஙனமாயிலானந்தமுதியாமற்றுக்கமுண்டாம்-எ-று.

(ப-ம்) சத்தேசித்தாகாவிடிற் றன்னையறியுந்தன்மையில்லையென்பார் சாட்சியெங்கேயெனவும் சித்தேசத்தாகாவிடிற் சர்வம் பிரம்மமயமாக விளங்குதலின்றென்பார் சடங்களுக்குத் திதியமில்லையெனவும் இவவிருமையினொருமையினுதிப்பதே நிரதிசயானந்த மென்பார்நல்லசுகமாகுமெனவும் அவ்வுத்தியனுபவத்துக்கு மூலமென்பார் யூகத்துக்கோர்வித்தெனவுங்வேறுபடினிச் சச்சிதானந்தமனூர்த சடதுக்கமா மென்பார் அன்னியமாகிற் சடமசத்தாஞ் சுகானுபவம் விளங்கிடா தெனவுங்கூறினார்:

(௩௪௧)

வியாதசத்துமுன்னம் விளங்குவதுதன்னாலோ வேறென்றாலோ
வாயால் வேறெனிலதுவுமசத்தோ சத்தோசத்தேன் மலடிமைந்தன்
பேயாகாரியஞ் செயுமோவசத்தெனவிப்படியதையும் பிரித்துச்சொன்னா
லோயாதவவத்தையாங்குதர்க்கவிகற்பங்களைவிட்டொழிந்திடாயே.

(இ-ள்) வியாசத்து - திரிகாலங்களிலுநசியாத சத்தானது முன்னம் விளங்குவது-முன்பிரகாசிப்பது தன்னாலேயா-தன்னாலேயோவேறென்றாலோ-மற்றொன்றாலோ வாயால்வேறெனில் -வாக்கினால்வேறென்றால்-அதுவும்-அப்பத்தமும் அசத்தோ - இல்லாததா சத்தே - இருப்பதா அசத்தேல்-இல்லாததென்றால் மலடிமைந்தன் - வந்தியாபுத்திரன் பேயா-பேயனே காரியஞ்செயமோ-தொழிலைச்செய்வானா அதையும் - அக்கிரியைகளையும் இப்படி-இங்ஙனம் அசத்தெனப்பிரித்துச் சொன்னால்



அசத்தென்றுபகுத்துச்சொல்லின் ஓயாதவவத்தையாம் - நீங்காதவவத்தையாம் குதர்க்கும்-தர்க்கமாகிய விகற்பங்களை - வேறுபாடுகளை விட்டொழிந்திடாய்-விட்டுநீங்குவாய்-எ-று.

(ப-ம்) தன்னையறிவது தானேயன்றி வேறுமோ வென்பார் வியாதசத்துமுன்னம் விளங்குவதுதன்னாலோ வேறென்றாலோ வெனவும் அங்ஙனமுனைக்குஞ் சத்தமுமிருந்ததுனைக்குமாவில்லாததுனைக்குமாவென்பார் வாயால்வேறெனி லதுவு மசத்தோ சத்தோமெனவும் இல்லாதது நிகழுமாவென்பார் அசத்தேன்மலடிமைந்தன் காரியஞ் செய்யுமோவெனவும் இல்லாதது நிகழுமென்னி நீங்காத சென்னுவத்தை யுண்டாகுமென்பார் அசத்தென விப்படியதையும் பிரித்துச் சொன்னாலோயாதவவத்தையாமெனவும இருந்ததேயன்றி வென்னு மனுபதங்கொண்டில்லாததை நீங்குவாயென்பார் குதர்க்கவிகற்பங்களை விட்டொழிந்திடா யெனவுங்கூறினார்.

(இ-உ-க-ம்) இருந்ததுவிளங்குதலிற் சத்தேசித்தெனவும் விளங்குவதேயிருத்தலிற் சித்தேசத்தெனவும் இவ்வொருமையிற்சுகம் விளைதலினிஃதேயானந்தமெனவுமிவவனுபவத்தாலுத்திப்பிரமாணமுணாத்தியதாம்.

(௩௪௨)

(அ-கை.) சச்சிதானந்தப்பதங்களின் பொருளொன் றென்பதற் கனுபவங்கூறல்.

சுருதியுத்தியொத்ததுபோலனுபவமுங்கேள்சுழுத்திச்சுகவானந்த
மிருதிவடிவாதலிலவ்வானந்தமேயறிவாமன்னவேறங்கில்லைக்
கருதிபிரளயஞ்சுழுத்தியிரண்டிலுநீயிருந்திருளைக்காண்கின்றாயே
யிருதயத்திப்படிநோக்கியேகபரிபூரணமாயிருந்திடாயே

(இ-ள்.) சுருதியுத்தி-சுருதியமுத்தியும், ஒத்ததுபோல்-பொருந்தினதுபோல்; அனுபவமுங்கேள்-அனுபவத்தையுங்கேளாய்: சுழுத்தி-சுழுத்தியவத்தையிலுள்ள, சுகவானந்தம் ஆனந்தமானதும் இருதிவடிவாதலின்-ஸ்பாணரூபமாதலினால் அவ்வானந்தமேயறிவாம் - அந்தவானந்தமேஞானமாம், அங்கு-அவ்விடத்து, வேறில்லை - மற்றொன்றில்லை. கருதுபிரளயம்-நினைக்கின்றகற்பாந்தமும், சுழுத்தி - சுருத்திசவத்தையுமாகிய இரண்டிலும்-இரண்டுகாலத்தும நீயிருந்து - நீசத்தாகின்று, இருளை - அந்தகாரத்தை. காண்கின்றாயே - பார்க்கின்றாயல்லவா-இருதயத்து - உனதிதயத்தில். இப்படிநோக்கி - இவ்விதமாகபார்த்து-ஏகபரிபூரணமாயிருந்திடாய் - ஒன்றானபூரணஸ்வரூபமாகவேயிருப்பாய்-எ-று.

(ப-ம்.) அறிதலிறந்தசுழுத்தியிலானந்தம் விளங்குதலதற்கேதெரிதலினவ்வானந்தமேயறிவென்பார் சுழுத்திசுகவானந்த முருதிவடிவாதலினவ்வானந்தமேயறிவாம்வேறங்கில்லையெனவும் இருளையறியுமிடத்தவ்வறிவேதானாயிருத்தலினறிவேசத்தென்பார்பிரளயஞ்சுழுத்தியிரண்டிலு நீயிருந்திருளைக்காண்கின்றாயெனவுங்கூறினார்.

(இ-ம்) சச்சிதானந்தத்தின் பொருளொருமையென்பதற் கனுபவங்கூறியதாம்-சுருதியுத்தியனுபவங்களோடுமுணர்த்தியசச்சிதானந்தத்தின் பொருளொருமையின் ஸ்வரூபத்தைத் தேசிகருபதேச முகத்தாற் றெரிந்துகொள்க. (௱௪௩)

(அ-கை) சுருதியுத்தி யனுபவப்படிச் சீடன் சகசநிட்டையிற்பெற்ற வனுபவங்கூறல்.

பலகலையுமுணர்ந்தகுருமொழிந்தபடியிவனுமனுபவம்விடாமற்
பலமலரின்மதுப்போலச்சச்சிதானந்தமொன்றும்பரமார்த்தத்தைப
பலபொழுதுங்கண்மூடிச்சமாதியிருந்தான்விழித்துப்பார்த்தபோது
பலவடிவாஞ்சராசரசித்திரங்களெலாந்தோன்றுமொருபடமானனே

(இ-ள்) பலகலையுஞ்ச கலசாஸ்திரங்களையும்-உணர்ந்தகுரு - அறிந்த தேசிகரானவர்-மொழிந்தபடி - அனுக்கிரகித்தவண்ணம் இவனும் - இச்சீடனும் - அநுபவம்விடாமல்-அநுபவத்தைவிட்டுநீங்காமல் - பலமலரின்மதுபபோல-நானாபுட்பங்களினிருக்குந்தேனொருமித்ததுபோல - சச்சிதானந்தமொன்றும்- சத்துசித்தானந்தங்களேகமாகிய - பரமார்த்தத்தை-பிரமப்பொருளை- பலபொழுதும் - எப்போதும்கண்மூடிச்சமாதியிருந்தான்-ஊனக்கண்ணைமூடிஸ்வரூபசமாதியிலிருந்தான் - விழித்துப்பார்த்தபோது-பலவடிவாம்-நானாவிதவுருவங்களான - சராசரசித்திரங்களெல்லாம்-தாபரசங்கமாகியசித்திரங்களனைத்தும்-தோன்றும் - தோன்றுகின்ற-ஒருபடமானான்-ஓர்சித்திரப்படமானான்-எ-று.

(இ-ம்) சச்சிதானந்தப் பதங்களின் பொருளொருமையான வத்துவிதஸ்வரூபமேநானுகித்தானேயாவுமாகவிளங்குகின்ற சாக்ஷாத்காரானுபவத்தைப்பெற்றுருடனாயினனென்பதாம் (௱௪௪)

(அ-கை.) துரியாதீதமே துரியமாகவிளங்கு மனுபவத்தில் நவநவமாமிக்குமபொருட்டஃதுதயமாதற்கிடமான ஞானபூமியைக்குறித்து நான்குவகையாகவினுதல்.

இதயபொத்தசற்குருவேநமக்கிதுவேவிநோதமன்றியினிவேறுண்
டோ-வதையுரைத்துமறைகினைத்துமிருப்பதன்றோஞானிகளுக்கான நீ
தி-முதலுரைத்ததுரியாதீதமுமேழாம்பூமியு முக்கியமாமென்ற - பதமு
மதின்வகையுமெனக்கெளிதாகத்தெளியுமவண்ணம்பணித்திடீரோ.

(இ-ள்) இதயமொத்தசற்குருவே - மனமொத்த வென்னுடைய வாசிரியரே-நமக்கு-நமக்கு-இதுவே-இவ்விசாரமே-விநோதமன்றி லீலையல்லாமல்-இனிவேறுண்டோ-இனிவேறுமொன்றுளதோ-அதை - அப்பிரமத்தை-புகழ்ந்தும்-சர்வேசுவரனைப்பேசியும்-நினைத்தும்-மனதினுற்றியானித்துமிருப்பதன்றோ-இருப்பதல்லவா- ஞானிகளுக்கானநீதி- ஞானவான்களுக்கானநியாயம்-முதலுரைத்த-முன்சொன்ன. துரியாதீதமும் - துரியாதீதத்தையும். ஏழாம்பூமியும் - ஏழாவதுபூமியும். முக்கியமாமென்ற பதமும் - முக்கியமாமென்றுசொல்லியபதமும். அதின்வகையும்-அதன்பகுப்பையும்-எனக்கு அடியேனுக்கு எளிதாகத் தெளியும்வண்ணம் சுலுவாகத்தெரியும்படி-பணித்திடீர்-அருள்செய்வீர்-எ-று.



(இ-ம்) வெளிப்படை. (௱௪௫)

(அ-கை) சுவானுபவத்திற் சொல்லுமனோலயமார்க்கமான ஞானபூமியைகூறுவான்றொடங்கி யுற்பத்திக்கிரமமானவஞ்ஞான பூமியின் வகையாகிய நாமங்களேழையு மூற்கூறுகின்றார்.

வினவுமிடத்தஞ்ஞானபூமிகளேழ் ஞானபூமிகளேழென்பா-ரினி
யவற்றுளஞ்ஞானபூமிகளேழையு முந்தியபம்பக்கேளாய் - தனிவித்து
சாக்கிரசாககராமகாசாக்கிரஞ் சாக்கிரத்தைச்சார்ந்த - கனவுநனுககன்வு
சாக்கிரஞ்சுழுத்தியென்றெழுபேர் கணித்தாமேலோர்.

(இ-ள்) வினவுமிடத்து-விசாரிக்குமிடத்தில் - அஞ்ஞானபூமிகளேழ் அஞ்ஞானபூமிகளேழ். ஞானபூமிகளேழ் - ஞானபூமிகளேழ் - என்பார் என்றுசத்துக்கள்சொல்லுவார்கள் - இனியவற்றுள் இனியவைகளுக்குள். அஞ்ஞானபூமிகளேழ் - அஞ்ஞானபூமிகளேழினையும். முந்தியமபக்கேளாய்-முன்புசொல்லுதுங்கேட்டாய் - தனி-தனிமையான. வித்துச்சாக்கிரம்- வித்துநனவெனவும்-சாக்கிரம - நனவெனவும் - மகாசாக்கிரம்- மகாநனவெனவும - சாக்கிரத்தைச்சார்ந்தசனவு - நனுககனவெனவும்-கனு-சொப்பனமெனவும் - கனவுசாக்கிரம்-கனுநனவெனவும - சுழுத்தியென்று-சுழுத்தியெனவும்-ஏழுபேர்- ஏழுநாமங்கள்-மேலோர்-மகான்கள்-கணித்தார்-கூறினார்.

(இ-ம்.) வெளிப்படை. (௱௪௬

(அ-கை) அவற்றுளொன்குபூமிகளினிலக்கணங்கூறல்.

மூந்தவகண்டத்தெழுமோரறிவுமாத்திரமதுதான்முதல்வித்தாகு
மிந்தவரிவிற்பண்டில்லாவகந்தைமுளைபோலாமிதுன்னுவாம
வந்துவந்துபிறவிதொறுமகமாதைவளருமதுமகாநனுவா
நந்துமகங்கொடுநனவின்மனோராச்சியஞ்செயலேநனுக்கனுவே.

(இ-ள்) மூந்த-முன்னரோயுள்ள அகண்டத்தெழும்-அகண்டமானசத்திலுதித்தஓரறிவுமாத்திரம்-ஒருணர்வாகியஅதுதான்-அதுவேமுதல்வித்தாகும் முன்றுண்டானவித்துநனவாம்இந்தவரிவில் - இவ்விதையாகியவுணர்வில்பண்டில்லா - முன்னமில்லாத. அகந்தை - அகங்கையானது முளைபோலாம்-அங்குரம்போலவுண்டாம்இதுநனவாம் - இதுசாக்கிரமாம்வந்துவந்துஉண்டாகியுண்டாகிபிறவிதொறும் - சகனங்கடோறும் அகமமதைவளரும் யானெனதென்கின்ற விருகூறும்வளரும அதுமகாநனுவாம் அதுமகாசாக்கிரமாம் நந்தும் நசிக்கின்ற அகங்கொடு - அகத்தைக்கொ

ண்டுநனவில் - சாக்கிரத்தில் - மனோராச்சியஞ்செயல் - மனோராச்சியஞ் செய்வது - நனுகசனு - சாக்கிரசொப்பனமாம் - எ - று.

(ப-ம்) அறிவுவியாபகமயின்றி யறிவாகவிளங்குகின்றது - தன்னிடத்திலேதிரிட்டவிவஉதித்தபோதேசுகசிவபரத்துக்கு மூலமானபிரகிருதியென்பார் முதல்னித்ராருமெனவும் - இவவயினிற் பிரதிபலனுமாக வெளிப்படுஞ்சாவைவை யானென்னுமறிவே சகசிவபாவுற்பத்திக்கடையாளமானமகதத்துவமென்பார் - னுவெனவும் - அச்சகசிவபரங்களே யானெனதென மமதாகங்காரமாக வெளிப்படு மறிவேயகங்காரதத்துவமென்பார் மனமாதெனவும் - அச்சகசிவபரங்களினுருவமேசானென வியாபித்ததுவாக நிற்குமறிவுதெரிதல்போலத் தோற்றுமென்பார் - நனுக்கனுவெனவுங்கூறினர். (௨௪௭)

(அ-கை) ஏனையமூன்றுபூமிகளினிலக்கணங்கூறல்.

உண்டுறங்கி மனோராச்சியஞ்செயல் சொர்ப்பனமெனும்பேருடையதாகும். பண்டுகனுக்கண்டுமறந்ததை மீண்டுநினைபபதுசொர்ப்பனநனவா. மண்டுமிருண் மூடுவதுசுழுத்தியாமஞ்ஞானவகைகள்சொன்னேம். விண்டுநிறைமுத்திதருஞானபூமிகளேழும்விளம்பக்கேளாய்.

(இ-ள்.) உண்டுறங்கி - புசித்து - நித்திரைசெய்து - மனோராச்சியஞ்செயல் - மனோராச்சியஞ்செய்வது - சொப்பன மெனும் பேருடையதாகும் - கனுவென்னுநாமமுள்ளதாம் - பண்டுகனுக்கண்டு - முன்சாக்கிரத்திற்பார்த்து - மறந்ததை - மறந்துவிட்டதை - மீண்டுநினைப்பது - திரும்ப ஞாபகப்படுத்துவது - சொர்ப்பனநனவாம் - சொர்ப்பன சாக்கிரமாம். மண்டுமிருண்மூடுவது - மிகுந்தவிருள்மூடிக்கொள்வது - சுழுத்தியாம் சுழுத்தியாகும் - அஞ்ஞானவகைகள்சொன்னேம் - அஞ்ஞானபூமிகளின் விதத்தைசொன்னேம் - விண்டு - சடமுதலியவைகள்வேறுபட்டு நிறைமுத்திதரும் - பரிபூரணமான கைவல்யத்தைக் கொடுக்கும் ஞானபூமிகளேழையும்ஞானபூமிகளேழையும் விளம்பக்கேளாய் - சொல்லக்கேட்பாய் - எ - று.

(ப-ம்.) அச்சகசிவபரங்களின் யதார்த்தமிஃதெனத் தோன்றுதலினில் - வியாபிக்குமறிதவ மனோராச்சியமென்பார - சொற்பனமெனவும். அவவறிவு சகசிவபரங்களை மறந்துநினைக்குமென்பார் - சொற்பனநனவெனவும் அச்சகசிவபரங்களே தானாகின்று தன்னைமுழுதுமறந்தவறியாமையே மீளாதமகாசுழுத்தியென்பார் இருண்மூடுவது சுழுத்தியாமெனவுங்கூறினர்.

(இ-உ-க-ம்) வித்துநனவு - கனவு - மகாநனவாகிய விம்மூன்றும் அறிவுபரிணமித்தாகாரமா - யெதிர்படுதலாற் - சாகக்கிரமெனவும் சாக்கிரசொற்பனம் - சொற்பனம் - சொற்பனசாக்கிரமாகிய - விம்மூன்றுமெதிர்டுகின்ற - வாகாரங்களினறியாமையோடு - விபகாரங்கள் - செய்தலின் - சொற்பனமெனவும் - சுழுத்தி - சிருட்டிமுதலிதுகாறுந் தன்யதார்த்தந் தெரியாமல் விடயானந்தகாரமாக வுறங்குதலிற் சுழுத்தியெ



னவுங்கூறினரென்பதாம். (௨௪௮)

(அ-கை) ஞானபூமிகளினாமங்களேழையுங்கூறுகின்றார்

புலவர்புகழ் முதற்பூமிசுபேச்சைவிசாரணையிரண்டாம்பூமியாகு
நலதனுமானசிமூன்றாம்பூமிசத்துவாபத்திநாலாம்பூமி
சொலுஞ்சமூசத்திப்பேரும்பதார்த்தாபாவனைப்பேருந்துரியப்பேரும்
பலினமறுமகனேயைந்தாறேழுபூமிகளாவகுத்தார்மேலோர்.

(இ-ள்.) புலவர்புகழ் - அறிஞர்கடுதியாநின்ற. முதற்பூமி - முந்தினபூமியினும். சுபேச்சை - சுபம்விரும்பலெனவும். இரண்டாம்பூமி - இரண்டாம்பூமியினும். விசாரணையாகும் - விசாரஞ்செய்தலெனவும். மூன்றாம்பூமி - மூன்றாம்பூமியினும். நலதனுமானசி நல்லமானஞ்சிறுகலெனவும். நாலாம்பூமி - நான்காம்பூமியினும். சத்துவாபத்தி - உண்மையிலேமன்னிற்றலெனவும். ஐந்து - ஐந்தாம்பூமியின். பேரும் - நாமமும். சொலும் சமூசத்தி - சொல்லாநின்ற சங்கற்பமறலெனவும். ஏழு - ஏழாவதுபூமியின். பேரும் - நாமமும். துரியம் - துரியமெனவும். பலினமறுமகனே - களங்கமறுமைந்தா. மேலோர் - மகான்கள். பூமிகளாகவகுத்தார் - சத்தபூமிகளாகப்பிரித்தார்கள் - எ - று.

(இ-ம்.) வெளிப்படை. (௨௪௯)

(அ-கை.) அவற்றுணான்கு பூமிகளினிலக்கணங்கூறல்.

துர்ச்சங்கநீவிர்த்திவந்துசிவஞானம்விரும்புவதுசுபேச்சையாகு
நற்சங்கமொழிவினவிஞானநூல்பழகல்விசாரணையாநம்பி
மூற்சங்கவிஷணைகள்விடறனுமானசியிந்தமூன்றினாலுஞ்
சற்சங்கமனதிலுண்மையறிவுதித்தல்சத்துவாபத்திதானே.

(இ-ள்.) துர்ச்சங்கநீவிர்த்துவந்து - துர்ச்சங்கநீக்கி. சிவஞானம்விரும்புவது - சிவஞானத்தையாசிப்பது. சுபேச்சையாகும் - சுபம்விரும்பலாம். நற்சங்கம் - சாதுசங்கத்தைச்சேர்ந்து மொழிவினவி - அவருரைக்கும் வாக்கியத்தை விசாரித்து. ஞானநூல்பழகல் - ஞானசாஸ்திரத்தை யப்பியாசித்தல். விசாரணையாம் - விசாரணையாகும். நம்பி - விசாரத்தின்வெளிப்படும்பொருளைநம்பி. மூற்சங்கவிஷணைகள் - மூன்றுள்ளவிச்சைகளை. விடல் - நீங்குதல். தனுமானசி - மனஞ்சிறுகாலம். இந்தமூன்றினாலும் - இம்முப்பூமிகளின் பழக்கத்தினாலும். சற்சங்கமனதில் - சற்சங்கம்பழகிய மனதில். உண்மையறிவுதித்தல் - மெய்யுணர்வுபிறத்தல் - சத்துவாபத்தி - உண்மையிலேமன்னிற்றலாம். (௨௫௰)

(அ-கை.) ஏனையமூன்றுபூமிகளினிலக்கணங்கூறல்.

தத்துவத்தின்மனமுறைத்துமித்தையெலாமறுத்தல்சமூசத்தியாகும்
அத்துவிதமெனந்தமவருந்திரிபுடி போம்பதார்த்தாபாவனையாகும்
வத்துநிலையிருந்தபடியிருந்துவனசுபாவந்துரியமாகு
மித்துரியபூமியைமுன்றுரியாதீதப்பதமென்றதுவுங்கேளாய்.

(இ-ள்) தத்துவத்தில் உண்மையில். மனமுறைத்து மனந்திரப்பட் டெமித்தையெலாம் பொய்மைகளனைத்தையும். மறத்தல் மறந்துவிடுவ து. சமுசத்தியாகும்- சங்கற்பமறலாம் அத்துவிதா னந்தம்வரும். அத் துவிதானந்தமுண்டாதலும்-திரிபுடிபோம் - திரிபுடிநீங்குதலும். பதார் த்தாபாவனையதாகும் - பதார்த்தவெண்ணமறுத்திடலெனவும். உத்துரி ஷ-பிரமஸ்துவினிச்சயம். இருந்தபடியிருந்த - இருந்தவண்ணமிருக்கி ன்ற. மவுனசுபாவம் - மோனத்தன்மையே. துரியமாகும் - துரியமாம். இ த்துரியபூமியை - இந்தத்துரியபூமியை. மூன் - முன்பு துரியாதீதப்பத மென்றதுவும் - துரியாதீதப்பதமென்று சொன்னதுவும். கேளாய் - கே ள்-எ-று.

(இ-உ-க ம்) சாதனசதுட்டயமுதித்து விடயதோஷ திருட்டியுண் டாய்த் தன்னைத்தரிசிக்க விரும்புவதே சுபேச்சையெனவும் அவவிரு ப்பத்தாற்குருவையடுத்துருவமுந் தானல்லாத சடவுருவமு மிஃதெனவி சாரித்தல் விசாரணையெனவும் அவ்விசாரத்திலுள்ளசத்தில் வாசனையு ண்டாய்ச சடவாசனைவிட்டு மனமடங்குதலே தனுமானசியெனவும் அ ச்சித்துவாசனை மிகுந்தஃதனுபவமாக வெளிப்படுதல் சத்துவாபத்தி யெனவும் அச்சித்துதயத்திறைற் சடபாவநீங்குதல் சமுசத்தியெனவும் அச்சித்திலானந்தோதயமாயிரண்டற யாவுந்தானே யிருத்தல் பதார் த்தாபாவனையெனவும் இவவநுபவ மெப்போதுமுள்ளதாக விளங்குதல் துரியமெனவுங்கூறினதாம். (௱௫௧)

(அ-கை) இத்துரியபூமி துரியாதீதமாகு மியல்புதோன்ற சத்தபூமி யையும் பஞ்சாவத்தையாகப் பகுத்த தன்வகையு மதனிலக்கணமுங் கூ றுகின்றார்.

முற்புவிமூன்றினுமுலகந்தோன்றுதலாற்சாக்கிரமாம்மூன்றற்கப்பாற்
சொற்பனமாமதுவுமெள்ளநழுவுமஞ்சாம்பூமியேசுழுத்தியாகு
மற்புதமாஞ்சுவாநுபவமிகுமாறும்புவிதுரியமதற்கப்பாலோர்
கற்பனையிலாதவிடமதீதமென்றுமவுனமதைக்காட்டும்வேதம்.

(இ-ள்.) முற்புவிமூன்றினும் முதற்கட்கூறிய பூமிகண்மூன்றிலும். உலகந்தோன்றுதலால் சகந்தோன்றுகின்றபடியால். சாக்கிரமாம் அம மூன்றுபூமியுநனவாகும் மூன்றற்கப்பால் நான்காவதுபூமி. சொற்ப னமாம் கனவாகும் அதுவுமெள்ளநழுவும் அக்கனவுமெள்ளநீங்குகி ன்ற அஞ்சாம்பூமியே ஐந்தாம்பூமியே. சுழுத்தியாகும் சுழுத்தியாம். அற்புதமாம் அதிசயமாகிய. சுவாநுபவமிகும் சுவாநுபவமிகுந்த ஆ றும்புவி ஆறும்பூமி. துரியமாம் துரியமாகும் அதற்கப்பால் ஏழாம்பூ மி ஓர்கற்பனையும் ஒருகற்பனையும் இல்லாதவிடம் அற்றவிடம் அதீத மென்று துரியாதீதமென மவுனமா மௌனமாக வேதம் சுருதியான து. காட்டும் தரிசிப்பிக்கும்-எ-று.

(இ-ம.) சுபேச்சைவிசாரணை தனுமானசியாகிய விமமூன்றிற் சுக மவிடயரூபமாகத் தோன்றுதலி னவை சாக்கிரமெனவும சாத்துவா



பத்தியிற்சகநினைவுருவாகத் தோற்றுதலி னதுசொர்ப்பனமெனவும் ச முசத்தியிற்சகத்தோற்றமையின் சுழுத்தியெனவும் பதார்த்தபாவனை யிற் சகஞ்சின்மாத்திரமாகத் தோற்றுதலின் துரியமெனவும் துரியத்தி ற்காண்பதுங் காணப்படுவதுஞ் சத்தாமாத்திரமாக விளங்குதலின் அ துதுரியாதீதமெனவுங் கூறினதாம் அநுபவிக்கப் பூமிகளேழாவத்தை யானதெனக்கொள்க. (௱௫௨)

(அ-கை) இவ்வேழாம்பூமியைத் துரியமென்பதற்கநுபவங்கூறல்.

துரியநிலந்தனிற்றுரியாதீதமெனின்மயக்கமென்றுசுருதிமேலோர [illegible] ரிய
தொருவிதேகமுத்தியதீதமென்பாரதுகணக்கிலாறும்பூமி [illegible]மருவுசு
ழுத்தியிற்காட்சி சுழுத்தியென்பாரென்பது நீமனதிற்கொள்வாய்
பெருமைதருஞானபூமியின் விகற்பமின்னமுண்டுபேசக்கேளாய்.

(இ-ள்) துரிய நிலந்தனில் - துரியபூமியை துரியாதீதமெனில் - துரி யாதீதமென்றால் மயக்கமென்று - மயக்கம்வருமென்று சுருதிமேலோ ர-வேதாந்தமுணர்ந்தமகான்கள் அரிதொருவிதேகமுத்தி-யெட்டுதற்க ரிய ஒப்பற்ற விதேகவல்யத்தை அதீதமென்பார் - துரியாதீத மென் று சொல்லுவார்கள் அதுகணக்கில் - அந்த கணக்கிற்கு ஆறும்பூமி - ஆறாவதுபூமியானபதார்த்தபாவனை மருவுசுழுத்தியில்-பொருந்தாநின் றசுழுத்தியை காட்சிசுழுத்தியென்பார்-காணுமறிவாகிய சுழுத்தியெ ன்று சொல்லுவார்கள் என்பது - என்றதை நீமனதிற்கொள்வாய் - நீம னதில்வைப்பாய் பெருமைதரும் - மாட்சிமையைக்கொடுக்கின்ற ஞா னபூமியின்-ஞானபூமிகளின் விகற்பம் - பேதங்கள் இன்னமுண்டு - இ ன்னமிருக்கின்றது பேசக்கேளாய்-அதைச்சொல்லக்கேளாய-எ-று.

(இ-ம்) இவ்வேழாம்பூமியைத் துரியமெனவுந் துரியாதீத மெனவுங் கூறினைய முண்டாமெனக் கருதியதனைச்சிவன்முத்தியின்றிறமான து ரியமெனவும் - இது நீங்கியவிதேக முத்தியைத்துரியாதீத மெனவுங் கூ றுவார் அங்ஙனங்கூறுமிடத்தைந்தாம் பூமியாகியசுழுத்தியிற் சந்தேகந் தோன்றுமற் றூன்றேன்றி நிற்றல் துரியமாதலின் துரியமென்னும் ஆ றும்பூமியைக்காட்சிசுழுத்தியென்று கூறினுரென்பதாம். (௱௫௩)

(அ-கை) ஞானபூமியடைந்தசிவன் முத்தர்களினவசரநாமங்கூறல்.

மூன்னிலங்களேறியமூவருமப்பியாசிகளாமுத்தரல்லர்
பின்னிலங்கள்வரன்வரியான்வரிட்டனெனுஞ் சிவன்முத்தர்பேதமாகுஞ்
சொன்னநடுப்பூமிவந்தஞானிகளேபிரமவித்தாந்தூயமுத்த
ரின்னமுமப்பூமிகளின்பெருமைதனைநீயறியயான்சொல்வேனே.

(இ-ள்) மூன்னிலங்களேறிய - முதற்கணுள்ள மூன்றுபூமியிலேறி வந்த - மூவரும் - மூன்று பேர்களும் அப்பியாசிகளாம் - சாதகர்களா ம்-முத்தரல்லர் - சீவன்முத்தர்களல்லர் பின்னிலங்கள் - இறுதியிலு

ள்ளமூன்றுபூமிகளிலேந்தாம்பூமியிலேறியவன், வான் - பிரமவானெனவும் (ஆரும்பூமியிலேறியவன்) வரியான்-பிரமவரியானெனவும் ஏழாம்பூமியிலேறினவன்) வரிட்டனெனும்-பிரமவரிட்டனெனவும், சீவன்முத்தர்பேதமாகும்-சீவன்முத்தர்களின்பேதங்களாம், சொன்ன இப்போதுசொல்லிய பூமிகளின் நடுப்பூமிவந்த மத்தியாகியநாலாம்பூமியிலேறிய ஞானிகள் ஞானவான்கள் பிரமவித்தாம்-பிரமவித்தென்னும் அயமுத்தர் மேலானசீவன் முத்தர்களாம் இன்னமும்-மேலும், அப்பூமிகளின்பெருமைதனை அந்தஞான பூமிகளின் பெருமையை நீயறிய - உனக்குத் தெரியும்பொருட்டு யான்சொல்வேன் - நானுரைப்பேன்-எ-று.

(இ-ம்) மூன்மூன்று பூமியையடைந்தவரப்பியாசிகளெனவு மற்ற நான்குபூமியையடைந்தவர் சீவன்முத்தர்களெனவுங்கூறினதாம்.

(அ-கை) ஞானபூமிகளின் மூன்மூன்றி னப்பியாசத்தால் வரும்பயனுமதின் முதற்பூமியினருமையுங்கூறல்.

நாலாம்புமியின் வருமுன் மூன்று பூமியு மடைந்து நடந்துமாண்டோர். மேலானபதமடைந்துபிறந்து மெள்ளமெள்ளவந்து வீடுசேர்வார். மாலானபவத்தில்வீழார் முதற்பூமிகிடைப்பதுவே வருத்தமைந்தா. காலானமுதற் பூமிகைவந்தான்முத்தியுங்கைவந்தாமே.

(இ-ள்) நாலாம்புமியின்-நன்காம்புமியில் வருமுன் - வருவதற்குமுன்னம் மூன்று புமியு மடைந்து - மூன்று பூமியையுஞ்சேர்ந்து நடந்து அவற்றை யனுஷ்டித்து வரும்போது மாண்டோர் - மரித்தவர்கள் மேலானபதமடைந்து - உயர்ந்தபதவியைப்பெற்று பிறந்து - பூமியிற் சனித்து மெள்ளமெள்ளவந்து - கொஞ்சகொஞ்சமாகவேமி வீடுசேர்வார்-முத்தியையடைவார்கள் மாலானபவத்தில் விழார் - இச்சாரூபமானசனனத்தில்வீழார் முதற்புமிகிடைப்பதுவே - முதற்புமியான சுபேச்சையுண்டாவதே வருத்தம் - பிரயாசமாம் மைந்தா - மகனே காலானமுதற்பூமி ஆதியானமுதற்பூமி-கைவந்தால் - கைவருமானல் முத்தியுட்மோட்சமும் கைவந்ததாம-கைவசமானதாம்-எ-று.

(இ-ம்) வெளிப்படை. (௱௫௫)

(அ-கை) அப்பியாசபூமியை யடைந்தவனெவ்விதத்திலு மனுபவியாவனென்பதுகருதியவன ருபவிபேயெனக்கூறுதல்.

இப்புவியிலிஞ்ஞானபூமியொன்றிலிரண்டிலடைந்திருந்தாராலுமப்புருடர்மிலேச்சராகிலுமுத்தர்குருபாதத்தாணைமெய்யே
தப்புரையென்றவர்கெடுவார்நடுவானமறைதீனீசங்கிபாதே
செப்புமொழிவழிதிடமாயகம்பிரமமென்றிருந்துதெளிந்திடாயே.

(இ-ள்) இப்புவியில் - இவ்வுலகத்தின்கண் இஞ்ஞானபுமி - இந்த ஞான புமிகளேழில் ஒன்றில் - சுபேச்சையிலாவது - இரண்டில் - விசாரணையிலாவது அடைந்திருந்தா ராளுல் - சேர்ந்திருப்பா ராயின்



அப்புருடர் - அந்தப்புருடர்கள் மிலேச்சராகிலும் - மிலேச்சர்களானலும் குருபாதத்தாணை-தேசிகர்திருவடியாணை முத்தா-சீவன்முத்தராவரென்பது மெய்யே - சத்தியமே தப்புரையென்றவர் - இசைப்பொய்வசனமென்றவர்கள் கெடுவார் - பவத்திலழிவார்கள் நடுவானமறைகளை-நடு நிலைமையான வேத வாக்கியங்களை நீ சங்கியாதே - குதர்க்க மாச்சங்கையண்ணுதே செப்புமொழிவழி - போதிக்கின்ற வுபதேசமார்க்கத்தில் திடமாய்-ஸ்திரமாகச்சென்று அகம்பிரமமென்று - கூடஸ்தனே பிரமமென்று இருந்துதெளிந்திடாய் - சகசசமாதியிலிருந்துதெளிவாய் எ-று.

(இ-ம்) இவ்வப்பியாசபூமியை யவசியமடையும் பொருட்டவைகளின் பெருமையையு மவைகளாற் பெறும் பயனையுங்கூறினதாம்.

(அ-கை) முத்தியையடைதற்கு வன்னுச்சிரமபேதம் வேண்டுவதின்றென்பதுதோன்ற விப்பூமிகளின்முடிவான துரியாதீதந் துறவறத்தார்கன்றி யில்லறத்தார்க்கு வாராவென்னுமையத்தைநீக்கவேண்டுமெனவினுதல்.

பொல்லாதமிலேச்சருக்கும் விதேகமுத்திதருஞானபூமியென்றுநெல்லாகிமுளைக்குமெனைத்தண்டுலமாக்கியகுருவேநீர்சொன்னீரோ
இல்லாளுங்குடும்பம்விட்டுச்சந்நியாசம்புகுந்தேகாங்கியானேரல்லாமன்முத்திபெருரென்று சிலர்சொலுமயக்கமகற்றுவீரோ.

(இ-ள்) பொல்லாதமிலேச்சருக்கும் - கொடியரானமிலேச்சர்களுக்கும் விதேகமுத்திதரும் - விதேக கைவல்லியத்தைக் கொடுப்பது ஞானபூமியென்று - ஞானபூமியாமென்று நீர்சொன்னீர் - தேவரீாருளிச்செய்தீர் நெல்லாகி-நெல்வித்தைப்போல முளைகளுமெனை - சனித்துக்கொண்டிருக்குமடியேனை தண்டுலம் - அரிசியைப்போல ஆக்கியகுருவேசனியாமறசெய்தவாசிரியரே இல்லாளும் குடும்பம்விட்டு - மனைவிமுதலியகுடும்பத்தைதுறந்து சந்நியாசமபுகுந்து - துறவைப்பெற்று ஏகாங்கியானேரல்லாமல் - தனித்தவர்களேயன்றி முத்திபெருரென்று-மற்றவில்லறத்தார் - மோட்சமடையமாட்டார்களென்று சிலர்சொலுமயக்கம்-சிலர்சொல்லுகின்றமயக்கத்தை அகற்றுவீர்-நீக்குவீர்-எ-று.

(இ-ம்) வெளிப்படை (௱௫௬)

(அ-கை) நால்வகைத்துறவினுமமுபவற்றின்காரணமுங்கூறல்.

செட்டார்புகழ்மகனேநீசங்கித்தங்கைநன்றுந்தெரியக்கேளாய்
கட்டழிபுதீதுறவுநாலவையாகுமவைகளுக்கங்காகும்பேர்கள்
பட்டதுயர்கெடுங்குமுசகம்பகூதகம்ஹம்சம்பரமஹம்சம்
விட்டகலுந்துறவுக்குவிராகங்காரணமன்றிவேறுமன்றே.

(இ-ள்) செட்டார்புகழ்மகனே - சர்ச்சனர்துதிக்கின்ற மைந்தா நீசங்கித்தசங்கை - நீவினவினவினுவலது நன்று-நன்றும் தெரியக்கேளாய்

தெரியக்கூறுதுங்கேளாய் நட்டழியுந்துறவுபந்தமுறிகின்றசங்கியாசமான து நால்வகையாகும் நான்குவிதமாய அவைகளுக்கு - அந்நான்குக்கும்-அங்காகும்பேர்கள்-அவ்விடத்தாகுநாமங்கள் பட்டதுயாகெடும் - உண்டானதுன்பாசிக்கின்ற குடீசகம - குடீசகசங்கியாசமெனவும் பகூதகம் - பகூதகசங்கியாசமெனறும் அம்சம் - அம்சசங்கியாச மெனவும பரமஹம்சம்-பரமாம்ச சங்கியாசமெனவும் விட்டாலும் - பந்தத்தைவிட்டுநீங்கும்-துறவுக்கு இச்சங்கியாசங்களுக்கு விராகங்காரணமன்றி-நிராசைகாரணமேயல்லாமல் வேடமன்று-வேடங்காரணமன்றும்-எ-று.

(இ-ம்) வெளிப்படை

(௱௫௮)

(அ-கை) துறவின்காரணமான விராகமூன்றினு மிவைகளி னிலக்கணங்கூறல்.

(௱௫௮)

மந்தமுந்தீவிரமுந்தீவிரதாமுமெனமூன்றுவகைவிராகம்
வெந்துயரம்வரும்பொழுது குடும்பத்தைவெறுத்துவரும்விராகமந்த
மிந்தவுடலளவுமனை தனம்வேண்டாவெனவிட தீவிரமென்பாராக
ளந்தணர் நூன்மித்தையெனவிடலதுந்தீவிரதாமாமறிந்திடாயே

(இ-ள்) விராகம்-விராகமானதுமந்தமும் மந்தவிகாரமும் - தீவிரமும் தீவிரவிராகமும் தீவிரதாமும்-தீவிரதாவிராகமும் எனமூன்றுவகை - என்றுவின்றுவிதமாம் அவைகளின்-மவந்துயாம்வரும்பொழுந்து வெவ்வியதுன்பம்வரும்போது - குடும்பத்தை-சம்சாரத்தை வெறுத்துவரும் விராகம் - வெறுக்காநின்றவிராகமானது மந்தம் - மந்தவிகாரமாம் இந்தவுடலளவும் - இத்தேகாந்தபரியந்தம் மனை-மனைவியும் தனம் - திரவியமுதலியவைகளும் வேண்டாமெனவிடல் - வேண்டாமென்றுதுறத்தல் தீவிரனென்பார்கள்-தீவிசவிராகமென்றுசொல்லுவார்கள் அந்தணர் - வேதியர்க்குரிய நூல்-கன்மகாண்டங்களை மித்தையெனவிடலது - கற்பிதமென்றுதுறத்தலானது தீவிரதாமாம - தீவிரதாவிராகமாகும் அறிந்திடாய்-இவற்றைதெரிந்துக்கொள்வாய்-எ-று.

(இ-ம்) வெளிப்படை.

(௱௫௯)

(அ-கை) மந்தவிகாரம்பயனின்றென்னுந் தீவிரவிராகசங்கியாசமிரண்டின்றன்மையிஃதென்னுங்கூறல்.

பாவிமந்தவிராகத்திற்சங்கியாசங்களொன்றும்பலித்திடாதே
தீவிரத்திற்குடீசகமும்பகூதகமுமென்றிரண்டுதிறங்களுண்டாந்
தாவிடைந்திடத்திடமிலாதவர்க்குக்குடீசகமுந்தீகங்களெங்கு
மேவிநடந்திடத்திடமுள்ளவற்குபகூதகமெனவிதித்தார்மேலோர்

(இ-ள்) பாவித்தான - மந்தவிராகத்தில் மந்தவிகாரத்தில் - சங்கியாசங்கள் - துறவானவைகள் ஒன்றும்பலித்திடாது - ஒன்றுஞ்சித்தியாது தீவரத்தில் - தீவிரவிராகத்தில் குடீசகமும் - குடீசக சங்கியாச



மும் பகூதகமென்று - பகூதசங்கியாசமுமென இரண்டுதிறங்களுண்டாம்)இரண்டுவிதங்களுளவாம் தாவிடைந்திடத்திடமிலாதவர்க்கு - எட்டி நடக்கப்பலமிலாதவர்களுக்கு குடீசகமும - குடீசக சங்கியாசமும் சகங்களெங்குமேவி-உலகி லெவ்விடத்து மடைந்து நடந்திடத்திடமுள்ளவர்க்கு - நடக்கப் பலமுள்ளவர்களுக்கு பகூதகமுமென - பகூதகசங்கியாசமுமுரியதென்று - மேலோர்-சான்றோர்கள் விதித்தார்-நியமித்தார்கள்-எ-று.

(இ-ம்) குடீசகபகூதகசங்கியாசங்களினிலக்கணங்கூறியதாம். (௱௬௰)

(அ-கை) தீவிரதாவிராகசங்கியாசங்களிரண்டின்பயன்கூறல்.

இருவகை தீவிரதாத்து மம்சனென்றும் பரமாம்சனென்றுஞ் சொல்வார்- வருமம்சனுக்குமுத்திசத்தி யலோகத்தன்றி வீரதென்பார்- பரமாம்சனுக்குமுத்திவிவ்வுலகின் ஞானத்தாற்பலிக்குமென்பார்- திமருவும்பரமாம் சன்றுனுமிருவகையாகுஞ்செப்பக்கேளாய்.

(இ-ள்) தீவிரதாத்தும்-தீவிரதசசங்கியாசிக்கும் அம்சனென்றும் - அம்சசங்கியாசியெனவும் பரமாம்சனென்றும் - பரமாம்சசங்கியாசி யெனவும் இருவகை-இரண்டுவிதமாக சொல்லுவார்-சாதுக்களுரைப்பார்கள் வரும் அம்சனுக்கு-வாராநின்றவம்சசங்கியாசிக்கு முத்தி - மோட்சமானது சத்தியலோகத்தன்றி - அயனுலகத்திற்கிடைப்பதன்றி வாராதென்பார்-இம்மையிற் கிடையாதென்று சொல்லுவார்கள் பரமாம்சனுக்கு - பரமாம்ச சங்கியாசிக்கு முத்தி - மோட்சமானது இவ்வுலகின் - இவ்வுலகத்தின் கண் ஞானத்தாற்பலிக்கு மென்பார் - ஞானத்திற் கிடைக்குமென்று சொல்லுவார்கள் திமருவும்-ஸ்திரம்பொருந்திய பரமாம்சனுமம்ச-பரமாம்சங்கியாசியும்-இருவகையாகும் - இரண்டுவிதமாம் செப்பக்கேளாய்-இதைச்சொல்லுதுங்கேளாய்-எ-று.

(இ-ம்) அம்சபரமாம்சசங்கியாசிகளின்பயன்கூறினதாம்.

(அ-கை) பரமாம்ச சங்கியாசிக ளப்பியாசியு மனுபவியுமென விருவகையாவரெனல்.

சிஞ்ஞாசு ஞானவானென்றிரண்டு பேர்களவரிற் சிஞ்ஞாசு மெய்ஞ்ஞானபூமியின் மூன்மூன்றுபூமியுண்டாக்கும்விவேகி யானேன்சுஞ்ஞானவானென்போன் சீவன்முத்தி யடைந்திருக்குந் தூயமேலோ னஞ்ஞானமகலுமத்தச்சிஞ்ஞாசுமிருவகையாமதுவுங்கேளாய்.

(இ-ள்) சிஞ்ஞாசு - சிஞ்ஞாசுவெனவும் சுஞ்ஞானவானென்று - சுஞ்ஞானவானெனவும் இரண்டுபேர்கள் - இருவர்களாம அவரில் - அவ்விருவர்களில் சிஞ்ஞாசு - சிஞ்ஞாசென்பவர் மெய்ஞ்ஞான பூமியின் ஞானபூமியேழில் - மூன்மூன்றுபூமியுள் - முந்தினமூன்றுபூமிகளில்-நடக்கும் - செல்லுகின்ற விவேகியானேன் - விவேகமுள்ளவனுவன் - சுஞ்ஞானவானென்போன் - சுஞ்ஞானவா னென்பவன் -

சீவன்முத்தியடைந்திருக்கும்-சீவன்முத்தியைப்பெற்றிருக்கின்ற தூயமேலோன் - பரிசுத்தமானமகானும் அஞ்ஞானமகலும் - அறிவின்மை நீங்கும் அந்தச்சிஞ்ஞாசுவிருவகையாம் - அச்சிஞ்ஞாசுவிரண்டுவிதமாம் அதுவுங்கேளாய்-அதுவுங்கேள்-எ-று.

(இ-ம்) பரமாம்சத்தின்கூறான சிஞ்ஞாசு சிஞ்ஞான்வானென்று மிரண்டுசங்கிராசிகளி னிலக்கணங்கூறியதாம், (௱௬௨)

(அ-கை) சிஞ்ஞாசென்பவ னில்லறத்திலேனுந் துறவறத்திலேனுமிருந்து முத்தியையடைவனெனல்.

பந்தமனை துறந்துசிலர் திதிகளாயிருந்தடைவர்பரமஞான
மந்தணர்மன்னவர்வணிகர் சூத்திராயிருந்துசிலரடைவர்ஞான
மிந்தவகைசாத்திரத்துமுலகத்துநடப்பதுங்கண்டிருந்துமைந்தா
சிந்தனையின்மயக்கமென்ன சுருதியுத்தியனுபவத்தாற்றெளிந்திடாயே.

(இ-ள்) சிலர்-சிலாகள் பந்தமனை துறந்து - பந்தமானவில்வாழ்க்கையும்விட்டு அதிதிகளாயிருந்து-துறவிகளாயிருந்து பரமஞானம் - பிரமஞானத்தை அடைவார்-பெறுவார்கள் சிலர்-சிலாகள் அந்தணர் - பிராமணாாகவும் மன்னவர்-க்ஷத்திரியாாகவும் வணிகர்-வசியாாகவும் சூத்திராயிருந்து சூத்திராாகவுமிருந்து ஞானம்-பிரமஞானத்தை அடைவர்-அடைவார்கள் இந்தவகை-இவ்வகையை சாத்திரத்தும் - ஆகமப்பிரமாணத்திலும் உலகத்துநடப்பதும் - உலகத்தினப்பாகியாகிய பிரத்தியட்சப் பிரமாணத்திலும் கண்டிருந்தும்-பார்த்திருந்தும் மைந்தா - மகனே-சிந்தனையின் மயக்கமென்ன மனதிற்சந்தேகமேன் சுருதியுத்தி யனுபவத்தால்-சுருதியுத்தியனுபவமென்னு மூன்றினாலும்- தெளிந்திடாய்-தெளிவாய்-எ-று.

(இ-ம்) முத்தியையடைதற்கு விராகத்தால்வருஞ் சாந்தியே காரணமன்றியில்லறந்துறவறமென்னுமிரண்டுமல்லவெனக்கூறினதாம் ()

(அ-கை) மேற்கூறு மென்றவாறே முற்கூறிய சர்வார்த்தங்களுமடங்கிய வேதங்களின் முடிவான வித்தியானந்தமாகக் கூறுவான்றொடங்கி யிச்செய்யுளிற் பிரமமேகூடஸ்தனெனக்கூறுகின்றார்.

பிறந்ததுண்டானேலன்றே பிறகுசாவதுதானுண்டாம்
பிறந்தேயில்லையென்னும் பிரமமாதுவுநானே
பிறந்ததுநானன்றாகிற் பிரமமென்றந்தநானே
பிறந்ததுமிறந்ததற்றும் பிரமமாநானேநானே.

(இ-ள்) பிறந்ததுண்டானாலன்றோ - சனித்ததுளதாயினன்றோ - பிறகுசாவது - தானுண்டாம் - பின்மரித்தலுளதாம்-பிறந்ததேயில்லையென்னும் - சனித்தேயின்றென்னும் - பிரமமாவதுவும் - பிரமமென்பதுவும் - நானே - நானேயாம் பிறந்ததுநானன்றாகில் - சனித்ததுநானல்லனாயின் - பிரமமென்றந்த நானே - பிரமமென்று சொல்லப்பட்டவந்தநானே பிறந்ததுமிறந்ததந்த உற்பத்தியும் லயமில்லாத பிரமமானநானே நானேபிரமமாகிய நானேநான்-எ-று. (௱௬௪)

(ப-ம்) சாமவேதமகாவாக்கியப்படி யதுநீயானாயென்பார் பிரம்மா நானேயென்றார் பிரமமென்பததுவேறானு மானசுகரூ நானென்பது நீயென்னும் வித்தையும் ஆமென்பதானாயென்னு மைக்கியமுமாமெனக் கொள்க.

(அ-கை) கூடஸ்தனே பிரமமெனக்கூறுகின்றார்.

நானென்றபிரமமான நானேநானறியேனென்றாற்
றானென்பதேதுபின்னை நம்முடபுந்தியென்னிற்
றானதுமயக்கந்தன்னிற் சாகுமேசாவாதாகி
னானெனநிறைந்திருந்த ஞானமாநானேநானே.

(இ-ள்) நானென்றபிரமமான-யானென்றுசொல்லும் பிரமமாகிய நானே-யானே நானறியேனென்றால்-யான்காணகிலேனென்னில் நானென்பதேது-யானென்பதியாது பின்னை-பின்பு நம்முடபுந்தியென்னில்-நமதுபுத்தியென்று சொல்லின் அது-அப்புத்தியும் மயக்கந்தன்னிற்சாகுமே-சுழுத்திமயக்கத்திலிருக்குமே சாவாதாகில்-அங்ஙனமிறவாதிருக்குமாயின் நானே-யானே நானெனநிறைந்திருந்த-நானென்று பூரணமாக விளங்கிய ஞானமாம்-மெய்ஞ்ஞானமாம்-எ-று.

(ப-ம்) இருக்குவேதமகாவாக்கியப்படி ஞானமேபிரமமென்பார - நானென்ற பிரமமென்றார நானென்பது ஞானமாகியவித்தையெனவும் பிரமமென்பதானந்தமெனவுங்கொள்க. (௱௬௫)

(அ-கை) வித்தியானந்தத்திறொருமைகூறல்.

நிறைந்தவாறெந்தவாறு நிலைதெரிந்திலனென்றாயேல்
லறிந்தாஞ்சுழுத்திதன்னி லானந்தமதுவேயாகுங்
குறைந்ததுக்கானந்தந்தான் குவலயந்தன்னிலில்லை
நிறைந்ததேவிந்தவாத்மா நிதானமிவ்வழிவுதானே.

(இ-ள்) நிறைந்தவாறு - யான்பரிபூரணமானவிதம் எவ்வாறு - எவ்வண்ணம் நிலைதெரிந்திலன் - நிச்சயந்தெரிகிலன் என்றாயேல்-என்பாயானால் அறிந்தாஞ்சுழுத்திதன்னில்-நனவிற்சுழுத்தியின்கணுள்ள ஆனந்தம்-நிரதிசயானந்தமானது அதுவேயாகும் - அப்பூரணமேயாம்-குறைந்ததுக்கானந்தந்தான் - ஏகதேசமான்சுகதுக்கங்கள் குவலயந்தன்னிலில்லை-உலகத்தின்கணில்லையாம இந்தவான்மா-இவ்வாத்மாவே நிறைந்தது-பூரணமானது இவவழிவுதான -இச்சைதன்னியமே நிதானம் - நிதானமாம எ-று.

(ப-ம்) யசுர்வேதமகாவாக்கியப்படி அகம்பிரமாஸ்மியென்பார் நிறைந்ததேயிந்தவாத்மாநிதானமிவ்வழிவிதானேயெனக்கூறினார்.

நிறைந்ததென்பது பிரமமென்று மானந்தமும் ஆத்மாவென்பதகமென்னும் வித்தையுநிதான மில்வழியென்பஸ்மி யென்று மைக்கியமுமாமெனக்கொள்க.

(அ-கை) வித்தியானந்தவொருமையானசுவானுபூதியேதானெனல்.

மனத்தினலெண்ணித்தானே வந்திவ்வுலகமாகு
நினைத்திடிலனேகலோக நிற்பதவ்வழியிலன்றோ
லனைத்தையுங்கடந்தபாலு மந்தமற்றவிலன்றோ ~~தாமென~~
றெனைத்தனிவிசாரித்திட்டா லேகமாய்நிறைந்தேனனே.

(இ-ள்) மனத்தினலெண்ணி-மனோசங்கற்பத்தினல் வந்ததிவ்வுலகமாகும்-இவ்வுலகமுதித்தாம் நினைத்திடில்-கருதுமிடத்து அநேக லோகநிற்பது-அனந்தவுலகமிருப்பது அவ்வழியிலன்றோ - அந்தஞானத்திலன்றோ அனைத்தையுங்கடந்து-யாவையுந்தாண்டி அப்பாலும்-மேலும் அந்தமற்ற-முடிவிறந்த அறிவிதாமென்று-ஞானமிதுவாமென்று எனை-என்னை தனிவிசாரித்திட்டால்- தனிமையாகவிசாரணைசெய்தால் நானேயானே ஏகமாய்நிறைந்தோன் -பூரணமாகநிறைந்தவனும்-எ-று.

(ப-ம்) அதர்வணவேதமகாவாக்கியப்படி அயமாத்மா பிரமமென்பார் ஏகமாய் நிறைந்தோனனேயென்றார் அற்றவென்பது - அற்றெனத்திரிந்துநின்றது ஏகமென்பது பிரமமென்றுநித்தியானந்தமும் நிறைந்ததென்ப தாத்மாவென்னும் வித்தையும் நானென்பது இவ்வித்தியானந்தத்தினைக் கியத்திலுதித்த சுவானுபூதியாகிய வயமென்னுந் தானுமாமெனக்கொள்க.

(இ-ச-ச-ம்) நான்குவேதங்களின் முடிவாயுள்ள மகா வாக்கியார்த்தஜென்னியமான வித்தியானந்த வைக்கியஸ்வருபமானநிரதிசயானந்தசாட்சாத்காரமே தானெனக்கூறியதாம் (௱௬௭)

(அ-கை) முற்கூடிய கற்பிதங்களனைத்தையும் விருத்தியுளடக்கியவவிருத்தியை நீக்கிற் சுவானுபவமுதயமாமெனக்கூறல்,

அந்தவாறிருந்துகொண்டே யானந்தமனுபவிக்க
வெந்தவாறிருந்துகொண்டா லெனக்கிது தெரியுமென்னி
லிந்தமூன்றவத்தைதம்மு ளெழுந்திடும்விருத்திநீக்கி
லந்தவாறிருந்துநீயு மானந்தமடையலாமே.

(இ-ள்) அந்தவாறிருந்துகொண்டு - அவ்வாறுபூரணமாக விருந்துகொண்டே ஆனந்தமனுபவிக்க - பூரணானந்தத்தையனுபவிக்க - எந்தவாறிருந்து கொண்டால் - எவ்வண்ணமிருந்தால் எனக்கிது தெரியுமென்னில் - எனக்கிவ்வனுபவந் தரிசனமாமென்பாயாயின் இந்தமூன்றவத்தை தம்முள் இம்மூன்றவத்தைக்குள் எழுந்திடும் விருத்திநீக்கில்-உதிக்கின்றவிருத்தியைத்தள்ளில் அந்தவாறிருந்து-அவ்வாறு



பரிபூரணஞானமாயிருந்து நீயுமானந்தமடையலாம் - நிரதிசயானந்தத்தையடையலாம்-எ-று.

(இ-ம்) வெளிப்படை (௱௬௮)

(அ-கை) விருத்திநீக்குதற்கு மூவகையுபாயங் கூறுவான்றொடங்கியிச்செய்யுளி லனுபவ வுபாயங்கூறுகின்றார்

வாதனைசத்தினலே வருகிறவிருத்தியெல்லா
மேதினலடக்கலாகு மென்றுதான்விசாரஞ்செய்யின்
போதமாமிராசன்றனைப் புந்தியைப்புலன்களெல்லாந்
தாதராயிருக்கப்பெற்றாற் சகலமுமடங்குந்தானே.

(இ-ள்) வாதனைசத்தினலே-வாதனைவசத்தால்வருகிறவிருத்தியெல்லாம-வருகின்றவிருத்திகளெல்லாவற்றையும் ஏதினலடக்கலாகுமென்று-யாதினலொடுக்கலாமென்று- விசாரஞ்செய்யின் - விசாரிக்கின் போதமாமிராசன்றனைய் - தான் ஞானவாசனய் புந்தியைப் புலன்களெல்லாம் - புத்திமுதலிய விடயங்களனைத்தும் தாதராயிருக்கப்பெற்றல் - தாசராகவிருக்கபபெறின் - சகலமுமடங்கும் - அனைத்துமொடுங்கும் -எ-று.

(இ-ம்) தானகியநித்தியானந்தபோத மேஸ்புரணமுதலிய யாவினும் விளங்கின் விருத்திசணிங்குமென்பதாம். (௱௬௯)

(அ-கை) ஏனையவப்பியாசவுபாயங்களிரண்டையுங்கூறல்.

விருத்தி ~~களடக்கவின்னம்~~ யகடாகும்னம் விரோதமாம்யோகத்தாலே
துருத்திபோலூதமூச்சைச் சுகமுடனடக்கினிற்கும்
கருத்ததற்கில்லையென்னிற் காரணசரீரமாகிப்
பெருத்தவோரவித்தைதன்னைப் பிடுங்கிடிலடங்குந்தானே.

(இ-ள்) விருத்திக ளடக்க - விருத்திகளானவை யடக்க இன்னம் மேலும் விரோதமான-விரோதமான யோகத்தால்-யோகத்தினல் துருத்திபோலூதமூச்சை-துருத்தியைப்போல வூதாநின்றவாசத்தை சுகமுடனடக்கின் - இன்பத்தோடுமொடுக்கின் நிற்கும் - அடங்கும் கருத்ததற்கில்லையென்னின் - அதற்குமனமின்றாயின் காரணசரீரமாகிப் பெருத்த-காரணதேகமாகத்தடித்த ஓரவித்தைதன்னை -ஒப்பற்ற வித்தையை பிடுங்கிடில்-பெயர்க்கின் அடங்கும்-ஒடுங்கும்-எ-று.

(இ-ம்) பிராணபந்தனவுபாயத்தைச்செவ்வணமாகக்கூறியவித்தை நீக்கவுபாயத்தை முக்கியமாகக்கூறினரென்பதாம். (௱௭௰)

(அ-கை) அவித்தையைக் களையுமுபாயமியாதெனவினதலுக் குத்தரங்கூறல்.

காரணசரீரந்தன்னைக் களைவதெவ்வாறென்றேதில்
லாரணம்பொய்சொல்லாதே யதன்பொருளகத்திலுன்னிப்
பூரணமாகுமென்மேற் புவனங்கடோற்றுமென்று
தாரணைவந்ததாகிற் றரித்திடும்வித்தையெங்கே.

(இ-ள்) காரணசரீரந்தன்னை - காரணதேகத்தை களைவது - கெடுப்பது எவ்வாறென்றேதில் - எவ்விதமென்றுகேட்கில் ஆரணம் - வேதமானது பொய் சொல்லாதே - நிச்சயத்தைச் சொல்லு மாதலால் அதன்பொருள்-அதனருத்தத்தை அகத்திலுன்னி - உளத்திற்சிந்தித்து பூரணமாகுமெனமேல் - பரிபூரணமாகியவென்னிடத்தில் புவனங்கடோற்றுமென்று ஆரோபமாசச்சகங்கடோற்றுமென்று தாரணைவந்ததாகில்-உறுதிவந்தானல் அவித்தை - அவித்தையானது எங்கேதரித்திடும் எவ்விடத்திலிருக்கும்-எ-று.

(இ-ம்) வேதநிச்சயப்படி குருவாக்கியத்தாற் சர்வம்பிரமமயமென்னிமனுபவமுண்டாயின் வித்தைநசிக்கு மென்பதாம். (௩௭௧)

(அ-கை) சர்வம் பிரமமய மென்னுஞானமுதித்தற் கனுபவங்கூறல்

அப்படியிருக்கச்சித்த மலைதலால்விகாரத்தி
லெப்படிக்கூடுமென்னி லென்னைவிட்டொன்றுமில்லை
யிப்படிகண்டவெல்லா மென்பயமென்கனாற்போற்
கற்பிதமென்றுதானே காண்கின்றசித்துநானே.

(இ-ள்) விகாரத்தி - விகாரங்களில் சித்தம் - மனமானது அலைதலால் சுழல்வதனால் - அப்படியிருக்க - அங்ஙனநிற்க எப்படி கூடுமென்னில் - எங்ஙனங்கூடுமென்றால் - என்னைவிட்டொன்றுமில்லை என்னைத்தவிரவேறொருவஸ்துமில்லை இப்படிகண்டவெல்லாம் - இவ்விதமாகக்கண்டதிரிசியங்களெனைத்தும் என்கனாப்போல்-யென்றுசொப்பனத்தைப்போல கற்பிதமென்று-பொய்யென்று காண்கின்ற - பார்க்கின்றமென்பயம்-எனதுருவமான-சித்துநானே-சைதன்னியமேநான்-எ-று.

(இ-ம்) கற்பிதமாகக்காணப்பட்ட திரிசியங்களனைத்துந் தனது சிற்பிரகாசமாக விளங்குகிறதென்று மனுபவதிஷ்டியால் யாவுந்தன்மயமாக விளங்குமெனல். (௩௭௨)

(அ-கை) இச்சித்தேயானந்தவடிவமாமென்பதாம்.

சித்துநானிறைந்தோனென்று திடமறவாதிருந்தா
லெத்தனையெண்ணினாலு மேதுசெய்தாலுமென்ன
நித்திரையுணர்ந்தபின்பு நிற்கின்றகனவைப்போல
வத்தனையும்பொய்தானே யானந்தவடிவுநானே.

(இ-ள்) நான் - யான் சித்து - சைதன்னியமாக நிறைந்தோனென்ற - பூரணமானவனென்னும் திடமறவாதிருந்தால் - திடபிரஞ்ஞை



யோடுகூடியிந்தால் எத்தனையெண்ணினாலும் - எவ்வளவு சங்கற்பித்தாலும் ஏதுசெய்தாலும் - எக்கிரியைசெய்தாலும் என்ன - அதனாற்குற்றமென்ன நித்திரையுணர்ந்தபின்பு -நித்திரைதெளிந்தபின்பு நிற்கின்றகனவைப்போல - நிற்குஞ்சொற்பனம்போல் அத்தனையும் பொய்தான் - அவ்வளவுமித்தையாம் நானே-யானே ஆனந்தவடிவு ஆனந்தஸ்வரூபமாம்-எ-று.

(இ-ம்) தானே சித்தென்னுமனுபவ முதிக்கில் யாவுமித்தையாய்த் தானானந்தவடிவனாவனென்பதாம். (௩௭௩)

(அ-கை) இவ்வனுபவமுதிப்பதற்கேதுவானவுறுதிகூறல்.

நானெனவுடலைத்தானே நம்பினேனநேகசென்ம
மீனாய்ப்பெரியோனாகி யிருந்ததையெலாமிப்போது
கானலில்வெள்ளம்போலக்கண்டுசற்குருவினாலே
நானெனவென்னைத்தானே நம்பியீடேறினேனே.

(இ-ள்) அநேகசென்மம்-அநந்தசநநங்களில்-உடலைத்தான் - தேகத்தை நானெனநம்பினேன்-யானென்று நம்பினேன் ஈனாய் - இழிந்தவனாகவும் பெரியோனாகி உயர்ந்தவனாகவும் இருந்ததையெலாம் - இருந்தவைகளனைத்தையும் இப்போது - இச்சமயத்தில் கானலில்வெள்ளம்போல-கானற்சலத்தைப்போல சற்குருவினாலே ஆசிரியருபதேசத்தினால் கண்டு-பார்த்து என்னைத்தானே - எனதுபிரம வடிவத்தையே நானெனநம்பி-யானென்றுநம்பி ஈடேறினேன்-ஈடேறினேன்-எ-று.

(இ-ம்) குருகிருபையினாற்றேகநானென்னு நம்பிக்கையை விடுத்துச் சித்தேநானென்னு நம்பிக்கையுண்டானாற் சின்மாத்திரமனமுத்தியைப் பெறுவனென்பதாம். (௩௭௪)

(அ-கை) குருகிருபையை வியந்துமகிழ்தல்

என்னபுண்ணியமோசெய்தே னேதுபாக்கியமோகாணேன
னன்னிலந்தனிலெழுந்த நாரணன்கிருபையாலே
தன்னியனானேனுத்த ரியத்தைவீசுகின்றேன்
றன்னியனின்னுநானே தாண்டவமாடுகின்றேன்.

(இ-ள்) என்ன புண்ணியமோ செய்தேன - என்ன தருமஞ் செய்தேனோ ஏதுபாக்கியமே - யாதுபாக்கியம் பெற்றேனோ காணேன் - தெரிகிலேன் நன்னிலந்தனில் - நன்னிலமென்னுநகரத்தில் எழுந்த - மானிடனாகவவதரித்த நாரணன் - நாராயணனென்னு மெனதாசிரியனது கிருபையால்-கருணையால் தன்னியனானேன்-இருதார்த்தனான நான் - யான் உத்தரீயத்தைவீசுகிறேன்-அங்கவஸ்திரத்தையாகாயத்திலெறிந்து-வினை

யாடுகின்றேன் தன்னியநானேன்-இருதாத்தனையானே இன்னும்-மேலும் தாண்டவமாடுகின்றேன்-நடனஞ்செய்கின்றேன்-எ-று.

(அ-கை) தன்னனுபூதிவிளக்கத்துக்குத்தக்க நாமந்தனக்குத்தரித்த மாதாபிதாவைப்புகழ்தல்.

தத்துவஞானம்வந்த சந்தோஷவதிசயத்தா
னித்தமாடுவென்காணென்ற நிலைமுன்னமேயறிந்த
சத்தியமதனலன்றோ தாண்டவாவென்றழைத்தார்
அத்தனைமகிமையுள்ளோ ரன்னையும்பிதாவுந்தாமே.

(இ-ள்) தத்துவம்ஞானம்வந்த-அத்துவிதஞானமுதித்த சந்தோஷவதிசயத்தால் பெருவகையானவற்புதத்தினால நித்தமாடுவென்காணென்ற எப்போதுமானந்த நடனஞ் செய்வ னென்னும் நிலை - நிலையை முன்னமேயறிந்த சத்தியமதனல் முன்பே தெரிந்தவுண்மையினால் அன்றோ அல்லவா தாண்டவாவென்றழைத்தார் தாண்டவராயனென்னுநாமந்தரித்துக்கூப்பிட்டார்-அன்னையும்பிதாவும்-மாதாபிதாக்கள் அத்தனைமகிமையுள்ளோர்-அவ்வளவுமகிமையையுள்ளவர்கள்-எ-று.

(அ-கை) நிரதிசயானந்தவனுபூதியினோர்மைகூறல்.

வந்தவோரிவ்வானந்த மகிழ்ந்ததாரோடேசொல்வேன்
சிந்தையிலெழுந்துபொங்கிச் சகமெலாநிறைந்துதேங்கி
யந்தமில்லாததாயிற் றப்படிகுருவேதாந்த
மந்திரமருளுமீசன் மலரடிவணங்கினேனே.

(இ-ள்) வந்த - அறிவிலுதித்த ஓர்-ஒப்பற்ற இவ்வானந்தம் - இந்நிரதிசயானந்தத்திலும் - மகிழ்ந்தது - மகிழ்ச்சியடைந்ததை ஆரோடேசொல்வேன்-ஆரோடுரைப்பேன் சிந்தையிலெழுந்து உளத்திலூறி-பொங்கிமேட்டு சகமெலாநிறைந்து தேங்கி-உலகங்களனைத்தும் பூரணமாய் அந்தமில்லாததாயிற்று-முடிவில்லாததாயினது- அப்படி அவ்வண்ணம் வேதாந்தமந்திரம் - வேதமுடிவான மகாவாக்கியார்த்த ரகசியத்தை அருளுமீசன்-அருளாநின்றவிறைவனாகிய குருதேசிகரது மலரடிவணங்கினேன் கமலமலர்போன்ற திருவடிகளைத்தொழுதேன்-எ-று.

(இ-ங)க-ம்) சிந்தனைத்துதித்த வானந்தமதனைக்கரைந்தச் சகசிவ பாமானவனைத்துந்தானுகிய சிதானந்தவடிவமாகவே விளங்குகின்ற தென் வித்தியானந்தத்தை முடித்தாம்.

(அ-கை) இந்நூல்வினையும்பயன்கூறல்.

வித்தியானந்தமிந்த விதமெனவிளம்பினேமே
பத்தியாயிந்நூலைப் பார்த்தனுபவித்தபேர்க



ணித்தியநிருமலிட்டை நிலைதனையறிந்துசிவன்
முத்தியையடைந்திருந்து முனீசுவராகுவாரே.

(இ-ள்) வித்தியானந்தம் - ஞானனந்தமான் இந்தவித மென - இவ்வகையா மென்று விளம்பினோம் - சொல்லினோம் பத்தியாய் - அன்பாக இந்நூலைப்பார்த்து - இஞ்ஞான சாஸ்திரார்த்தத்தை யுணர்ந்து அனுபவித்த பேர்கள் - அப்பொருளை யறியும்படி யனுபவிமானபோகள் நித்தியநிருநிஷ்டை - நிலைதனை யறிந்து - நித்தியமான ஞானநிஷ்டையின் - நிலைமையைத்தெரிந்து சிவன் - முத்தியையடைந்திருந்து-சிவனது முத்திப்பதத்தைப் பெற்றிருந்து முனீஸ்வராகுவர்-முனிசிரோஷ்டராவாரகள்-எ-று,

(இ-ம்) வெளிப்படை.

(அ-கை) குருவாக்கியப்படி இந்நூல் சம்பூரணமாயிற்றெனல்-

ஆரணப்பொருளாம்வித்தை யானந்தம்விளங்கவேதுங்
காரணக்குறைவில்லாமற் கைவல்லியநவநீதத்தைப்
பூரணமாக்கவேண்டிப் பூர்வமாநன்னிலத்தில்
நாரணகுருநமக்குநவின்றனர்கனவில்வந்தே.

(இ-ள்) ஆரணப் பொருளாம் - வேதமுடிவிலுள்ள மகா வாக்கியார்த்தமான வித்தையானந்தம் விளங்க ஞானனந்தம் விளக்கும் பொருட்டு கைவல்லிய நவநீதத்தை - கைவல்யநவநீதமென்னு ஞான சாஸ்திரத்தை ஏதும் - எவ்வளவும் காரணம் - எடுத்துக் காட்டுங்காரணங்களில் குறைவில்லாமல் - குறைவுபடாமல் பூரணமாக்க வேண்டி - நிறைவாக செய்யவிரும்பி பூர்வமாநன்னிலத்தில் - பழைமையாகிற நன்னில மென்னுந் தலத்தில் மானிடவடிவமாக வெழுந்தருளிய நாரண குரு நாராயண தேசிகரானவர் நமக்கு - எமக்கு - கனவில் வந்து சொப்பனத்திற் றோன்றி நவின்றனர் - அருளிச் செய்தார் எ-று.

(இ-ம்) வெளிப்படை (௱௭௧)

(அ-கை) இந்நூலாசாரியர் சிறப்புக்கூறல்

அண்ணறன்னருளினலேயகம்புறமின்றியொன்றா
யெண்ணமிலிலக்கியார்த்தத்தின்பொருளதுநானென்ன
நண்ணினசரீரமாதி நாதத்தின்பாதியென்றே
கண்ணதாயனைத்துங்காணக்காட்டினன்றண்டவேசன்.

(அ-ள்) அண்ணறன்னருளினல் தேசிகரதுகிருபையினால் அகம்புறமின்று-உள்வெளியென்பதின்றி ஒன்றாய் ஏகமாம் எண்ணமில் - எண்ணுதற்கரிய இலக்கியார்த்தத்தின்பொருள் - இலக்கியார்த்தத்தின்பொருட்பலி அதுநானென்னவெப்படியாகியவதுமே கூடஸ்தனுகிய நானே

ன் னும்படி எண்ணரினசரீராதி - பொருந்தியதேகமுதலியவற்றை நாதத்திறுபாதியென்று - மாயாவுபாதியென்றுகளைந்து - அனைத்தும்-சகலத்தையும் கண்ணதாய் - ஞானுகாரமாய் காண - தரிசிக்கும்படி தாண்டவேசன் - தாண்டவேசனென்னு மிந்நூலாசிரியர் காட்டினன் - தரிசிப்பித்தான்-எ-று.

(இ-ம்) வெளிப்படை

(அ-கை) இம்மாபிஞலனுபவ முதிக்குமவர்களே சுவானு பாவிகளெனல்.

ஆன்றபதமாமூன்றற்கு மதுரீயானுமெனும்பொருளிற்
சான்றதுரியாதீதமெனுந் தடையற்றிலங்கொண்ணைதன்னிய
மூன்றிவுணர்ந்தோர்விகற்பமயக் கொழித்துத்தடையுமே டறுத்துத்
தோன்றித்தானேதானுவார்துவங்கு மவர்க்கேசுவானுபவம்.

(இ-ள்) ஆன்ற-மாட்சிமையான பதமாமூன்றற்கும் - மகாவாக்கியத்தினறத்தெ மசியென்னு மூன்றுபதத்திற்கும் அது - அதுவென்னும் பிரமமும் நீ - நீயென்றுங்கூடல் தவும் ஆனும் - இல்விரண்டினை கயமும் யெனும்பொருளின் - என்கின்றவர்த்தத்தில் சான்ற - நிறைந்த துரியாதீதமெனும் - துரியாதீதமென்கின்ற தடையற்றிலங்கும் - மறைப்பின்றி யபரோட்சமாக விளங்குகின்ற ஒண்மைதன்னிய - சுயந்தேசுள்ளமெய்யுணர்வை - உணர்ந்தியுணர்ந்தோர் - ஸ்திரமாகத்தெரிந்தவர்மன் விகற்பமயக்கொழித்து பேதமான பிரமையைநீக்கி - தடையுமேடறுத்து -அறிவின்மையுங்கொடுத்து தோன்றி-சதோதயமாம் தானேதானுவர்-தன்மயமாவர் அவர்க்கே-அல்லவழினூர்க்கே சுவானுபவம்-சுவானுபவமானது துலங்கும்-பிரகாசிக்கும்.

(இ-ம்) வெளிப்படை. (ஈஅக)

(அ-கை) இந்நூலாசிரியர் தன்னுசிரியரைப்புகழ்தல்.

என்னுமகாவாக்கியநான்கு மிசைக்கும்வித்யானந்தமிழு
சொன்னநாராயணன்பாதந்தொழுது துதித்தோர்களன்றே
ரின்னமாணுக்கன் குருநாற் சந்தேகந்தீர்த்திபேதத்தே
துன்னிநிறைந்துநின்றோர்களே முத்தராகுவரோ.

(இ-ள்) என்னும்-சுவானுபவமென்கின்ற மகாவாக்கியநான்கும்-நான்குவேதத்தின் முடிவான நான்கு மகா வாக்கியங்களும் இசைக்கும்-சொல்லும் வித்தியானந்தமிழு ஞானானந்தமிழுவாம் சொன்ன - இதனையருளிய - நாராயணன்பாதம் - நாராயணனென்னு மாசிரிய ரூபமபாதங்களை தொழுது - வணங்கி-துதித்தோர் - துதிசெய்தவர்-துகளற்றோர் - களங்கமற்றவராவர் - இன்ன இத்தன்மையான



மாணுக்கன்- சிஷனானவன்- குருவால்ஆசிரியரால்- சேந்தகந்தீர்த்திட்டு ஜபரீங்கிய- யதத்தேதுன்னி- அப்பதத்தைப்படைந்து-நின்றந்துநின்றோர்கள்- பூரணமாயிருந்தவர்கள்- தாம்முத்தராகுவர்- பரிசுத்தமானசிவன்முத்தராவார்கள்-எ-று.

(இ-ம்) நான்குவேதங்களின் முடிவுள்ள நான்குமகாவாக்கியார்த்தமு மொன்றான வித்தியானந்தமேயனுபவமெனவு மஃதையடைந்தவர்களே சீவன்முத்தரெனவுங் கூறினதாம்

(அ-கை) இந்நூல்செய்தவிதங்கூறல்.

தத்துவவிளக்கந்தானுஞ் சந்தேகந்தெளிதலானு
மொத்திருள்விடாதமாய வுள்ளிருளிரியவோங்குஞ்
சித்தகாமொளிவிளங்கச் செய்துபின்விருத்திபேத
புத்தியால்வருமையத்தைப் புரையறத்தெளிவித்தாண்டான்

(இ-ள்) தத்துவவிளக்கத்தாலும்- தத்துவவிளக்கமென்னும் படலத்திலும்- சந்தேகந்தெளிதலானும்- சந்தேகந்தெளிதலென்னும் படலத்திலும்- ஒத்து-பொருந்தச்செய்து இருள்விடாத-அந்தகாரநீங்காத மாயா- மாயையென்னும், உள்ளிருளிரிய- அகத்திருள்கெட்டொங்குஞ்சுதந்தரமொளியுமன்ற ஞானபிரகாசத்தை விளங்கச்செய்து - கிழுமபடிசெய்து- பின்-பின்பு- விருத்திபேதப்புத்தியால்- விருத்திவிகற்பமானவறிவினால் - வருமையத்தை-வாராநின்றசந்தேகத்தை - புரையறத்தெளிவித்து- குற்றமறத்தெளிவித்து-ஆண்டான்- இரட்சித்தாரிந்நூலாசிரியர்-எ-று (ஈஅஅ)

(அ-கை) இந்நூலாசிரியனைத்துதித்தல்

ஆண்டதேசிகனையானந்தன்பாதம்
பூண்டுமூவாரோபத்தாற் பொய்மயக்காய்வாந்தத்தை
மாண்டநல்லபவாதத்தான் மாய்த்தருநேணைக்கத்தென்றுங்
காண்டிடவைத்தளித்த காரணாபோற்றிபோற்றி

(இ-ள்) ஆண்ட- தடுத்தாண்ட- தேசிகனையன்- குருசாமியையியநாரணன்- நாராயணனென்னும்- அனந்தன்- முடிவற்றவனது- பாதம்பூண்டு- திருவடியைச்சிரசிற்றரித்து- மூவாரோபத்தால்-பிரேஸ்வரசகத்தென்னு மூன்றுவிதகற்பனையால்- பொய்ப்பயக்காய்வந்தத்தை- இல்லாமயக்கமாயுண்டானதை- மாண்ட- மாட்சிமையான - நல்லபவாதத்தால் நன்மையானவபவாதயுத்தியினால்- மாய்த்து-கெடுத்து - அருணேக்கத்து- கிருபாநோக்கத்தினால்- என்றுங்காண்டிட- எப்போதுமபரோக்ஷஞானமகத்தரிசிக்க-வைத்து- திருவடிசூட்டி- அளித்த- இரட்சித்த-காரணு போற்றிபோற்றி-சாரணனேசரணஞ்சரணம்-எ-று.

## ௱௬௰ சந்தேகந்தெளிதற்படலம்.

(அ-கை) இந்நூலைப்புகழ்தல்.

குலவுசற்குருவின்பாதக் குளிர்புனற்றலைமேற்கொண்டா
லுலகினிற்றீர்த்தமெல்லா முற்றபேறடைவார்போல
நலமெய்யாகியகைவல்ய நவநீதநூலைக்கற்றால்
பலகலைஞாநூல்கள் படித்தஞானிகளாய்வாழ்வார்

(இ-ள்) குலவு- விளங்காநின்ற- சற்குருவின்- தேசிகரின்பாதக்குளிர்புனல்- அகத்தையும்புறத்தையுங்குளிரசெய்கின்றபாததீர்த்தத்தைதலைமேற்கொண்டால்- சிரத்தின்மேற்றரிக்கின்- உலகினில்-சகத்திலுள்ள- தீர்த்தமெல்லாம்- புண்ணியதீர்த்தங்களனைத்தும்-உற்றபேர் - ஸ்நானஞ்செய்தபயனை- அடைவர்போல- பெறுவார்களைப்போல்- நலமெய்யாகிய- நன்மையு- முண்மையுமாகிய- கைவல்யநவநீதநூலை- கைவல்யநவநீதமென்னுஞானசாஸ்திரத்தை- கற்றால்- அப்பியாசித்தால்- பலகலை- அனந்தங்கல்விநூல்களின்சாரமான- ஞானநூல்கள்- ஆத்மஞானசாஸ்திரங்களை- படித்தஞானிகளாய்- அப்பியாசித்த ஞானவசன்களாக வாழ்வார்வாழ்வார்கள்-எ-று. (ஈஅ௫)

(இ-ரு-க-ம்) சுருதிகுருசுவானுபவங்களை நவநவமாகத்துதித்ததாம்

சந்தேகந்தெளிதற்படல முற்றிற்று.

---

ஆ படலம் - உ - க்கு - செய்யுள் (௨௯௬)

கைவல்லிய நவனீத

மூலமும் - உரையும்

முற்றிற்று.